


புதுமலர்ச்சி, புதுமலர்ச்சி என்று 'ஆடுவோமே,
பள்ளுப் பாடுவோமே,' ஆனந்தமாய் லைப்பாய் தேய்த்து நீராடுவோமே!
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய் சோப்!
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு ... 'எல்லாம் இன்பமயம்!'

**லைப்பாய்** இருக்குமிடம், அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!

L.33-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினுல் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.







எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.




மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

ECHO.G.4.TAM.

# நாட்டின் பாதுகாப்பிற்கு

உங்கள்

# சேமிப்பு தேவை

## புதிய பத்திரங்களில்

# முதலீடு செய்யுங்கள்

### 10 ஆண்டு
### டிபென்ஸ் டெபாஸிட் சர்டிபிகேட்டுகள்

இவை 1962, நவம்பர் 10ந் தேதியிலிருந்து எல்லா டிரெஷரிகள் உப-டிரெஷரிகள், ரிசர்வ் பாங்கின் காரியாலயங்கள், ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் கிளைகள் மற்றும் அதன் உப பாங்கு களில் கிடைக்கும்.

வரி இல்லாத 4½ சத விகித வட்டி ஆண்டுதோறும் அளிக்கப்படும்.

### 12 ஆண்டு
### நேஷனல் டிபென்ஸ் சர்டிபிகேட்டுகள்

சேமிப்புப் பாங்க் அலுவல் நடத்தும் எல்லா தபால் நிலையங் களிலும் 1962 நவம்பர் 15ந் தேதியிலிருந்து கிடைக்கும்.

சர்டிபிகேட் முதிர்வடைந்தவுடன் ஆண்டுக்கு 6¼ சத விகித சாதா ரண வட்டி அல்லது 4½ சத விகித கூட்டு வட்டி அளிக்கப்படும். வட்டிக்கு வருமான வரி கிடையாது.



## தேசீய சேமிப்பு நிறுவனம்

DA 62/533



# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

புகைபிடிக்கும் இங்கிதம்.

# புகைப்பதா? பொறுப்பதா?

எல்லா சமயங்களிலுமே புகைபிடிக்கும் சுதந்திரம் இருந்துவிடாது. உதாரணமாக சிக்காளி அறையிலே அவர் புகைபிடிப்பாரேயானால் உங்களுக்கும் தடையிராது. சம்பிரதாயச் சடங்குகளின்போது—அவை மதச் சடங்குகளாக இல்லாதுபோனாலும்—புகைபிடிப்பதைத் தவிர்ப்பதே நலம்.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம்—இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 843 TAM.

Grant' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்* | இதழ் 15

# சுப சூசகங்கள்

**வா**சகர்கள் கைக்குச் சென்ற இதழ் 'கல்கி' கிடைக்கும் முன்பே அதன் தலையங்கம் கூறியிருந்த யோசனையைப் பிரதமர் அவர்கள் செயலாக்கிவிட்டதைக் கண்டு நாடு முழுதும் உவகை கொண்டிருக்கிறது.

ஸ்ரீ வி. கே. கிருஷ்ணமேனன் அவர்களிடமிருந்து நேருஜி தாமே பாதுகாப்புப் பொறுப்பை எடுத்துக் கொண்டது பாராட்டிப் போற்றவேண்டிய நடவடிக்கையாகும். ராஜாஜி, கிருபளானி போன்ற பல பெருந் தலைவர்களின் நல்லுரைக்குச் செவி சாய்த்துப் பிரதமர் இந்த நற்காரியத்தைச் செய்தாரா; காங்கிரஸிலேயே கிருஷ்ணமேனன் அவர்களுக்கு எதிராக உருவாகியுள்ள கருத்து வேற்றுமையைச் சமாளிக்க இவ்வாறு செய்தாரா என நாம் நிச்சயமாகக் கூறமுடியாது. காரணம் எதுவாயினும் முடிவு நல்ல முறையில் அமைந்ததற்காக நாம் மகிழ்ச்சி கொள்ளலாம்.

நேருஜியைப் பொறுத்தமட்டில் ஸ்ரீ மேனன் அவர்களிடம் அவருக்கு நம்பிக்கை குன்றவில்லை என்பதாக அபிப்பிராயம் நிலவுகிறது. ஏனெனில் மேனன் அவர்களிடம் தற்போது ஆயுத உற்பத்திப் பொறுப்பு அளிக்கப்பட்டுள்ளது. பல தலைவர்கள் இதனையும் கண்டித்துள்ளனர். ஆனால் சீனாவை எதிர்க்க உடனடியாகத் தேவைப்படும் நவீன ஆயுதங்களை இப்போது உள்நாட்டில் உற்பத்தி செய்வதற்கில்லை. அதற்கு அவகாசம் இல்லை. வெளி நாடுகளிலிருந்துதான் அவை உடனே வரவேண்டும். இவற்றைப் பெறும் பொறுப்பைப் பிரதம மந்திரி அவர்களே ஏற்பார் என்று நம்பப்படுகிறது. எனவே, தாம் இதுகாறும் போற்றி வந்த மேனன் அவர்களை ஒரேயடியாகப் பாதுகாப்பு இலாகாவிலிருந்து அகற்றுவது தமது கௌரவத்துக்குக் குறைவு என்ற கருத்தின் மீதே நேரு அவர்கள் அவருக்குப் பெயரளவில் ஒரு புதுப்பதவி அளித்திருப்பதாகக் கொள்ளலாம்.

அமெரிக்காவும், பிரிட்டனும், பல காமன்வெல்த் நாடுகளும் நமக்கு ஆயுத உதவி செய்யத் தாராளமாக முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். யார் நண்பர், யார் விரோதி என்பதில் இதுவரையில் தவறாகவே மதிப்பீடு செய்து வந்த நமது வெளி-விவகார மந்திரியும், பிரதம மந்திரியுமான ஜவாஹர்லால்ஜி இப்போதேனும் விழிப்புற்று எதிர்காலத்துக்கு ஏற்றதொரு கொள்கையை வகுப்பார் என நம்புகிறோம். கம்யூனிஸ நாடுகள் நம்மைப் பரிபூரணமாகக் கைவிட்டதை ஒட்டி, எந்த வல்லரசுடனும் கூட்டுச் சேராத தடஸ்தக் கோட்பாட்டை அவர் தளர்த்த வேண்டும் என்று விரும்புகிறோம். வாயளவில் கூட்டு சேராக் கொள்கை பற்றி எவ்வளவோ பேசலாம். எனினும் ராஜாஜி கூறியிருப்பதுபோல், இன்று மேல் நாடுகள் விற்பனை செய்யும் ஆயுதங்களுக்கு என்றோ கிரயம் தருவதாகச் சொல்லி வாங்கிக் கொள்வதும், போர் உபகரணங்களுக்கு அவர்களையே நம்பியிருப்பதும்கூட உண்மையில் கூட்டுச் சேராமை ஆகாது. இதை உணர்ந்து, இந்த அசட்டுக் கொள்கையை மேலும் இளக்கி, ஆயுதங்களுக்காக நிதி தேடாமல் நட்பின்மீதே அவற்றை மேல் நாடுகளிடமிருந்து பெற வழி வகைகள் காண வேண்டியது அவசியமாகும்.

ஸ்ரீ கிருஷ்ணமேனனின் அதிகாரம் குறைந்திருப்பது, மேலை நாடுகளின் தருணம் உணர்ந்த சகாயம், இவற்றுடன் நமக்கு மகிழ்ச்சியூட்டும் இன்னொரு செய்தி கடந்த

சில நாட்களாகச் சீனர்களின் முன்னேற்றத்தை நமது வீரர்கள் பெருமளவுக்குத் தடை செய்திருப்பதாகும். 'தீரத்திலே படை வீரத்திலே' சிறந்த நம் அருமைப் படைவீரர்கள் புரிகிற சாகசச் செயல்கள் நம்முடைய தோள்களைப் பூரிக்கச் செய்கின்றன. சீனர்கள் தங்களுக்குச் சாதகமான நில அமைப்பு கொண்ட பகுதிகளில் நமது படைகளைப் போலப் பல மடங்கு வலிவு வாய்ந்த படைகளைக் கொண்டு தாக்கி ஆயிரக்கணக்கில் உயிர்களைப் பலி கொண்ட பின்னும், அயராது எதிர்த்து எதிரி முன்னேறாது நாட்டைப் பாதுகாக்கும் நமது வீர சிங்கங்களை வாழ்த்துகிறோம்.

நாடு முழுவதும் எதிரியை முறியடிப்பதில் ஏகமனதாக உள்ளது. இந்த ஐக்கிய உணர்ச்சியாலும், ராணுவத்தின் அஞ்சா நெஞ்சத்தாலும், நேச நாடுகள் பரிவுடன் அளிக்கும் ராணுவ தளவாட உதவியாலும், ஆண்டவன் திருவருளாலும், பாரதமாதாவின் திருமேனியில் சீனர்கள் இழைத்துள்ள புண்களை ஆற்றி நாம் பெருமை கொள்ளப் போவது நிச்சயம்.

# என்ன சேதி?

## பாதுகாப்பு நிதி

சீன ஆக்கிரமிப்பை எதிர்த்து மக்களின் உணர்ச்சி பொங்கி எழுந்துள்ளது. நமது மக்களின் தேசாபிமானத்தின் உன்னதத்தையே நாட்டில் பார்க்கிறோம். பொன்னும் பொருளும் தயங்காது கொடுக்க மக்கள் முன்வந்துள்ளனர். இது மகிழ்ச்சிக்குரியது. ஆனால் இந்த உற்சாகத்தையெல்லாம் சீரான முறையில் பயன்படுத்திக் கொண்டு எதிரியை விரட்டியடிப்பதில் முனைய வேண்டியது அவசியம். எவ்வித பலாத்காரமும் உபயோகப்படுத்தாமலும் உற்சாகம் சிறிதும் சிதறிப் போகாமலும் பார்த்துக் கொள்ளுவதுடன், நிலைமையைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் அக்கிரமக்காரர்களிடமிருந்தும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். யுத்தத்துக்கு நிதி திரட்டுவதில் பலர் முனைந்துள்ளனர். அதிகார பூர்வமான முறையில், அத்தாட்சி பெற்ற ஸ்தாபனங்களோ, மற்றவர்களோதான் நிதிவசூலில் ஈடுபட வேண்டும். வசூலிக்கப்படும் தொகைக்குச் சரிவரக் கணக்கு வைக்கப்பட்டு, சேர்க்கப்பட வேண்டிய இடத்தில் ஒப்படைக்கப்படும் என்ற நிச்சயம் மக்களுக்கு இருக்கும்படி செய்ய வேண்டும். கொடுப்பவர்கள், வாங்கிக் கொள்ளுபவர்கள் இருவருக்குமே இது நல்லது.

## பாகிஸ்தானின் குதர்க்கம்

இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி நிலைமையைச் சமாளிக்க அமெரிக்கா ஆயுத உதவி அளிப்பதைப் பாகிஸ்தான் விரும்பவில்லையாம். ஆயுத உதவி அளித்தால், பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே இப்போதுள்ள ஆயுத பல சம எடை பாகிஸ்தானுக்குப் பாதகமாக மாறிவிடுமாம். இந்தியாவின் ராணுவ பலம் உயர்ந்து விடுமாம். அப்படியாகாமல் தடுக்க, எந்த அளவுக்கு இந்தியாவுக்கு ஆயுதம் அளிக்கப்படுகிறதோ அந்த அளவுக்குப் பாகிஸ்தானுக்கும் மேற்கொண்டு உதவி அளித்து அதன் பலம் குன்றாமலிருக்கப் பார்த்துக் கொள்ள வேண்டுமாம். இது பாகிஸ்தானின் குதர்க்கம். இதில் இரண்டு முக்கியமான தவறுகள் இருக்கின்றன. பாகிஸ்தானுக்கு அமெரிக்கா அளித்துள்ள ராணுவ தளவாடங்கள் கம்யூனிஸத்தை எதிர்ப்பதற்காகவே தவிர, இந்தியாவை எதிர்ப்பதற்காகவோ, அல்லது இந்தியா-பாகிஸ்தான் ராணுவ பலத்தைச் சமமாக வைத்துக் கொள்ளுவதற்காகவோ கொடுக்கப்பட்டதல்ல. இந்தியாவுக்கு இப்போது அளிக்கப்படும் உதவி சீனாவின் ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்காகவே கொடுக்கப்படுகிறது. அதற்காகவேதான் உபயோகப்படும். எனவே பாகிஸ்தானுடைய அர்த்தமற்ற பேச்சுக்களை அமெரிக்கா புறக்கணித்து விட்டதில் வியப்பில்லை.

அதோடு நிற்காமல், காஷ்மீரப் பிரச்னை பற்றிய பிரசாரங்களை நிறுத்தி வைக்கவும், இந்தியாவின் மீதுள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்றும் ராஜதந்திர முறையில் மேல்நாட்டுத் தலைவர்கள் நண்பர்கள் என்ற நிலையில் பாகிஸ்தானுக்கு ஆலோசனையும் சொல்லியிருக்கிறார்கள். பாகிஸ்தான் இதற்கு மதிப்புக் கொடுத்து அதன்படி நடந்து கொண்டால் எல்லாருக்கும் நல்லது. பாகிஸ்தானுக்கும்கூட நல்லது.









## ராஜாஜிக்கு வரவேற்பு

'அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் அணு ஆயுத சோதனை எனும் தீமை ஒழியக் கூடும்' என்ற நம்பிக்கைச் செய்தியுடன், சென்ற அக்டோபர் 26-ந் தேதியன்று, அயல்நாடுகளுக்குச் சென்றிருந்த ராஜாஜி சென்னைக்குத் திரும்பினார்கள். 1, 2. பிரயாணத்தை இனிது முடித்துக் கொண்டு திரும்பிய தலைவரை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் பிரமுகர்கள் பலரும் பொது மக்களும் குதூகலமாக வரவேற்றனர். 3. விமான நிலையத்திலிருந்து நேரே 'கல்கி' காரியாலயத்துக்கு வந்த ராஜாஜிக்கு பிரம்மஸ்ரீ அனந்தராம தீட்சிதர் பூரண கும்பமளித்து வரவேற்றார். 4. கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம், அமெரிக்கக் கான்ஸல் ஜெனரல் சைமன்ஸ் ஆகியோருடன் ராஜாஜி. 5. கூடியிருப்பவர்களுக்கு ஆசிகூறி அமர்ந்திருக்கிறார் ராஜாஜி. 6. பத்திரிகை நிருபர்கள் கேள்விக்கு விடையளிக்கிறார்.





# மகா புருஷர்களின் சந்திப்பு

ஆத்மாநுபவம் என்ற நிதியத்தைப் பெற்ற பெருமக்கள் எந்த ஒரு சமயத்தைச் சார்ந்திருப்பினும், சமயங்களுக்கெல்லாம் அடிப்படையான சமரஸ உணர்வில் தோய்ந்த உலகப் பிரஜைகளாவர். இத்தகைய அநுபவம் கைகூடிய மகான்கள் சந்திக்க நேர்ந்தால் அவர்களிடையே எத்தகைய தூய அன்பு நிலவுமென்பதைச் சென்ற அக்டோபர் 19-ந் தேதி யன்று ரோமாபுரியில் போப் ஆண்டவருக்கும் ராஜாஜிக்குமிடையே நிகழ்ந்த சந்திப்பு விளக்குகிறது.

அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்கும் சென்று தாயகம் திரும்பும் வழியில் போப் அவர்களைத் தரிசித்து வந்தார் ராஜாஜி. வாடிகன் என்று கூறப்படும் போப் ஆண்டவரின் மகா சம்ஸ்தானத்தில் இந்தச் சந்திப்பு நிகழ்ந்தது. அப்போது நிகழ்ந்த உரையாடல்களை ஆங்கிலத்திலிருந்து இத்தாலிய மொழிக்கும், இத்தாலிய மொழியிலிருந்து ஆங்கிலத்துக்கும் பெயர்த்துப் பேருபகாரம் புரிந்தார் சென்னை லயோலாக் கல்லூரியின் முன்னாள் தலைவர் ஜெரோம் டி' ஸௌஸா பாதிரியார் அவர்கள்.

பிரம்மாண்டமான வாடிகன் பெருமாளிகையில் போப் ஆண்டவரின் புனித இருக்கைக்குச் சரியாகப் பத்து மணிக்கு ராஜாஜி அழைத்துச் செல்லப்பட்டார். போப் ஆண்டவர் தாமே நுழைவாயில் வரையில் முன்வந்து ராஜாஜியை வரவேற்றார். அவரை அறையின் மையத்திலுள்ள ஓர் ஆசனத்தில் அமரச் செய்தார். இருவருக்குமிடையே தமது மேஜை தடையாக இருக்கக் கூடாது என்பதில் அவர் காட்டிய அக்கறை விசேஷமானதாகும். ராஜாஜியின் பக்கத்தில் டாக்டர் சத்திய நாராயணனும், எதிர்ப்புறத்தில் பாதிரியார் டி'ஸௌஸா அவர்களும் அமர்ந்தனர்.

போப் ஆண்டவர் தாம் சம்பாஷணையைத் தொடங்கினார். மங்களூரில் பிஷப்பாக விருந்த அபுண்டியஸ் சுவாமி என்பவருக்கு போர்காமோவில் நிகழ்த்திய ஒரு புனித சம்ஸ்காரச் சடங்குக்குத் தமது பாலப் பருவத்தில் தாம் சென்றிருந்ததை நினைவுகூர்ந்து பேசினார் அவர். "அப்போது பிஷப் சுவாமி இந்தியாவையும், இந்தியர்களையும் குறித்துப் பேசியது என் மனத்தில் அழுத்தமாகப் பதிந்து அந்நாட்டைப் பற்றி ஒரு விசேஷமான கவனத்தை உண்டாக்கிற்று" என்று கூறினார் அவர். விருந்தாளிகளின் நாட்டைப் பற்றித் தமக்குள்ள பரிசயத்தைக் கூறி அவர்களுடன் பரிசயம் கொள்ள விழைந்தபாங்குதான் எவ்வளவு இனிமையானது!

ராஜாஜி சொன்னார்: "புனித பிதாவாகிய தங்களால் வரவேற்கப்படும் கௌரவத்தை எனக்கு அளித்ததற்காக நான் ஆழ்ந்த நன்றி கொண்டிருக்கிறேன். அமெரிக்காவுக்குப் பிரயாணம் செய்து விட்டு நான் திரும்பிக் கொண்டிருக்கிறேன். உலகத்தின் சூழலைக் கெடுத்துக் கோடிக்கணக்கான உயிரினங்களுக்குத் தீமை உண்டாக்கி வரும் அணு ஆயுத சோதனைகளை நிறுத்துமாறு கேட்டுக் கொள்ளவே அமெரிக்கா சென்றிருந்தேன். அணு ஆயுதங்களைப் பிரயோகிப்பதனால் நாகரிகங்கள் யாவும் அழிந்து விடும். உலகில் பல பெரும் பகுதிகளுக்கும் எண்ணிறந்த மக்களுக்கும் நாசம் ஏற்படும். இத்தகைய அணு ஆயுதங்களை அறவே ஒழிப்பதற்கு முதற்படி இந்த ஆயுதங்களைச் சோதனை செய்வதை நிறுத்துவதே எனக் கருதுகிறேன். சோதனை நிறுத்தத்துக்காக முயன்று வரும் நாங்கள் புனித பிதாவாகிய தாங்கள் அளிக்கும் ஆசியையும், ஊக்கத்தையும் நாடுகிறோம். திறந்தவெளியில் சோதனை வெடிப்பு நிகழ்த்தும் விஷயமாக அமெரிக்காவும் ருஷியாவும் ஒருவாறு ஒப்பப் போகும் தற்சமயம் இந்த முயற்சிக்கு அநுகூலமான காலமென எண்ணுகிறோம். பூமிக்கடியில் நிகழ்த்தும் சோதனைகள் விஷயத்தில் சிறிது இணக்கமின்மை காண்கிறது. இந்த இக்கட்டில் புனித பிதாவின் நல்வாக்கு மிகவும் பயன்படும்."

அணு ஆயுத பயங்கரங்களைப் பற்றி ராஜாஜி கூறியதை சமிக்ஞை மூலம் அழுத்தம் திருத்தமாக ஆமோதித்த போப் ஆண்டவர், "சத்தியம், சமாதானம் இவற்றை இலட்சிய வாசகமாகக் கொண்ட சந்நிதானம் உங்களுடையது போன்ற நன் முயற்சிகள் வெற்றி பெற வேணுமென்றே மனப்பூர்வமாக விரும்புகிறது. பல சந்தர்ப்பங்களில் சமாதான உணர்வை வலியுறுத்தி நான் பேசியுள்ளேன். எதிர்காலத்திலும் அவ்வாறே செய்வதற்கு வாய்ப்பான சந்தர்ப்பங்கள் கிடைக்கும்போது அவற்றை நான் நழுவவிடமாட்டேன். பிரார்த்தனை புரிவதும், தனது சிசுக் குழந்தைகளுடையவும், மக்கட் குலத்துடையவும் தாழ்மையான விண்ணப்பங்களை எல்லாம் வல்ல இறைவனுக்கு இடையறாது செலுத்துவதுமே போப்பின் பிரதானமான கடமையாகும். தொழுகையும், தொழுகைக் கிரமமும், ஜபமும் விசேஷப் பிரார்த்தனைக்கான சந்தர்ப்பங்களே யாகும். இயேசுநாதரின் வாழ்க்கையில் நிகழ்ந்த விந்தைகளைத் தியானிக்கும் சமயத்தில் அவரது சுபஜனன சம்பவத்தை ஸ்மரிக்கும்போது உலகெங்கணும் பிறந்துள்ள குழந்தைகளையெல்லாம் நான் எண்ணி, அவர்கள் எல்லாருக்காக



போப் ஆண்டவர் ராஜாஜிக்கு அளித்த பதக்கத்தின் ஒரு புறம்.

வும் பிரார்த்திக்கிறேன்'' என்று நெஞ்சு நெகிழக் கூறினார்.

''தங்களது இந்தப் பிரார்த்தனைக்கு எங்கள் நன்றி. அவை ஆண்டவனின் அருளைப் பெறும்'' என்று கூறிய ராஜாஜி தொடர்ந்தார்: ''எனினும் செயல் மூலமாக, திட்டவட்டமாக ஏதேனும் செய்யவேணும் என்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். போர்க் கருவிகளின் உற்பத்தியிலும் ஆயுதப் போட்டியிலும் முனைந்துள்ள நாடுகளில் பெரும்பாலானவை கிறிஸ்துவப் பெரு மக்கள் வாழ்வனவாகும். இந் நாடுகளின் ஆட்சியாளர்கள் புனித பிதாவாகிய தங்களிடம் ஆழ்ந்த மரியாதை வைத்திருக்கிறார்கள். எனவே தற்போது தாங்கள் ஒரு விசேஷ ஸ்ரீமுகம் வெளியிட்டால் சாதகமான விளைவுகள் உண்டாகும். இந்தக் கோரிக்கையை சந்நிதானத்திடம் தெரிவிக்கவே, காந்தி சமாதானக் கழகத்தின் சார்பில் தூதுசென்ற மூவரில் ஒருவரான நான், திரும்பும் வழியில் அவர்களுக்குப் பின்தங்கி இங்கு வந்திருக்கிறேன்.''



பதக்கத்தின் மறுபுறம்.

புனித போப் அவர்கள், ''உங்களது கோரிக்கையை என் மனத்தில் கொண்டு, தீர்க்கமாகச் சிந்திக்கிறேன். எனினும் உத்வேகத்துடன் ஒரு செய்தி விடுப்பதற்கு சந்நிதானம் தருந்த சமயத்தை எதிர்பார்க்கவேண்டும்'' என்று மொழிந்தார்.

மகாத்மாஜியின் இலட்சியங்களிலிருந்து ஆன்ம பலம் பெற்றுள்ள தூது கோஷ்டியைப் பற்றிக் குறிப்பிட்ட போப் ஆண்டவர், கிறிஸ்துவரல்லாத சமுதாயங்களின் ஆன்மிக இலட்சியங்களில் தமக்குள்ள ஈடுபாட்டைக்கூறி, அவற்றைப் பாராட்டினார். பூர்வாசிரமத்தில் தாம் சமய சரித்திரப் பேராசிரியராக இருந்தபோது அந்நிய நாகரிகங்களில் சிலவற்றைப் பற்றிப் படிக்கவும், புரிந்துகொள்ளவும் தமக்கு அவகாசம் இருந்ததாக அவர் தெரிவித்தார்.

விரைவில் நடவடிக்கை எடுப்பது பற்றி ராஜாஜி மீண்டும் தூண்டினார். அதைத் தாம் அவசியம் நினைவில் கொள்வதாக உறுதி கூறிய போப் அவர்கள், ''உலகிலுள்ள எல்லா பிஷப்புக்களும் ஒன்று கூடும் பேரவை ('இக்யூமெனிகல் கௌன்ஸில்') நமது சமாதானச் செய்தியை உலகெங்கும் வலிவுறப் பரப்ப ஓர் அவகாசம் அளிக்கும்'' எனக் கூறினார்.

டாக்டர் சத்தியநாராயணா, ராஜாஜி, போப் ஆண்டவர், பாதிரியார் ஜெரோம் டி'ஸௌஸா, போப்பின் காரியதரிசி ஆகியோர்.

உலக விவகாரங்களைக் கடந்த உத்தம ஞானிகள் உலகுக்காகத் தொண்டு புரிவதோடு உலக மாந்தரின் தனி வாழ்வு பற்றிக் கூட அன்புடன் விசாரிப்பதை நாம் காண்கிறோம். போப் அவர்களும் இவ்வாறே குடும்ப விஷயங்களைப் பற்றி மிகுந்த பரிவுடன் விசாரிக்கலானார். ராஜாஜிக்கு எண்பத்தி நாலு பிராயம் என்று அறிந்த போது, தமக்கு எண்பத்தியொரு வயது என்றும் எனவே தாம் ராஜாஜிக்கு 'ஜூனியர்' என்றும் கூறினார். "ஆனால் ஆன்ம ஞானத்திலும் ஞான அநுபவத்திலும் தங்களுக்கு நாங்கள் குழந்தைகள் அல்லவா?" என்று வினயமுற விடைபகர்ந்தார் ராஜாஜி.

உண்மையான உணர்ச்சிக்கே உரிய உருக்கமான குரலில் மிகவும் எளிமையுடன் போப் ஆண்டவர் கூறினார்: "எது நேர்ந்தாலும் நேரட்டும் என்ற மனோபாவத்துடன் பிரதிதினத்தையும் வரவேற்க வேண்டும்; எப்போது ஆண்டவன் நம்மை அழைத்துக் கொள்ளத் திரு உள்ளம் கொண்டாலும் அந்த அழைப்பை ஏற்க ஆயத்தமாக இருக்க வேண்டும் — இதுதான் மூப்பு அடையாமலிருப்பதன் இரகசியம்."

போப் அவர்கள் தொடர்ந்தார்: "பேரவை ஒரு மகத்தான, முக்கியமான நிகழ்ச்சி என்பதில் சந்தேகமில்லை. எனினும் அதுவும் ஆண்டவனின் செயலில் அடங்கியதுதான். தெள்ளிய நம்பிக்கையோடு ஆண்டவனின் கைகளிலேயே பேரவையை இயக்கும் பொறுப்பை ஒப்புவிக்கிறேன்."

"எங்களுடைய புனித சாஸ்திரங்களும் இந்தப் பற்றின்மையைத்தான் போதிக்கின்றன. ஆனால் சந்நிதானத்தைப் போல அந்தப் போதனையைக் கடைப்பிடிக்க எங்களுக்குச் சக்தியில்லை" என்றார் ராஜாஜி அடக்கத்துடன்.

ராஜாஜிக்கு எவ்வளவு குழந்தைகள், எவ்வளவு பேரன் — பேத்திமார், எவ்வளவு கொள்ளுப்பேரன் — கொள்ளுப் பேத்திமார் என்றெல்லாம் இன்முகத்துடன் கேட்டறிந்து கொண்டார் போப் ஆண்டவர். அது எவ்வளவு பெரிய குடும்பம் என்பதை அறிந்து ஆனந்தம் கொண்டார். புனித கிரிகரி பார்ப்பேரிகோ என்ற தமது அபிமான அர்ச்சிஷ்டரை நினைவு கொண்டு புன்முறுவலுடன் பேசலானார் போப் அவர்கள்: "எங்கள் ஊர்ப் பக்கம் வாழ்ந்த அர்ச்சிஷ்டர் அவர். தங்களைச் சுற்றிலும் குழந்தைகளைப் பிடித்தவாறு, சில குழந்தைகளைக் கையிலும் ஏந்தியவாறு அன்பர்கள் அவரை வணங்குவார்கள். அவரால் அவர்களுடன் நீண்ட நேரம் பேச முடியாது. எனவே ஆசி கூறி, "திடமாக இருங்கள்" என்று மட்டும் இருமுறை கூறிவிட்டுச் சென்று விடுவாராம். 'குழந்தை குட்டிகளைப் பற்றிச் சிந்தை கூடாது; ஆண்டவன் அவர்களைக் கவனித்துக் கொள்வான் என்ற திடபுத்தி வேண்டும்' என்பதே இதன் உட்கருத்து" என்றார் பூஜ்ய போப் அவர்கள்.

ராஜாஜியுடன் சென்றிருந்த டாக்டர் சத்தியநாராயணனுடன் லோகாபிராமமாகப் பேசிய போப் ஆண்டவர் அவரது மூன்று குமாரர்களும் டாக்டர்கள் என்றறிந்து வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டார். "நேற்று அர்ச்சிஷ்ட லூக்குக்குப் பூசனை நடைபெற்றது. அவரை 'அன்பு மிகுந்த மருத்துவர்' என்றே வர்ணித்திருக்கிறார் புனிதர்பால்" என்றார். எதில் தொடங்கினாலும் மகான்களுடைய வாழ்வின் நினைவுகளிலேயே அவற்றை முடிக்கிறார் போப் அவர்கள்.

சந்திப்பு முடிந்ததும் போப் அவர்கள் தாமே மணியை அடித்து சேம்பர்லினை (காரியஸ்தரை) வரவழைத்து வாடிகன் புகைப்படக் கலைஞரை இட்டு வருமாறு பணித்தார். மறு நிமிடமே புகழ்பெற்ற ஃபெலிசி அவர்கள் ஆஜராகி வண்ணப் படங்கள் எடுத்தார். (அவற்றிலொன்றினைத் தாங்கும் பேற்றினைத்தான் இவ்விதழ் அட்டை பெற்றுள்ளது.)

பிறகு, தமது உருவம் பொறித்த பதக்கங்களை வந்திருந்தோருக்கு வழங்கினார் போப் அவர்கள். அவற்றில் மிகப் பெரியதும், எழில் மிகுந்ததுமான பதக்கத்தை ராஜாஜிக்கு வழங்கினார். கைகுலுக்கியபின் ராஜாஜி மரியாதையுடன் வணங்கினார். போப் ஆண்டவரும் வணங்கினார். விருந்தினர் வெளியேறும் வரையில் புன்சிரிப்புடன் கைகளை அசைத்து வழி கூறினார்.

வாடிகனில் முப்பத்தைந்து நிமிஷங்கள் பேட்டி நடப்பது மிகவும் நீண்ட பேட்டியாக மதிக்கப்படுவதாகும். இந்தப் பேட்டியின் புண்ணிய நினைவுகள் நெஞ்சில் நிரம்ப ராஜாஜி புறப்பட்டார்.

அந்தப் பாவன எண்ணங்கள் நீங்காமல் சென்ற இதழ் 'ஸ்வராஜ்யா'வில் அவர் எழுதியிருப்பதைப் பாருங்கள்:

"இருபது நாட்களாக வாஷிங்டனிலும், நியூயார்க்கிலும், லண்டனிலும், முடிவுறாத பல விஷயங்களிலும், சிக்கல்களிலும் ஈடுபட்டிருந்தபின் சந்நிதானம் அவர்களின் அண்மையில் இருப்பதும், அவரது தயை மிகுந்த குரலையும், வார்த்தைகளையும் கேட்பதும் ஆறுதலாக இருந்தன. அன்பான ஒரு தந்தையைப் போலவே அவர் நடந்து கொண்டார். ஆண்டவனிடத்தில் அவருக்குள்ள கரைகாணாத பக்தியும், சரணாகத புத்தியும் புண்ணிய நதியாகப் பாய்ந்தன. அந்தப் புண்ணிய நதியில் மூழ்கி நான் விச்ராந்தி அடைந்தேன்."

இவ்வாறு கூறுகிறார் ராஜாஜி.

போப் ஆண்டவரும் ராஜாஜியால் மிகவும் ஈர்க்கப்பட்டிருப்பது சந்திப்பின்போதே வெளிப்பட்டது. தமது தள்ளாத தசையில் நீண்ட நெடுந்தூரம் பயணம் செய்த ராஜாஜியின் பணியை மெச்சி அவருக்காகத் தாம் தனிப்பட விசேஷப் பிரார்த்தனை செலுத்துவதாக வாக்களித்தார் போப் அவர்கள். டாக்டர் சத்தியநாராயணனிடமும் ராஜாஜியை நன்கு கவனித்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்.

போப்பின் ஆசீர்வாத பலத்தால் ராஜாஜி நீண்டகாலம் வாழ வேணும். இவ்வாறு நற்பணிகளுக்கும் மேன் மக்களுக்கும் இதய பூர்வமாக ஆசி கூறி, அருள்புரிய போப் ஆண்டவரும் பல்லாண்டு வாழவேண்டும்.

# இன்றைய போப் ஜான்

இன்று உலகம் முழுவதும் பரவியுள்ள மதம் ஒன்று உண்டு என்றால் அது ஏசுநாதர் ஸ்தாபித்த கிறிஸ்துவ மதம்தான். இந்த மதத்தில் ஒரு விந்தை என்னவென்றால், ஏசுநாதரையும் ஏசுநாதர் கொள்கைகளையும் பிடிக்காத மன்னர்கள் அந்நாட்களில் ரோமாபுரி மன்னர்கள். ஏசுநாதரின் அடியார்களை அன்றைய ரோமாபுரி மன்னர்கள் சிங்கத்துக்கு இரையாக அளித்துப் படுத்திய கொடுமை கொஞ்ச நஞ்சமல்ல! அந்த ரோமாபுரிதான் இன்று உலக (கத்தோலிக்க) கிறிஸ்துவ மக்கள் பக்தியோடு நோக்கும் புனித க்ஷேத்திரமாக விளங்குகிறது! அங்குதான் கத்தோலிக்க மக்களின் உலக குருவாய் விளங்கும் போப் ஆண்டவர் எழுந்தருளி அன்பர்களுக்கும் அடியார்களுக்கும் அருள்பாலித்து வருகிறார்!



தற்போது போப் ஆண்டவராக விளங்கும் இருபத்து மூன்றாவது ஜான் போப் இத்தாலி நாட்டில் ஒரு குக்கிராமத்தில் ஏழைக் குடியானவ குடும்பத்தில் மூத்த புதல்வராகப் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் பதின்மூன்று பேர்கள் என்றால் அது எவ்வளவு பெரிய குடும்பம் என்பதை ஊகித்துக்கொள்ளலாம். தந்தை, தன்னுடன் கழனியில் வேலை செய்ய மகன் வருவான் என்று எதிர்பார்த்தபோது, 'நான் ஆண்டவன் பணி செய்யப் போகிறேன்' என்று பதினோராவது வயதில் போப் ஜான் கூறினாராம்! அப்போது இவர் பெயர் அஞ்சிலோ ரோன்கல்லி!

அப்போதிலிருந்து கல்வியும், மதபோதனையும் பெற்று, கத்தோலிக்க மதத் துறையில் பலப்பல பதவிகளில் இருந்திருக்கிறார். முதல் மகாயுத்தத்தின் போது ராணுவ உடையுடுத்தி, மீசை வளர்த்து, ராணுவத்தில் வைத்தியத் துறையில் பணியாற்றியிருக்கிறார். பின்னர் துருக்கி, பல்கேரியா, கிரீஸ், பிரான்ஸ் முதலிய பல நாடுகளில் மதப் பணியாற்றியிருக்கிறார். இரண்டாவது உலக மகாயுத்தம் முடிந்தபின் பிரான்ஸ் குழப்பமான நிலையில் இருந்தபோது, போப்பின் தூதுவராக பாரிஸிலிருந்து திறம்படப் பணியாற்றி எல்லாருடைய பெருமதிப்பையும் பெற்றிருக்கிறார்.

லத்தீன், இத்தாலி, பிரஞ்சு, ஜெர்மனி, ருஷ்ய மொழி ஆகிய பல மொழிகளில் நல்ல தேர்ச்சி பெற்றவர். யாரையும் புண்படுத்தாத, இனிய பண்பாளர். நோகச் செய்யாத இனிய நகைச்சுவை மிக்கவர்.

பிரான்ஸிலிருந்த போது, பாரிஸின் மேயராக இருந்த டிகாலின் சகோதரர், ஜான் அவர்களை விருந்துக்கு அழைத்திருந்தார். அப்போது ஜானுக்கு முன்பு பதவியில் இருந்தவரை மேயர் பண்பின்றிப் பழித்துக் கூறினாராம். சிறிது நேரம் ஜான் பதில் சொல்லவில்லை. ஆயினும் அவர் நிலையில் பதில் சொல்லாமலும் இருக்க முடியாது. இந்தத் தர்மசங்கடமான நிலையில், "இதே சமயத்தில் இந்த பாரிஸ் நகரில் வேறோரிடத்தில் புத்தகக் கண்காட்சி நடைபெற்று வருகிறது. பிரான்ஸ் தேசத்தில் முதன் முதலில் பிரசுரிக்கப்பட்ட புத்தகம் பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த எங்கள் நாட்டைச் சேர்ந்த ஆசிரியர் ஒருவர் எழுதியது என்பதிலும், அவர் எழுதிய அந்தப் புத்தகம் நன்னடத்தையைப் பற்றியது என்பதிலும் மகிழ்ச்சியடைகிறேன்" என்றார்.

எவ்வளவு உயரிய பண்புடன் அவருடைய நாகரிகமின்மையைச் சுட்டிக்காட்டிவிட்டார்!

"பார்ப்பதற்காகக் கண்களைத் திறவுங்கள். சிந்திப்பதற்காகக் கண்களை மூடிக்கொள்ளுங்கள்!" என்றார் மற்றொரு சமயம்.

எளிமையும், பரிவும், நகைச்சுவையும் அறிவுக் கூர்மையும் படைத்த இவர் 1958ம் ஆண்டு அக்டோபர் மாதம் போப் ஆண்டவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதே ஆண்டு நவம்பர் 4ம் தேதி இவருக்கு முடிசூட்டு விழா நடந்தது.

இவருடைய தலைமையில் சமீபத்தில் இருபத்தோராவது அகில உலக கத்தோலிக்க குருமார்கள் மகாநாடு நடைபெற்றது! உலகின் பல பகுதிகளிலிருந்தும் 2600 பிஷப்கள் கூடி மத சம்பந்தமான பல தீர்மானங்களைச் செய்திருக்கிறார்கள்.

இவர் ராஜாஜியைச் சந்தித்து அளவளாவியதை முன் பக்கங்களில் பார்க்கலாம்.



# நேருஜியும் ஆட்சிமொழியும்

எல். கிருஷ்ணசாமி பாரதி, எம். ஏ., பி. எல்.

இந்திய நாட்டு மக்களின் சிந்தனையெல்லாம், வஞ்சகச் சீனர்களின் கொடிய படையெடுப்பிலேயே நாட்டம் கொண்டுள்ளது. எனவே, போர்க் காரியங்களுக்கே முதலிடமும் முழு இடமும் கொடுத்து, மற்ற விவகாரங்களை நெருக்கடி தீரும்வரை தள்ளிவைக்க வேண்டியதே கடமையும் முறைமையுமாகும்.

எனினும், யூனியன் ஆட்சிமொழி மசோதா நிகழ இருக்கும் மக்கள் சபைக் கூட்டத்தில் கொண்டு வரப் போவதாகச் செய்தி வந்ததால் அதனையும் சிறிது கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. இச் செய்தி சைனப் போருக்கு ஒன்றிரண்டு நாட்களுக்கு முன் வந்தது. எனவே இம்மசோதா, இப்பொழுது எடுக்கப்படுமா, தள்ளி வைக்கப்படுமா என்பது தெரியவில்லை. அதை அவசரமாக எடுத்து, மசோதாவில் உள்ளபடி நிறைவேற்ற முற்படுவது பெரிய தவறாகும் என்பதைச் சுட்டிக் காட்டவே இதனை எழுதலுற்றேன்.

ஆங்கில மொழி விஷயமாக, பிரதமர் நேரு அவர்கள் ஒரு உறுதிமொழி கொடுத்தார்: அது இதுதான்: ''இந்திய யூனியன் அரசுக்கு, ஆங்கில மொழி, இந்தி மொழியோடு கூடச் சேர்ந்த ஒரு இணை ஆட்சி மொழியாக, 1965க்குப் பின்னும் இந்தி பேசாத வட்டார மக்கள் விரும்பும் காலம் வரை தொடர்ந்து இருந்து வரும்.''

நேரு அவர்கள் அளித்த சந்தேகத்துக்கு இடமில்லாத இவ்வாக்குறுதியைப் பார்த்து நாம் மகிழ்ந்தோம்; வரவேற்றோம்.

இவ்வாக்குறுதியின் முக்கியமான உயிர் அம்சம் ''இந்தி பேசாத வட்டார மக்கள் விரும்பும் காலம் வரை'' என்பதேயாகும். எவ்வித காலவரம்பும் சட்டத்தில் குறிக்கப்படமாட்டாது. இதை ராஜாஜி இந்தி பேசாத வட்டார மக்களின் மொழி உரிமைச் சாஸனம் என்று பொருளுறக் கூறினார்கள்.

ஆனால் நடந்திருப்பதென்ன? மூன்று மாதங்களுக்கு முன் வரையப்பட்ட மசோதாவில் காலவரம்பு இல்லை; பிரதமர் அவர்கள் வாக்குறுதியை நிறைவேற்றும்வகையில் இருந்தது. ஆனால் இந்தி மோகிகளின் சூழ்ச்சியின் பயனாக, வாக்குறுதியை மீறும் வகையில் மறுபடி இப்பொழுது மசோதா திருத்தப்பட்டுள்ளது. அது வருமாறு:

'பத்து ஆண்டுகள் கழித்து, அதாவது, 1975-ல் முப்பது பார்லிமெண்டு உறுப்பினர்கள் கொண்ட ஒரு கமிட்டி ஆங்கில மொழி நீடிப்பைப் பற்றிப் பரிசீலித்து முடிவு செய்யும்.' இந்தக் கமிட்டியில் இந்தி வட்டார மக்களே பெரும்பான்மையினராக இருப்பார்கள். அவர்கள் என்ன முடிவு செய்வார்கள் என்பதற்கு யாரிடமும் போய்ச் சோதிடம் கேட்க வேண்டுமா, என்ன? இம்மசோதாவில், 'பத்து ஆண்டு கழித்துப் பரிசீலனை' என்பது பத்து ஆண்டு காலம் வரம்பை மறைமுகமாகப் புகுத்தும் கீழ்த்தரமான தந்திரம் — ஏமாற்றும் வித்தை — என்பதைப் பள்ளிச் சிறுவனும் அறிந்து கொள்ளுவானே!

ஆகவே இந்தி மோகிகளின் கால வரம்பு போடும் சூழ்ச்சி வலையில் நேரு அவர்கள் விஷயத்தைப் புரிந்து கொள்ளாமல் சிக்கிக் கொண்டு விட்டார் என்பது பெரிதும் வருத்தத்துக்கு உரியது! இந்தி மோகிகளையும் திருப்திப் படுத்துவோமே என்ற சமரஸ மனப்பான்மை நேரு அவர்களைத் தன் வாக்குறுதியை மறக்கச் செய்ததோ?

டில்லி மாநகரில் அக்டோபர் 2-ம் நாள் மகாத்மாஜி பிறந்த நாள் கொண்டாட்டத்தில் நேரு அவர்கள் பேசியதன் ஒரு பகுதி:

''ஆங்கில மொழி விஷயமாகத் தென்னக மக்களுக்கு நாங்கள் கொடுத்த உறுதிமொழி கண்டிப்பாக நிறைவேற்றப்படும். இது பட்டப் பகல் போல் வெட்ட வெளிச்சமானது. கொடுத்த சத்திய வாக்கை நாம் மீறுவதா? அது ஒருநாளும் முடியாத காரியம்!''

இப்படி வீராவேசமாக நேருஜீ முழங்கினார்கள். ஆனால் இப்பொழுதுள்ள மசோதாவில் இச் 'சத்திய வாக்கு' காற்றில் பறக்க விடப்பட்டுள்ளதே! இது எப்படி நடந்தது?

இம்மசோதாவைத் தயாரித்துள்ள யூனியன் மந்திரி லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் திருப்பதியில் செப்டம்பர் 28-ந் தேதி அகில இந்திய இளைஞர் மாநாட்டில் நிகழ்த்திய சொற்பொழிவின் ஒரு பகுதியை கண்டு குறிப்பிட வேண்டும்:

''எல்லா அரசுகளுக்கும் மத்திய அரசுக்கும் நடைபெற்று வரும் கடிதப் போக்கு வரத்துக்களெல்லாம் ஆங்கிலத்தில் தான் நடைபெற்று வருகிறது. ஆங்கிலம் நீக்கப்பட்டுவிட்டால் அரசுகள் எல்லாம், தண்ணீர் கூடப் புக முடியாத தனி அறைகளாகி, நாடே சீர்குலைந்து போகும். தேசிய ஒருமைப்பாடு என்ற கண்ணோக்கோடு தான் மொழிப் பிரச்னையை அணுக வேண்டும்.''

திருப்பதியில் தேசிய பாணியில் இப்படிப் பேசிய யூனியன் மந்திரி தேசிய ஒருமைப்பாட்டுக்கு உலை வைக்கும் கால வரம்பு என்னும் நச்சு விதையை ஆட்சிமொழி மசோதாவில் விதைத்திருப்பது, விளங்காத விபரீதமேயாகும்!

நாட்டுப் பிரிவினையை வன்மையாக எதிர்ப்பவர்களில் நானும் ஒருவன். சுதந்திரப்போரில் மனைவி, மக்களோடு பன்முறையும் சிறை சென்றவன் நாட்டின் ஒருமைப்பாட்டில் நாட்டம் கொள்ளாது, வேறு விதமாக இருக்க முடியுமா? ஆனால், வட நாட்டு இந்தி மோகிகள் ஆங்கில மொழி நீடிப்பு விஷயத்திலும், இந்தி மொழி புகுத்தும் விஷயத்திலும் மேற்கொண்டு வரும் காரியங்கள், பிரிவினை நாடும் கட்சியினருக்கு மேலும் ஊக்கமும் ஆதரவும் தருவனவாகவே இருக்கின்றனவே என்று மனம் நொந்துதான் இதனை எடுத்துரைக்க முற்படலானேன்.

இந்தி வெறியர்களின் சூழ்ச்சி—காலவரம்பு ஏற்படுத்தும் சூழ்ச்சி பலிக்குமானால், பின் நிகழும் விபரீத விளைவுகளுக்கு வட நாட்டவர்களே பொறுப்பாளி ஆவார்கள் என எச்சரிக்க வேண்டியது, எனது தேசியக் கடமையாகும். ஓர் அரசாங்கத்தின் வாக்குறுதி, இப்படி மீறப்படுமானால் மக்களுக்கு அரசாங்கத்தில் நம்பிக்கை ஏற்படுமா?

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை
# சாந்தி

பிராட்வே
சயானி மற்றும்
தென்னாடெங்கும்......

சிவாஜி கணேசன் அளிக்கும்
சாந்தி பிலிம்ஸ்

# பந்தபாசம்

கதை, வசனம் - வலம்புரி சோமநாதன்
இசை - விஸ்வநாதன் - ராமமூர்த்தி
பாடல்கள் - மாயவநாதன் - கவி ராஜகோபால்
ஒளிப்பதிவு - G. விட்டல் ராவ் - கலை - K. மோஹன்
ஸ்டூடியோ - நெப்டியூன்



டைரக்ஷன் **A. பீம்சிங்**

ELEGANT



# ஆராயும் வேளையில்

ஆரோக்கிய வாழ்விற்கு ஆகாரம் சம நிலையில் சத்துப் பொருள்கள் கலந்ததாக இருக்க வேண்டும். சூரியன் மார்க் கோதுமைப் பொருள்கள் முழுக் கோதுமையின் நல்ல தன்மைகள் அனைத்தையும்—புரதச் சத்து, கார்போ ஹைட்ரேட்டுகள், A & B வைட்டமின்கள்—கொண்டவை, சுத்தமானவை, சுகாதாரம் மிக்கவை. கையால் தொடப்படாமல், ஆட்டோமாடிக் முறையில் அரைக்கப்பட்டு, இயந்திரங்களாலேயே மூடைகளாக்கப்படுகின்றன. பிஸ்கோத்துகள், கேக்குகள், பூரிகள் தயாரிக்க சாலச் சிறந்தவை.




## சூரியன் மார்க்

## மைதா, சூஜி, ஆட்டா

*தயாரிப்பாளர்கள்:*

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.

330, தம்பு செட்டி தெரு, சென்னை-1

போன்: 21043, 21044 & 21045

தந்தி: "MATHOORAN"



EP-CFM-2.TAM.



# வளம் பெருக்கும் தொழிற்களம்

பெங்களூருக்குச் சுமார் எழுபத்தைந்து மைலுக்கப்பாலுள்ள அம்மஸந்த்ரா என்னுமிடம் ஒரு பொட்டல் வெளி. பல குக்கிராமங்கள் பரவலாக இருக்கும் பிரதேசம். வாரத்துக்கு ஒரு முறை கூடும் சந்தையிலிருந்து தான் மக்கள் தங்கள் வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். நெடுஞ்சாலையே ஐந்து மைலுக்கப்பாலுள்ளது. ஜல வசதியும் மிகக் குறைவு.

இத்தகைய இடத்தில் மிக நவீனமானதும் பெருமளவில் உள்ளதுமான ஒரு சிமெண்டுத் தொழிற்சாலையை நிறுவி, வெற்றிகரமாக உற்பத்திக்குக் கொண்டு வருவதென்றால், அராபியக் கதைகளில் இரவோடு இரவாகத் தோன்றும் அற்புத மாளிகைகளின் கதை போலத் தோன்றும். ஆனால் உண்மையில் அது போன்ற ஓர் அற்புதத்தை மைசூர் சிமெண்ட் கம்பெனியும் அதனுடைய காரியதரிசிகளுமான ஸ்டெர்லிங் எண்டர்ப்ரைஸஸ் கம்பெனியும் நிகழ்த்தி யுள்ளன.

சர்க்கார் துறைக்கு வழங்கப்பட்ட சிமிட்டித் தொழிற்சாலை லைசென்சைத் தனியார் துறைக்கு மாற்றிக் கொண்டு, இரண்டு வருஷங்களுக்கு முன்னால் தொழிற்சாலைக்கு அஸ்திவாரக் கல் நாட்டப்பட்டது. சென்ற இரண்டு ஆண்டுகளுக்குள் சுமார் பன்னிரண்டு மைல் ரஸ்தா போடப்பட்டுள்ளது; முதல்தரமான தொழிற்சாலை கட்டி முடிக்கப்பட்டுள்ளது; தொழிற்சாலை வரையிலும் ரயில்வே வசதி ஏற்படுத்தியாயிற்று; பற்றாக்குறை காரணமாக மைசூர் ராஜ்ய மின்சார இலாக்காவிலிருந்து மின்சார வசதி கிடைக்காது என்று தெரிந்ததும், நான்கு டீசல் எரி என்ஜின்களைக் கொண்டு மின்சார வசதி செய்யப்பட்டது; நெடுஞ்சாலையிலிருந்து தொழிற்சாலை வரையிலும் போக்குவரத்து சீராக்கப்பட்டுள்ளது; தொழிலாளர்களுக்கும், மற்றவர்களுக்கும் இருக்கை வசதிகளும், 'கான்டீன்' வசதிகளும் செய்யப்பட்டுள்ளன; உற்பத்தியாகும் சிமிட்டியையும், அதற்கு உபயோகிக்கும் மூலப்பொருள்களையும் தரம் நிர்ணயிக்கப் பரிசோதனைச் சாலையும் அமைக்கப்பட்டுள்ளது; உற்பத்தியும் தொடங்கி விட்டது.

தொழிற்சாலை மிக நவீன முறையில் அமைந்துள்ளது. யந்திரங்கள் மிக நுட்பமானவை. மூலப்பொருள்களையாவது, நிலக்கரியையாவது, அடுப்பிலிருந்து வெளிவரும் உஷ்ணத்தையாவது துளியும் வீணாகாதபடி முழுவதையும் உபயோகிக்க வகை செய்யப்பட்டிருக்கிறது. உற்பத்திச் செலவை எவ்வளவு சிக்கனமாகச் செய்ய முடியுமோ, அவ்வளவுக்கும் இத் தொழிற்சாலையில் வகை செய்யப்பட்டுள்ளது. 'எலெக்ட்ரானிக் கன்ட்ரோல்'கள் மூலம், கேந்திர ஸ்தானத்திலிருந்து கொண்டே, உற்பத்திச் சாலையின் பல்வேறு பகுதிகளில் நடைபெறும் இயக்கங்களைக் கவனித்துக் கண்காணிக்க வகை செய்யப்பட்டுள்ளது. இங்கே ஜல வசதிக் குறைவு என்பதனால், சிமிட்டி தயாரிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட முறை "காய்ந்த முறை" உற்பத்தி (Dry Process) எனப்படும். இதற்கான யந்திரங்களெல்லாம் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த க்ளாக்னர் ஹம்போல்ட்



டாயிட்ஸ் கம்பெனியாரால் விநியோகம் செய்யப்பட்டதுடன் தொழிற்சாலை நிறுவனமும், நுட்பங்களும் அவர்களாலேயே மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இந்தத் தொழிற்சாலையில் ஆண்டுக்கு ஒரு லட்சம் டன் சிமிட்டி உற்பத்தியாகும். இது நவம்பர் 11-ந் தேதியன்று உற்சாகத்துடன் ஆரம்பமாகிறது. சென்ற ஒரு மாதமாகவே பரீட்சார்த்தமாக உற்பத்தி வேலை நடந்து கொண்டிருக்கிறது. உற்பத்தியாகும் சரக்கு எல்லா வகையிலும் திருப்திகரமாக இருக்கிறது என்று அத்தாட்சிப் பத்திரங்கள் கிடைத்திருக்கின்றன என்று தெரிகிறது.



எட்கர் கெய்ஸர்

இந்தத் தொழிற்சாலையின் வெற்றிக்குக் காரணமாக இருப்பவர்கள் முக்கியமாக இருவர். அமெரிக்காவிலேயே மிகப் பிரபல ஸ்தாபனமும், உலக முழுவதிலும் பல கிளைகளும் தொழில் தொடர்புகளும் கொண்டுள்ளதும், மைசூர் சிமெண்ட்ஸ் கம்பெனியுடன் வெளிநாட்டுக் கூட்டுறவு சம்பந்தம் உள்ளதுமான கெய்ஸர் என்ஜினீரிங் ஓவர்ஸீஸ் கார்ப்பரேஷனின் தலைவர் திரு எட்கர் கெய்ஸர் இவர்களில் முதலாமவர். நவம்பர் 11உ தொழிற்சாலை இயங்குவதை நேரடியாகப் பார்ப்பார் என்று தெரிகிறது. இந்த ஸ்தாபனத்துக்கு மைசூர் சிமெண்டு கம்பெனியின் மூலதனத்தில் கணிசமான பங்கு உண்டு. அடுத்தபடியாகக் குறிப்பிடவேண்டியவர் மைசூர் சிமெண்டு கம்பெனியைத் தோற்றுவித்தவரும், அமெரிக்கக் கூட்டுறவை ஏற்படுத்தி வைத்தவரும், ஸ்டெர்லிங் என்டர்ப்ரைஸஸ் என்ற காரியதரிசிக் கம்பெனியின் தலைவருமான திரு பி.கே. சாரங்கபாணி முதலியார். அவருடைய ஓய்ச்சல் ஒழிவற்ற உழைப்பும், நிர்வாகத் திறமையும், காரியத்தைச் சாதித்துக் கொடுக்கும் ஆற்றலும், இந்தத் தொழிற்சாலையின் பெரு வெற்றிக்குக் காரணமாக இருந்தன. தொழிற்சாலையின் அபிவிருத்தியை இமைகொட்டாது கவனித்து வருகிறார் அவர்.

மைசூர் ராஜ்ய அமைச்சர்களும், மத்திய அரசாங்க அமைச்சர்களும் அன்புடன் ஆதரவளித்து உருவாகி உற்பத்திக் கட்டத்தை அடைந்துள்ள மைசூர் சிமெண்ட்ஸ் கம்பெனி கபிட்சப் பாதையில் வேகமாக முன்னேறிச் செல்லும் என்று எதிர்பார்க்கலாம். அதற்கான அறிகுறிகளெல்லாம் காணப்படுகின்றன.

## ஊர் வம்பு

PK









# காபி அருந்திக் கொண்டே பேசலாமே?

அடுத்த 'பார்ட்டிக்கு' எந்த புடவை அணியலாம்? 'பிக்னிக்' செல்ல ஏற்பாடா? எதுவாயிருந்தாலும் காபி அருந்திக்கொண்டே உங்கள் பிரச்னையை மிக எளிதில் பேசித் தீர்த்துக்கொள்ளுங்கள். காபி உற்சாகமளிக்கக் கூடியது.

## காபி மனதிற்கு எப்பொழுதும் திருப்தியளிக்கிறது



தரமான காபி தயாரிப்பது சுலபம். இதைப் பற்றிய எங்கள் இலவச புத்தகத்திற்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதையும் குறிப்பிடுங்கள்.




காபி போர்டு, பெங்களூர்.



# நந்தவனம்

## 45. எதிர்பாராத நிகழ்ச்சி

**வீ**ட்டினுள் நுழைந்த சாமியாரைக் கூர்ந்து பார்த்தான் பையன்! நீண்ட காவி அங்கியும், அடர்த்தியாக வளர்ந்திருந்த தாடியும், குறுகுறு என்ற அவருடைய கண்களும் பையனைக் கவர்ந்தன! இதுவரை சித்திரத்திலே ஈடுபட்டிருந்த பையனுக்கு இப்பொழுது விரல்கள் துடித்தன.

"என்ன தம்பி! அம்மா இல்லையா வீட்டிலே?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார் சாமியார்.

"அம்மா வெளியே போயிருக்கா.. நீங்க கொஞ்ச நேரம் இங்கேயே காத்திருந்தால்...." என்று இழுத்தான் சிவகாமிநாதன். காத்திருந்தால் வெளியே போயிருந்த தாயார் வந்து விடுவாள் என்று சொல்ல நினைத்தானா, அல்லது அந்தக் கொஞ்ச நேரத்துக்குள் சாமியாரைத் தனது காகிதச் சிட்டையிலே படமாகப் பிடித்து விடுவான் என்ற கருத்தா? இரண்டுந்தான்! இரண்டு கருத்துக்களும் மனத்தில் ஓடியவனாக அந்த வாக்கியத்தை அப்படியே இழுத்தான் சிவகாமிநாதன்.

"சரி; இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன்!" என்று சொல்லி, அங்கே கிடந்த ஒரு சோபாவில் உட்கார்ந்தார் சாமியார். பையன் உள்ளேபோய் மேஜைக்கு மேலே கிடந்த காகிதச் சிட்டையை எடுத்து வைத்துக் கொண்டு பென்சிலும் கையுமாக உட்கார்ந்தான்.

இதுவரை காகிதங்களிலே தனது பள்ளித் தோழர்களையும் தோழிப் பெண்களையும் சித்திரங்களாக வரைந்து கொண்டிருந்த சிவகாமிநாதன், இப்போது சாமியாரை வரைவதிலே முனைந்தான்!

நீண்ட காவி அங்கியும், தாடியும், அவருடைய தோற்றத்திலே துலங்கிய ஒரு விசேஷமான கவர்ச்சியும் சிவகாமிநாதனுடைய உள்ளத்தில் அத்தனை தூரம் பதிந்துவிட்டன! இதுவரை இப்படிப்பட்ட ஒரு மனிதனை அவன் சந்தித்ததில்லை! புதுமையான அந்தக் காட்சியைப் பென்சிலிலே கொடுத்து ஓவியமாகச் சித்திரிக்க ஆரம்பித்தான் சிறுவன்!

புறக் கோடுகளை வரைந்து விட்டான்; முகத்தின் எல்லை விளிம்புகளையும் எழுதி விட்டான். தாடியும் வந்து விட்டது. அந்தக் கண்களிலே துடித்துக் கொண்டிருந்த குறுகுறுப்பு? அதை வரைவதற்கு முன்பு கதவின் ஓரத்தில் நின்று கொண்டு, அவரை இன்னொரு தரம் கூர்மையாகப் பார்த்தால் நல்லது என்று பட்டது சிவகாமிநாதனுக்கு! காகிதச் சிட்டையை மேஜையின் மேல் வைத்து விட்டுக் கதவுக்கு அருகிலே வந்து நின்று கொண்டான்.

சாமியார் சோபாவில் உட்கார்ந்து கொண்டே அந்த அறையின் உத்தரத்தைப் பார்த்தவாறு ஏதோ தீவிரமான யோசனையில் இருந்தார். பையனை அவர் கவனிக்கவில்லை!

சிவகாமிநாதன் சற்று நேரம் மறைவில் நின்றவாறு சாமியாரின் விழிகளையும், அவருடைய கூர்மையான மூக்கையும் ஆராய்ந்தான். பிறகு மறுபடியும் மேஜைக்குவந்து வரைய ஆரம்பித்தான்!

முக்கியமான கோடுகளை வரைந்தாயிற்று. என்றாலும் சித்திரம் முடியவில்லை; அங்கங்கே சிறு சிறு கோடுகளும், வளைவுகளும், செதுக்கல்களும், பட்டைகளும் கொடுக்க வேண்டுமே. சிவகாமிநாதன் யோசித்தான். கதவின் மறைவில் காகிதமும் பென்சிலுமாகச் சென்று, சில நிமிஷங்கள் உட்கார்ந்து பார்த்துக்கொண்டே வரைந்து விட்டால் எளிதாக இருக்கும் என்று தோன்றிற்று அவனுக்கு. அப்படியே காகிதச் சிட்டையை எடுத்துக் கொண்டு பென்சிலைப் பிடித்த கையோடு கதவுக்கு அருகிலே



வந்து உட்கார்ந்து கொண்டான். நட னம் ஆடுகிற சிறுமிகளையே இதுவரை வரைந்துவந்த பையனுக்கு இந்தப் புதிய உருவம் பல புதிய கவர்ச்சிகளைக் கொடுத் தது. சித்திரம் வரைவதற்கு ஏற்ற தாடி யும் அந்த நீண்ட அங்கியும் கூரிய மூக் கும் பையனுடைய கையிலே உற்சாகமாக வந்து விளையாடின. தரையிலே வளைந்து உட்கார்ந்து கொண்டு, சாமியாரின் ஓவியத் திலே சன்னக் கோடுகளைத் தீட்ட ஆரம்பித்தான் சிவகாமிநாதன். மேலே மேலே வரைந்து கொண்டு போகப் போக, சோபாவில் உட்கார்ந்திருந்த சாமியார் சித் திரத்துக்குள்ளே எழுந்தருளி அந்த ஓவியச் சிறுவனுடைய உள்ளத்தை ஆட்கொண்டு விட் டார்! தன்னையே தான் மெச்சிக் கொண்டு, அந்தச் சிருஷ்டி



லயத்திலே சொக்கிப் போய், உற்சாகமான கலைக் கோலாகலத்திலே பட்டைகளையும், வளைவுகளையும், துண் டுக் கோடுகளையும் விறுவிறு என்று தீட்டினான் சிவகாமிநாதன். தன்னை மறந்ததொரு லயத்திலே மனம் ஒன்றிய வாறு தீட்டிக் கொண் டிருந்தான். சாமியார் பார்த்துவிட்டார்!

"தம்பி! அங்கே என்ன வேலை நடக் கிறது?" என்று கேட்டுக் கொண்டே ஓரே எட்டில் நடந்து வந்து காகிதச் சிட்டையைப் பற்றிப் பிடித்துக் கொண் டார் சாமியார்!

"பேஷ்! தம்பி! பிரமாதம்!" என்று சொல்லிக் கொண்டே தம்முடைய சித்திரத்தையே பார்த்து அப்படியே சொக்கிப் போனார் சாமியார்!

"தம்பி! அபாரம்! ஐந்து நிமிஷத் திற்குள் என்ன மாய ஜாலம் பண்ணி விட்டாய்! மௌனமாக இருந்து என்ன செய்கிறான் பையன் என்று பார்த்தால், அப்பாவுக்குப் பின்னே என் பதையல்லவா செய்து காட்டு கிறான்! பேஷ்! பேஷ்! என்ன இருந்தாலும் ரத்தத்திலே உள்ள திறமை விட்டுப்போகுமா! எங்கே, வேறு என்ன வரைந் திருக்கிறாய் இந்த நோட்டுப் புத்தகத்திலே?" என்று கேட் டுக்கொண்டே காகிதங்களைப் புரட்டினார் சாமியார்!

வியப்பு, ஆனந்தம், அதே சமயம் பல துயர நினைவுகள், அத்தனையும் முகத்திலே கொந்தளித் தன சாமியாருக்கு!

"தம்பி! உன் பெயர் என்னப்பா?" என்று கேட்டார் சாமியார்.

"சிவகாமிநாதன்!" என்று பணிச்சென்ப் பதில் சொன்னான் சிறுவன்!

"ஓ! தாத்தாவின் பெயரா? பலே! தாத்தாவின் பெயரை நீயும் வாங்கிக் கொண்டு விட்டாய்! அவருடைய பேரோடு அவருடைய புகழும் சேர்ந்து தான்!" என்றார் சாமியார். பையன் குழம்பினான். சாமியாரின் வார்த்தைகள் அவனுக்குப் புரியவில்லை.

சோமு

"தம்பி! நீ யாரிடம் சித்திரம் பழகி னாய்?" என்று கேட்டார் சாமியார்.

"இல்லை. நான் படமே வரையக் கூடாதுன்னு அம்மா சொல்லியிருக்கா! இதெல்லாங்கூட அம்மாவுக்குத் தெரி யாமல்தான்...." என்று இழுத்தான் சிவகாமிநாதன்.

ஒரு கணம் அப்படியேஅதிர்ந்துபோய் நின்றார் சாமியார். அந்த ஒரு கணத் தில் அவருக்கு எல்லா நடப்புக்களும் புரிந்து விட்டது போல் கண்களை மூடி நின்றார். அடுத்த விநாடி கேட்டார்.

"உனக்கு என்ன சொல்லித் தரு கிறார்கள்?"

"நாட்டியம்!"

"நாட்டியமா! பேஷ்! அம்மாவைப் போலவே இருக்கிறாய், அம்மாவைப்

போலவே நாட்டியமும் ஆடுவாய்! அப்படித்தானே?''

பையன் இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது என்று யோசித்தான்.

''தாத்தா! நான் அம்மாவைப் போலவே ஆடுகிறேன்னுதான் எல்லாரும்....''

''எல்லாரும் சொல்லுகிறார்களா? ரொம்ப சரி. நீ பெண் குழந்தையாகப் பிறந்திருக்க வேண்டியவன்! அத்தனை அழகும் கவர்ச்சியும் உனக்கு இருக்கிறது! நாட்டியமும் பாட்டும் உனக்கு நன்றாக வரும். நீ ஏன் சித்திரம் வரைய வேண்டும்? வேண்டாம்!'' என்றார் சாமியார்.

''தாத்தா! அப்படியானால் இந்தப் படம் நல்லா இல்லையா?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

எதிர்பாராமல் இப்படி மடக்கப் பட்டதும், சாமியார் புருவங்களை நெளித்தார். பையன் மேலும் தொடர்ந்து பேசினான்:

''தாத்தா! எனக்கு நாட்டியம் வரத்தான் வருது. ஆனாலும், தாத்தா, சித்திரம் வரையறதான்னு எனக்கு ரொம்ப ரொம்ப ரொம்ப....'' என்று அடுக்கிக் கொண்டே போனான் சிவகாமிநாதன்.

சாமியார் இப்பொழுதும் பதில் பேசவில்லை. அவருக்கு உள்ளம் கலங்கியது. பையன் மேலும் தொடர்ந்தான்:

''தாத்தா! நான் அப்பாவுக்குப் பிள்ளைன்னுசொன்னியே! அப்படியானால் என்ன சொல்லுதே தாத்தா? எங்க தாத்தாவோட பேருன்னு என்னவோ சொன்னியே! எனக்குப் புரியலியே தாத்தா! கொஞ்சம் விவரமாச் சொல்லேன் தாத்தா!'' என்று சாமியாரை மடக்கிப் பிடித்தான் சிவகாமிநாதன்.

சாமியார் இந்த இக்கட்டான நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்று திணறினார். சிவகாமிநாதனைச் சித்திரம் வரைய ஒட்டாமல் தடுத்து வருகிற தாய், அவனுக்கு நாட்டியத்திலும் இசையிலும் மனசை ஈடுபடுத்திச் சித்திரக் கலையை மறக்கடித்து வருகிறாள் என்பது அவருக்கு நன்றாகப் புரிந்தது. அதே சமயம் பையனுடைய உள்ளத்துக்குள்ளே பொங்கிப் பெருகி நிற்கிற சித்திர ஊற்று, வெளியே பாய்வதற்கு எப்படி உடைத்துக் கொண்டு சாடலாம் என்று அலை வீசிக் கொண்டிருக்கிறது என்பதும் சாமியாருக்குப் புரிந்தது. அவரால் எதுவும் பேச முடியவில்லை.

''தம்பி! அந்தச் செய்தியெல்லாம் இன்னொரு நாள் சாவகாசமாகச் சொல்லுகிறேன். அம்மா வருவதற்கு நேரம் ஆகுமா?'' என்று கேட்டார் சாமியார்.

''எனக்குத் தெரியாதே தாத்தா, எப்போ வருவான்னு! நீ இங்கேயே இரேன் தாத்தா! அம்மா வந்துடுவா!'' என்று கெஞ்சினான் சிவகாமிநாதன். அவனையும் மீறிய ஒரு பாசம் அவனைச் சாமியாரோடு இணைத்தது. வாழ்வில் தான் வரைந்த சித்திரத்தை முதன் முதலாக ஒருவர் பாராட்டுவதை இப்போதுதான் கேட்டிருக்கிறான் பையன்! அது மட்டுமில்லை. யாரை வரைந்தானோ, அவரே இவ்வளவு தூரம் பாராட்டி விட்டார். அவரை அங்கிருந்து நகர விடுவதற்கு அவனுடைய மனம் ஒப்பவில்லை!

சாமியார் சோபாவிலிருந்து மெதுவாக எழுந்தார்.

''தாத்தா! எழுந்திருக்காதே தாத்தா! நான இனிமே ஒண்ணுமே கேக்கலே. நீ பேசாமல் உக்காந்திரு. நானும் பேசாம உன்னையே வரைஞ்சுக்கிட்டு இருக்கட்டுமா?''

இவ்வாறு சாமியாரிடம் ஆர்வத்தோடு மன்றாடினான் சிவகாமிநாதன். அந்தப் பாசத்தைச் சாமியாரால்கூட உதற முடியவில்லை.

''தம்பி, நீதான் என்னை வரைந்து முடித்து விட்டாயே? இனி மேலும் எதற்கு வரைய வேண்டும்? வேண்டாம். நான் அவசரமாக ஓர் இடத்துக்குப் போக வேண்டியதிருக்கிறது. இன்னொரு நாள் வருகிறேன்!'' என்று புறப்பட்டார் சாமியார். வாசல்வரை நடந்து விட்டார். இதற்குள் இடையே என்று ஏதோ யோசித்தவனாகச் சிவகாமிநாதன் ஓடி வந்து சாமியாரை வழிமறித்தான்!

''தாத்தா! இந்தப் படம் உன்னைப் போலவே இருக்குதா? அப்படியானால் இதுலே ஒரு கையெழுத்துப் போட்டுத் தருவியா?'' என்று பசலை மொழியிலே வேண்டினான் சிவகாமிநாதன்.

''பேஷ்! அப்படிக் கேளு ராஜா! கொண்டா, அந்தக் காகிதத்தை!''

இவ்வாறு சொல்லி அந்தக் காகிதச் சிட்டையை வாங்கினார் சாமியார். தம்முடைய சித்திரத்தைப் புரட்டி அதன் கீழ் ''சித்திரானந்தா'' என்று கையெழுத்திட்டார். அப்படியே அதைத் திருப்பிக் கொடுத்துக் கொண்டே சொன்னார்:

''தம்பி! அம்மா வந்ததும் சித்திரானந்தா என்று ஒரு சாமியார் தேடி வந்ததாகச் சொல்லு. இரண்டு மூன்று நாளில் மறுபடியும் வருவேன்!''

# ஒரு நல்ல ஸூட்
# எவ்வளவு காலம் நீடித்திருக்கும்?

*சிறப்பாக உடையணியும் மனிதனின் கேள்வி இது.*

உங்கள் புதிய ஸூட் கவர்ச்சியாய்த் தோன்ற வேண்டியதுதான் — ஆனாலும் முக்கியமானதென்னவெனில் அது நன்றாக நீண்டகாலம் உழைக்கவேண்டுமென்பதே. ஒரு நல்ல ஸூட், நீங்கள் அதை அணிதலின் அளவைப் பொறுத்து எவ்வளவு காலம் வேண்டுமானாலும் நீடித்திருக்கும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்-மபத்லால் க்ரூப் ஸூட்டிங்குகள், நீங்கள் எவ்வித விலையில் தேர்ந்தெடுத்தாலும், அவைகளின் ரகத்தில் முதன்மையானவையும் உங்களுக்கு உண்மையிலேயே நீடித்த உழைப்பையும் தருவன.





## மபத்லால்
## க்ரூப் ஸூட்டிங்குகள்

நியு ஷோராக், (ஷோராக்). அஹமதாபாத். நியு ஷோராக், நாடியாட். ஸ்டாண்டர்ட், பம்பாய். ஸ்டாண்டர்ட், (நியூ சைனு) பம்பாய். ஸ்டாண்டர்ட், டேவாஸ். ஸாஸூன், பம்பாய். ஸாஸூன் (நியூ யூனியன்), பம்பாய் சூரத் காட்டன், சூரத். மபத்லால் பைன், நவசாரி. ககல்பாய் ஜூட், கல்கத்தா. இந்தியன் டைஸ்டப், பம்பாய்.

TAM SISTA'S-MC-18A







Pain Balm

சாமியார் அங்கிருந்து புறப்பட்டார்; அவரை அனுப்பிவிட்டு உள்ளே வந்தான் சிவகாமிநாதன். யோசித்தான்:

'இந்தக் காகிதச் சிட்டை என்றைக்காவது ஒரு நாள் அம்மாவின் கண்ணில் படத்தான் போகிறது. அப்படிப் பட்டால் என்ன செய்வாள் அம்மா? இந்தக் காகிதங்கள் அத்தனையையும் சுக்குநூறாகக் கிழித்து அடுப்பிலே போட்டு விடுவாள்! அப்படியானால் சாமியார்த் தாத்தாவின் படம் என்ன ஆவது?'

இப்படி எண்ணியதும் சிவகாமிநாதனுக்குக் கண்ணீர் வந்தது.

'மற்ற எந்தச் சித்திரம் எப்படி ஆனாலும் சரி. பரவாயில்லை. இந்த ஒரு சித்திரம் மட்டும் அம்மாவின் கையில் படவே கூடாது!'

இவ்வாறு எண்ணியதும், அந்தச் சித்திரத்தையும் அதன் கீழ் சாமியார் போட்டிருந்த கையெழுத்தையும் மறுபடி மறுபடி பார்த்தான். "சித்திரானந்தா" என்ற அந்தப் பெயரை நூறு தடவை மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். அப்படியே எழுந்து, அந்த ஒரு பக்கத்தை மட்டும் சிட்டையிலேயிருந்து கிழித்தான். மடித்தான். எங்கே வைப்பது?

'இப்போதைக்கு இந்தக் காகிதத்தை மடித்து மேஜைக்குள்ளே ஓரத்தில் ஒரு மூலையில் மறைத்து வைத்து விடலாம். வெளியே போகும் போது சட்டைப் பைக்குள் வைத்துக் கொள்ளலாமா? இனிமேல் எங்கே போனாலும் அங்கெல்லாம் இந்தச் சித்திரமும் என்னோடு கூடவே இருக்கலாம்?'

சிவகாமிநாதன் இந்த இரகசிய யோசனைகளிலே ஈடுபட்டவனாக, அந்த ஒரு சித்திரத்தை மேஜைக்குள்ளே ஓரத்தில் ஒளித்து வைத்தான். சிட்டையை எடுத்துக் கொண்டு மடியின் மேல் வைத்து மேலும் யோசிக்க ஆரம்பித்தான் சிவகாமிநாதன்!

காலடிச் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான் சிவகாமிநாதன். என்ன ஆச்சரியம்! அவன் அம்மா நின்றுகொண்டிருந்தாள்!

"சிவகாமிநாதா! என்ன செய்கிறாய் அங்கே? கதவைக் கூடத் தாளிடாமல் அப்படி என்ன யோசனை?"

சிவகாமிநாதனுக்கு அப்போதுதான் ஞாபகம் வந்தது. சாமியார்த் தாத்தாவை அனுப்புகிற அவசரத்தில் கதவைத் தாளிட மறந்துவிட்டான் என்பது! கையும் காலும் பதறின சிவகாமிநாதனுக்கு!



"என்னடா அது மடியிலே?"

இப்படிக் கேட்ட போது தாயாரின் குரலில் எல்லை கடந்த சீற்றம் ஒலித்ததைக் கண்டான்.

"சித்திரம் வரையாதே வரையாதே என்று உனக்கு எத்தனை தடவை சொல்லுவது?"

அவ்வளவுதான். சீற்றத்தோடு சிவகாமியின் மீது பாய்ந்த தாயார், பளீர் பளீர் என்று அவன் கன்னத்தில் அறைந்தாள்.

"அம்மா! அம்மா! இனி மேல் மாட்டேன்ம்மா! இனிமே சித்திரம் வரையலேம்மா! சித்திரம் வரைய மாட்டேன்மா!"

கதறினான் சிவகாமிநாதன். காகிதச் சிட்டையைப் பிடுங்கி நூறாயிரம் துண்டுகளாகக் கிழித்துத் தூர எறிந்தாள் செண்பகசுந்தரி.

"இத்தனை நேரமும் நீ சித்திரமா எழுதினே? கொண்டா, அந்தப் பென்சிலே!" என்றாள்.

'டக்' என்று அந்தப் பென்சிலை இரண்டு கைகளாலும் ஒடித்துத் தூர எறிந்தாள். மறுபடியும் பளார் பளார் என்று முதுகிலே விழுந்தது அறை!

சுருண்டு விட்டான் சிறுவன். அப்படியே அவனை உதறிவிட்டு வீட்டினுள்ளே போனாள் சுந்தரி. கட்டிலுக்குச் சென்றாள். அப்படியே அதில் விழுந்து சாய்ந்தாள்! ஒரு சிறு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினாள் சுந்தரி. பல ஆண்டு

களாக உள்ளத்திலே பூட்டி வைத் திருந்த துயரம் எல்லாம் விம்மி விம் மிச் சரிந்தது!

தனியாகத் தரையிலே கருண்ட சிவ காமிநாதன் கன்னத்தைத் துடைத்துக் கொண்டே எழுந்தான். அறை விழுந்த தனால் ஏற்பட்ட வலியையும்விட, அம்மாவின் விம்மல் படுக்கையறையி லிருந்து வந்து, அவனுடைய இதயத் தைக் குத்தியது! அந்த வேதனையை அவனால் தாங்க முடியவில்லை!

ஆம்: வலியின் வேதனை தெரிய வில்லை சிவகாமிநாதனுக்கு! அம்மா அழுகிறாள். தான் செய்துவிட்ட பெரிய தவறுதலுக்காக அம்மா மனம் நொந்து தேம்பித் தேம்பி அழுகிறாள்! அதை அவனால் தாங்க முடியவில்லை.

தரையிலிருந்து எழுந்த சிவகாமிநாதன் மெதுவாக நடந்தான். அம்மா படுத் திருந்த அறைக்கு அடி மேல் அடிவைத்து மெதுவாக நடந்து வந்தான்.

"அம்மா!" என்று கூப்பிட்டான். பதில் இல்லை. அழுகை நில்லாமல் தேம்பும் குரல் மட்டும் வந்தது.

ஓடிப் போய்க் கட்டிலிலே அம்மா வின் மீது விழுந்தான் சிவகாமிநாதன்.

"சிவகாமிநாதா!" என்று அரற்றிக் கொண்டே அவனை அள்ளி எடுத் தாள் தாயார். அப்படியே உடம்போடு சேர்த்து அணைத்துக் கொண்டே, 'ஓ' என்று கதறினாள் சுந்தரி. எல்லை மீறிய அந்தப் பாசத்தின் அரவணைப்பிலே உள் ளம் எல்லாம் உருகிக் கரைந்தது சிவ காமிநாதனுக்கு.

"அம்மா! நான் இன்றொரு தப்பும் பண்ணிட்டேன்மா! கோவிச்சுக்கமாட் டேன்று அதையும் காண்பிச்சுடறே னம்மா! கடைசித் தடவையா இதை மட்டும் மன்னிச்சுக்கோம்மா! இனிமேல் நான் படமே வரைய மாட்டேன் அம்மா...!"

இப்படிச் சொல்லி, ஒரு தாவுத் தாவிக் கட்டிலிலிருந்து கீழே குதித் தான் சிவகாமிநாதன். ஓடிப் போய் மேஜையைத் திறந்தான். சாமியாரின் படத்தை வெளியே எடுத்தான்.

"அம்மா! இதையும் உன் கையா லேயே கிழிச்சுப் போட்டுடம்மா! கடைசித் தடவை!" என்று சொல்லிக் கொண்டு அந்தப் படத்தை நீட்டினான் தாயாரிடம் சிவகாமிநாதன்!

கண்களைத் துடைத்துக் கொண்டே கட்டிலிலிருந்து எழுந்த சுந்தரி, மகன் கொடுத்த சித்திரத்தைக் கையிலே வாங்கினாள். கிழித்துப் போடப் போகி றாள் என்று எதிர்பார்த்து உடம்பை வளைத்துக் கொண்டு நின்ற சிவகாமி நாதன், அப்படியே வியப்பினால், அதிர்ந்து போனான்!

சாமியாரின் சித்திரத்தைப் பார்த் தாளோ இல்லையோ, செண்பக சுந்தரி அப்படியே கட்டிலிலிருந்து துள்ளிக் குதித்தாள்.

"சிவகாமிநாதா! இந்தச் சித்திரமும் நீ வரைந்ததா?"

"ஆமாம்மா! சித்திரானந்தா என்ற இந்தத் தாத்தா வந்து உன்னைத் தேடி னார். மறுபடியும் வரேன்னு சொல் லிட்டுப்......"

அதற்கு மேல் சிவகாமிநாதனால் பேச முடியவில்லை. எந்தச் சித்திரத் தைத் தனது அன்னை கிழித்தெறியப் போகிறாள் என்று சிவகாமிநாதன் எதிர்பார்த்தானோ, அந்தச் சித்திரத்தை அவள் என்ன செய்துகொண்டிருந்தாள்?

"சிவகாமிநாதா! இந்தப் பெரியவர் இங்கே வந்தாரா? இங்கே வந்தாரா?" என்று கேட்டுக் கொண்டே, சித்தி ரத்தை மட்டற்ற மரியாதையோடு தனது இரண்டு கண்களிலும் ஒற்றிக் கொண்டாள் சுந்தரி! (தொடரும்)

அத்தியாயம் இருபத்தொன்று

## முத்தரையரின் சந்தேகம்

மூன்று நாட்களாகச் சேதியக் கலைஞரின் இல்லத்தில் தங்கியிருந்து முயற்சி செய்தும், பல்லவ பரமேசுவரவர்மனின் எண்ணத்தையோ அவனது போக்கையோ புரிந்து கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்த பெரும்பிடுகு முத்தரையர், இன்றைக்கு எப்படியும் அவனைக் கண்டு பேசித் தாம் வந்த காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு புறப்பட்டுவிட வேண்டுமென்று தீர்மானித்தவராய், கலைக் கூடத்தை நோக்கிச் சென்றார்.

அந்தக் கலைக்கூடத்தின் தனிப் பகுதியொன்றில் தூரிகையும் கையுமாக ஏதோ சிந்தனையில் அமர்ந்திருந்த பரவாதி மல்லர் எழுந்து வாஞ்சை நிறைந்த விநயத்துடன், "வாருங்கள், சிற்றரசே! இப்படி அமருங்கள்!" என்றார்.

அங்குமிங்கும் பார்த்தவாறு உள்ளே வந்த முத்தரையர், தமக்காக எழுந்து நின்ற பரவாதிமல்லரை அன்புடன் பற்றி முதலில் அமரச் செய்து விட்டுப் பின் தாம் ஓர் இருக்கையில் உட்கார்ந்து, டப் பெற்றிருந்த அரைகுறை ஓவியப் ஒன்றில் அவருக்கு மட்டுமே புரியக்கூடிய சில கோடுகளை இழுத்து விட்டு உட்கார்ந்து, மீண்டும் அவ்வோவியத்தைக் கவனிப்பதில் முனைந்தார்.



# பத்தினிக் கோட்டம்

"கலைஞரவர்களின் தனிமையிலே குறுக்கிட்டு விட்டேனோ?" என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக்கொண்டே மீண்டும் அந்தக் கலைக்கூடத்தைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டார்.

"பரமேசுவர வர்மரைத் தானே பார்க்கிறீர்கள்? அவர் பூஜையறையில் இருக்கிறார் என்று நினைக்கிறேன். இங்கு வர இன்னும் கொஞ்ச நேரமாகலாம்" என்றார் சேதியக் கலைஞர்.

பெருமூச்சு விட்டுத் தலையசைத்துக் கொண்ட முத்தரையர் மௌனமானார். எதிரே தொங்கிய ஓவியச்சீலையொன்றை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த பரவாதிமல்லர், தூரிகையுடன் சட்டென்று எழுந்து, வரிவடிவமாய்த் தீட்

"ஓ.... எங்கள் பரமேசுவர வர்மரால் வரையப் பெற்ற இந்த ஓவியத்தை நீங்கள் திருத்திச் சரி செய்கிறீர்களா?" என்று ஆவலுடன் கேட்டார் பெரும்பிடுகு முத்தரையர்.

"இல்லையே!..... இது பரமேசுவர வர்மர் தீட்டிய ஓவியம் என்று யார் உங்களுக்குச் சொன்னது?" என்று சற்றே வியப்புக் கலந்த குரலில் வினவினார் கலைஞர்.

"மூன்று நாட்களுக்கு முன் நான் இங்கு வந்து அதோ அந்தச் சாளரத்துக்கு வெளியேயிருக்கும் நந்தியாவட்டைச் செடியருகில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தபோது, நம் பல்லவ மன்னர் இந்த ஓவியத் திரைக்கு முன்னால்தான் உலாவிக் கொண்டிருந்தார். அதனால் இது அவரால் வரையப் பெற்ற ஓவியமாயிருக்குமோ என்று எண்ணினேன். அத்துடன், அவரது பாதுகாப்புக்காகவும் பொழுதுபோக்குக்காகவும் தாங்களே அவரை இந்தக் கலைப் பணியில் ஈடுபடச் செய்திருக்கலாம் என்றும் எண்ணிக் கொண்டேன்."

"சுவையான கற்பனை!" என்று கூறித் தம் பூப்போன்ற தாடியைக் கோதியவாறு மெல்லச் சிரித்தார் பரவாதிமல்



# ஜெகசிற்பியன்

வர். "ஆயினும் இது ஒரு நல்ல யோசனைதான். ஓவியக் கலையில் மிகுந்த பற்றும் ஓரளவு பயிற்சியும் கொண்ட அவரை நான் இந்தத் துறையில் ஈடுபடுத்தியிருக்கலாம். ஆனால், இதற்கெல்லாம் அவருக்கு நேரம் இருக்க வேண்டுமே? இங்கே அவர் அன்றாடம் செய்து வரும் காரியங்கள் மூன்றே மூன்றுதான். காலை அனவின்றிப் பூஜை அறையில் தியானம்; பிறகு, சைவ சித்தாந்த ஆகம நூல்களைப் படித்தல், ஆராய்தல்; அதன்பின் தனிமையிலே அமர்ந்து ஆழ்ந்த சிந்தனை. இவற்றைத் தவிர வேறு எதிலுமே கவனம் செலுத்தியதை நான் இதுவரையில் கண்டதில்லை. இத்தனை நாட்களாக அவர் இந்த இல்லத்தில் தங்கியிருந்தும் இரண்டொரு முறைதான் அவரிடம் பேசியிருக்கிறேன் — அதுவும் ஒரு சில வார்த்தைகள்."

முத்தரையரின் முகம் சாம்பிச் சிறுத்தது. சேதியக் கலைஞர் மீண்டும் எழுந்து அந்த ஓவியச் சீலையில் ஒரு கோட்டை இழுத்து விட்டு உட்கார்ந்து சற்று நேரம் அதையே பார்த்துக் கொண்டிருந்தவர் ஏக்கப் பெருமூச்சுடன் மெல்லிய குரலில் சொன்னார்: "மாமல்லபுரத்திலே முழுமை பெறாமல் நிற்கும் கணேசர் கோயிலின் தூண் ஒன்றில் சிற்பமாகச் செதுக்குவதற்காக வரையத் தொடங்கிய 'மாதிரிச் சித்திரம்' இது. இந்த வரி வடிவச் சித்திரத்தை வைத்துத்தான் அங்கே வனப்பு மிக்கதொரு சிற்பத்தை உருவாக்க வேண்டும். ஆனால், அந்தக் கோயில் வேலை அரைகுறையாய் நிற்பது போலவே இந்தச் சித்திரமும் நீண்ட நாட்களாக நிறைவுறாமலே நிற்கிறது. பலமுறை முயன்றும் ஏனோ என் மனம் இதில் ஈடுபடவே இல்லை. இன்று எப்படியும் இதனை முடித்து விடுவது என்ற தீர்மானத்தில் இங்கு வந்திருக்கிறேன்."

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து போய் உட்கார்ந்திருந்த முத்தரையர் சட்டென்று நிமிர்ந்து, "இப்போதைக்கு இந்த ஓவியத்தை முடிக்க வேண்டிய அவசியம் என்ன, கலைஞரே?" என்று கேட்டார்.

"சிருஷ்டியாவேசம் என்பது கால தேச வர்த்தமானங்களையொட்டி எழுவதில்லை. இன்று ஏனோ என் உள் மனம் இதை முடிக்க வேண்டுமென்று உணர்த்துகிறது; முயன்று பார்க்கிறேன்."

'அப்படியானால் இளவரசர் கோவிந்தவர்மர் சந்தேகப்பட்டது சரிதானோ?' என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்ட முத்தரையர் விஷமச் சிரிப்புடன் நிமிர்ந்து, "தங்களின் இந்த உள்மன 'உறுத்தலுக்கு' உட்பொருள் ஏதும் இல்லையே?" என்று கண்களை இடுக்கிக்கொண்டு கேட்டார். "அதா



வது. மாமல்லபுரக் கணேசர் கோயிலை நிறைவாக்கி முடிப்பதற்கான புதிய திட்டம் அல்லது புதிய ஆதரவு ஏதேனும் தங்களுக்குக் கிடைத்திருக்கிறதா என்று கேட்கிறேன்?''

ஒன்றும் புரியாமல் திகைப்புற்ற பரவாதிமல்லர், தம் பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு அமைதியாகச் சொன்னார்: ''சந்திரலேகைச் சிற்றரசரின் இந்த வினா மிகவும் விசித்திரமானது! காலத்தை வெல்லத் தக்க அந்தக் கலைக்கோயில் பணிக்கு ஆதரவும் ஆக்கமும் அளிக்கக் கூடிய முதல்வரே, இன்று நாடிழந்து நலமிழந்து விதியின் கரிய நிழலில் முடங்கி மறைந்து கிடக்கும்போது, நான் எவ்வாறு அதை மேற்கொள்ள இயலும்? அப்படிக் கனவு காண்பது கூடப் பைத்தியக்காரத்தனமாயிற்றே?''

முத்தரையர் அவரைக் கூர்ந்து நோக்கி ஒரு மிடுக்கான சிரிப்புடன், ''ஏன் முடியாது? மனச்சாட்சியைச் சிறிதே ஒதுக்கி வைத்து விட்டால் இந்த உலகத்தில் முடியாத காரியம் ஒன்றுமே இல்லை. அதிலும், தங்கள் கலையையே பெரிதெனக் கருதும் கலைஞர்களுக்கு அது மிக மிகச் சுலபமானது'' என்றார் அலட்சியமாக.

திடுக்குற்றுத் திரும்பிய பரவாதிமல்லர், ''அன்பரே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று படபடப்புடன் வினவினார்.

''என் மதிப்புக்குரிய சேதியக் கலைஞரிடம் இப்படியொரு கேள்வி கேட்க நேர்ந்து விட்டதே என்பதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்'' என்று கூறித் தலைகுனிந்த முத்தரையர், சட்டென்று நிமிர்ந்தார். ''கடல் மல்லையில் அரைகுறையாய் நிற்கும் கணேசர் கோயிலை மீண்டும் தொடங்கி முடிக்க, சளுக்கிய விக்கிரமாதித்தன் முன்வந்தால் அவனுடைய வெற்றியை வரவேற்கத் தயார் என்று தாங்கள் சொன்னது உண்மைதானே?''

பரவாதிமல்லர் இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்தார். இதுவரையில் தமக்குப் புரியாமலிருந்த விஷயத்தை இந்த ஒரே வினாடியில், புரிந்து கொண்டவர்போல் குலுங்கிச் சிரித்த அவர், ''ம்......இனி அடுத்த கேள்வியையும் கேட்கலாமே!'' என்றார்.

முத்தரையரின் மூக்கு முனிவுற்றுச் சிவந்தது. ''அந்தக் கற்கோயிலைக் கட்டி முடிப்பதற்காக எல்லா உதவிகளையும் தானே முன்னின்று தருவதாக, ஆந்திர இளவரசி உத்தமசீலி உங்களிடம் சொன்னது உண்மைதானே?'' — ஆத்திரத்துடன் சொற்கள் வெளிப்பட்டன.

''மூன்றாவது கேள்வியொன்றும் கேட்கப் போகிறீர்கள் என்று நினைக்கிறேன்; அதையும் கேட்டு விடுங்கள்!''

''அப்படி அவளுடைய உதவிகளைப் பெறுவதாயிருந்தால் அந்தக் கணேசர் கோயிலைச் சமணர்களின் ஜினாலயமாக மாற்றியமைக்க வேண்டுமென்று அவள் நிபந்தனை விதித்ததும் உண்மைதானே?''

'ஆம்' என்று பலமாகத் தலையாட்டிய பரவாதிமல்லர் கள்ளங் கபடற்ற குழந்தைபோல் கலகலவென்று சிரித்தார். ''இதனாலெல்லாம் நான் பல்லவ நாட்டுக்கும் பரமேசுவர வர்மருக்கும் துரோகம் இழைத்து விட்டேன் என்றோ அல்லது துரோகியாக மாறப் போகிறேன் என்றோ நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள், அப்படித்தானே? ... இந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்கும் பொருட்டு நான் ஏதேனும் மறுமொழி கூறுவேன் என்று இப்போதைக்கு எதிர்பார்க்காதீர்கள். ஆனால், ஒன்றை மட்டும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென ஆசைப்படுகிறேன்: மனச்சாட்சியை விற்கத் துணியும் எந்தக் கலைஞனும் உண்மையான கலைஞனாயிருப்பதில்லை; அப்படிப்பட்ட கலைஞனிடம் கலாதேவி கோயில் கொள்வதுமில்லை.''

சேதியக் கலைஞர் சிரித்துக்கொண்டு தான் இப்படிச் சொன்னார் என்றாலும், அதில் தொனித்த வேதனைக் கமறலைப் புரிந்துகொண்ட முத்தரையர் மிகவும் சங்கடப்பட்டுப் போனார். ஆயினும் அவர் மனத்தில் பதிந்திருந்த சந்தேகக் கறை என்னவோ முற்றும் அழிந்துவிடவில்லை. சற்று நேர மௌனத்துக்குப் பின், ''சரி; இந்த விஷயத்தை இப்பொழுது விட்டு விடுவோம். ஆனால், இன்னொன்றுக்கு நீங்கள் அவசியம் விளக்கம் சொல்லித்தான் ஆக வேண்டும். உங்களை நம்பி, உங்களுடைய முழுப் பொறுப்பில் ஒப்படைத்திருக்கும் எங்கள் பரமேசுவரவர்மருக்கு ஆபத்து ஏற்படக்கூடிய வகையிலே அந்த வேங்கி நாட்டு இளவரசியை இங்கு ஏன் அழைத்து வந்தீர்கள்? அவளை அழைத்து வந்ததுமல்லாமல், சளுக்கியத் தளபதி வில்வேலியையுமல்லவா வரவேற்று உபசரித்திருக்கிறீர்கள்? இதற்கு நீங்கள் என்ன சமாதானம் கூற முடியும்?'' என்று படபடத்த குரலில் கேட்டார்.

''இவை நல்ல வினாக்கள். இவற்றுக்கு நான் அவசியம் மறுமொழி கூறியே ஆக வேண்டும்'' என்று புன்முறுவல் பூத்த பரவாதிமல்லர், அமைதியாகச் சொன்னார்: ''கேளுங்கள், அன்பரே! ஆந்திர இளவரசியையும் சளுக்கியத் தளபதியையும் என் இல்லத்தில் வரவேற்று உபசரித்து அனுப்பியதற்கு



# அவள் ஒரு கல்ஸானு குழந்தை

கொழு கொழுவென்ற...வலுவான கைகால்களமைந்த...' உண்மையிலேயே ஓர் அழகிய மதலை!...கொண்டாடத்தகு கன்னக்குழிவுகளுடன் உருண்டு திரண்ட உடற்பூரிப்பு... வேடிக்கை மற்றும் குறுகுறுப்புடன் கும்மாளமடிக்கிறது... அமைதியான திருப்தியுடன் பூரண நலத்தில் ஆனந்தமாக புன்னகை புரிகிறது! அவளின் பெருமிதமுடைய அன்னை, தன் குழந்தையின் உறுதியான கைகால்கள்...அவளின் கொழு கொழுவென்ற வளர்ச்சி இவற்றிற்காக, வைட்டமின் செறிவுறச் சேர்ந்த கால்சியம் கொண்ட "கல்ஸானு-டி"க்கு நன்றி செலுத்துகிறாள். அவள் கருவுற்றிருந்த மாதங்களின் போதும்—தன் பெருமைகொள் களிப்பின் செல்வத்தை அரவணைக்கும்போதும் ஒழுங்காக "கல்ஸானு-டி" உட்கொண்டு வந்தாள்—"கல்ஸானு-டி" அவள் குழந்தைக்கு வளரும் வயதில் வலுவான எலும்புகளும் பற்களும் உருவாக உதவும்.

# கல்ஸானு-டி

வைட்டமின் தீவிரச்சேர்க்கையுடைய கால்சியம்

கருவுற்றிருக்கும் தாய்மார்கள், குழந்தையை அரவணைக்கும் அன்னைகள் மற்றும் வளரும் குழந்தைகள் இவர்களுக்கு ஏற்றது.

உயிரினும் உயரியது!

# காரியர் "62

ஆம், உயிரினும் உயரியது!—"என் கண்ணின் கருமணி"...அதற்காக என் உயிரையும் அர்ப்பணிப்பேன்! மிகைபடக் கூறவில்லை—டிரக் ஓட்டிக்கு அவருடைய டிரக்தான் எல்லாமாகும்...அவர் ஜீவனோபாயம்.. அவர் டிரக் ஓட்டி டயரில் விரும்புவன யாவுமுடையது காரியர் "62".* காரியர் "62", புத்தம் புதிய சியெட் ட னைபற்றது—குளுமையான ஓட்டம் மற்றும் அதிக மைலேஜுக்கு ஏற்ப மூடப்படாத பக்கவாட்டு புதிக நீடித்த உழைப்பிற்கேற்ற ஆழ்ந்த டிரெட் அமைப்பு...மிக பத்திரமான டிரக் ஓட்டம்

## ‹சியெட்›

## காரியர் "62"—புத்தம் புதிய டயர்



சியெட் டயர்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்

* சில இடங்களில் இருப்பு பிரதமாகவுள்ளது.

ஒரு முக்கிய காரணம் உண்டு. அது பரமேசுவர வர்மரின் பாதுகாப்பை உத்தேசித்துச் செய்யப்பட்ட காரியம். அதாவது, என்னுடைய இல்லத்திலே பல்லவ மன்னர் புகலடைந்திருக்கிறார் என்ற இரகசியம் வெளிப்படாமல் இருக்க அது ஒரு கவசமாய் அமையும் என்று கருதியே அப்படிச் செய்தேன். துரதிருஷ்டவசமாக அந்த இரகசியம் வெளிப்பட்டாலும் அதைச் சளுக்கிய விக்கிரமாதித்தனோ அவனைச் சார்ந்தவர்களோ உடனடியாக நம்ப மாட்டார்கள். ஏனென்றால், என் இல்லத்திலே பரமேசுவரவர்மர் மறைந்திருப்பின் அவரது எதிரிகளை நான் வரவேற்று உபசரித்திருக்க மாட்டேன் என்று அவர்கள் எண்ணி ஏமாறலாம் அல்லவா? அத்துடன், கடந்த சில நாட்களாக இந்தப் பக்கமே மோப்பம் பிடித்துச் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் சளுக்கிய ஒற்றர்கள், வில்வேலியும் வேங்கி இளவரசியும் இங்கு வந்து போனதை அறிவார்களானால் தங்கள் கவனத்தை வேறு திசையில் திருப்பிக்கொண்டு போய் விடலாம். இதையெல்லாம் மனத்தில் கொண்டே அந்த விஷப் பரீட்சையை நான் நடத்தத் துணிந்தேன்.''

இருளடைந்து கிடந்த முத்தரையரின் முகம் இந்த விளக்கத்தைக் கேட்டுப் பளிச்சென்று மலர்ந்தது. ''கலைஞரவர்களிடம் ஏதேதோ கேட்டு மனம் நோகச் செய்து விட்டேன்; மன்னியுங்கள்'' என்று தாழ்ந்த குரலில் கூறித் தலை குனிந்தார் அவர்.

பரவாதி மல்லர் அவரை அன்புடன் ஏறிட்டு நோக்கி, ''மன்னிக்கவோ, மன்னிப்புக் கேட்கவோ இதில் ஒன்றுமில்லை, அன்பரே! மனிதன் எவ்வளவு பலவீனமானவன் என்பதை அவ்வப்போது அவனுக்கு உணர்த்தத்தான் அவன் மனத்தில் சந்தேகங்கள் முளைக்கின்றன. அவற்றை வாய்விட்டு வெளிப்படுத்தி விளக்கம் பெறும் போது பலவானாகிறான்; அப்படி விளக்கம் பெற அஞ்சி, உள்ளுக்குள்ளேயே வைத்து, ஒன்றைப் பத்தாகப் பெருக்கிக் கொள்ளும்போது, மேலும் மேலும் மெலிவடைந்து தேய்ந்து போகிறான்'' என்று இதமாகக் கூறியவர், ஒரு கண மௌனத்துக்குப் பின் துயரம் படிந்த குரலில், ''நான் இப்போது வருத்தப்படுவதெல்லாம், துடிப்பு மிக்க இளவரசரான கோவிந்தவர்மர் என்மீது தப்பபிப்பிராயம் கொண்டு விட்டிருக்கிறாரே என்பதற்காகத்தான்! வேங்கி இளவரசியுடனும் வில்வேலியுடனும் நான் பேசிக் கொண்டிருந்ததை அவர் அரைகுறையாக ஒற்றுக் கேட்டதால், நேர்ந்த விபரீதம் இது!'' என்று கரகரத்தார்.

''அது அவர் குற்றமல்ல, கலைஞரே! அந்தச் சூழ்நிலையில் யாரையும் அப்படித்தான் எண்ணத் தூண்டும்'' என்று பரிவுடன் கூறிய முத்தரையர், ''இருந்தாலும் இதுபோன்ற சமயங்களில் நாம் எச்சரிக்கையோடு நடந்து கொள்ள வேண்டியது அவசியம் என்றே சொல்வேன்'' என்றார்.

இதை மறுப்பவர்போல் மெல்லத் தலையசைத்தார் பரவாதிமல்லர். ''எச்சரிக்கையான நடத்தையைக் கொண்டே ஒருவனை உத்தமன் என்று கூறிவிட முடியாது. ஏனென்றால், விழிப்பு மிக்கவனிடம் உண்மைகள் குறைவாகவே இருக்கும். அவன் தன் விழிப்பான பேச்சாலும் நடத்தையாலும் தான் செய்யும் தவறுகளை எளிதில் மறைத்துவிடுவான்.''

## அத்தியாயம் இருபத்திரண்டு

# 'ஈசன் செயல்'

முத்தரையர் 'எழுந்து' சாளரத்து வழியே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பி, ''மன்னர் இன்னும் வரக் காணோமே!'' என்று முணுமுணுத்தவாறு உட்கார்ந்தார். பிறகு சட்டென்று எதையோ நினைத்துக்கொண்டவர்போல் நிமிர்ந்து, ''கலைஞரே, இதைக் கேட்க மறந்து விட்டேனே!.... ஆந்திர இளவரசி உத்தமசீலி இங்கு தங்கியிருந்தபோது நம் பரமேசுவர வர்மரைப் பார்த்திருப்பாளா?'' என்று ஒருவித அச்சக் குறுகுறுப்புடன் கேட்டார்.

''இரண்டு நாட்கள்வரை என் இல்லத்தில் தங்கியிருந்த அவள் அவரைப் பார்க்காமல் போக முடியுமா, அன்பரே? அவரை அவள் பார்த்து, அவர் யாரென்று தெரிந்து கொள்ள முயன்று, பின் யாரோ ஒரு சாதாரண மனிதன் என்ற முடிவோடு போக வேண்டுமென்பதற்காகத்தானே அவளை நான் இங்கு தங்கியிருக்க அனுமதித்தேன்! என் எண்ணப்படியே எல்லாம் நடந்து முடித்தது! பேரரசர் பரமேசுவர வர்மரைப் போக்கிடமற்றுப் புகல் அடைந்திருக்கும் ஒரு பராரிக் கலைஞனாக எண்ணிக் கொண்டு அவள் போயிருக்கிறாள்! இது நம் மன்னருக்கு எவ்வளவு பெரிய பாதுகாப்பாய் இருக்கும் தெரியுமா?''

என்று குறுநகை புரிந்து சொன்னார் பரவாதிமல்லர்.

இதைக் கேட்டுத் திருப்தியடைந்த முத்தரையர் மீண்டும் எழுந்து வெளியே எட்டிப் பார்த்துவிட்டு உட்கார்ந்தார்.

''சிற்றரசே! தங்களது ஆத்ம நண்பரான பழையாறைச் சோழர் தங்களுடன் இங்கு ஏன் வரவில்லை? தாங்களே அவரை அழைத்து வரவில்லையா? அல்லது....'' என்று தயக்கத்துடன் வினவினார் சேதியக் கலைஞர்.

முகத்தைச் சுளித்தவாறு சற்று நேரம் மௌனமாயிருந்த முத்தரையர் ஆத்திரம் செருமிய குரலில், ''நான் ஏன் அவர் வருவதைத் தடுக்கப் போகிறேன்? அவரேதான் இங்கு வர மறுத்து விட்டார்!'' என்றார். ''சிறையிலிருந்து தப்பிய கோவிந்தவர்மரைச் சந்திப்பதற்காக நானும் அவரும் ஒன்றாகவே மண்டகப்பட்டுக்குப் போனோம். கோவிந்தவர்மரையும் பார்த்தோம். இங்கு நடந்த சம்பவங்களையும் தாம் செய்து விட்டு வந்த காரியங்களையும் அவர் சொல்ல, அவற்றினால் ஏற்படக் கூடிய சிக்கல்களையும் சங்கடங்களையும் பற்றி நான் சஞ்சலப்பட — இப்படி நாங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்த போது, அதுவரை கலக பாவத்துடனேயே இருந்த பழையாறைச் சோழரின் போக்குத் திடீரென்று மாறுதல் அடைந்தது. சளுக்கியத் தளபதி வில்வேலியிடம் பரமேசுவர வர்மர் அகப்பட்டுக் கொள்ளும்படியான நிலைமை உருவாகி விட்டது என்பதை அறிந்தே அவர் அவ்வாறு குணபேத மடைந்தார். பல்லவ மன்னரை இனி நம்பிப் பயனில்லை என்ற முடிவுக்கு அவர் வந்திருக்க வேண்டும் — அதனால்தான், இங்குள்ள நிலைமையை அறியவும், ஆவன செய்யவும் நான் புறப்பட்டபோது என்னுடன் வர மறுத்து, பழையாறைக்கே திரும்பிப் போய் விட்டார்.''

இந்த விவரங்களைக் கேட்டுப் பெரிதும் கவலையடைந்தவராய்ச் சற்று நேரம் மௌனமாயிருந்த பரவாதிமல்லர், ''அப்படியானால் பழையாறைச் சோழரைப் பற்றி நீங்கள் இப்போது என்ன முடிவில் இருக்கிறீர்கள்?'' என்று தணிந்த குரலில் கேட்டார்.

''பலவீனமான உதவினனை நம்புவதைவிட, பலம் பொருந்திய எதிரியின் நட்பைத் தேடிக் கொள்வது நல்லது என்ற முடிவுக்கு அவர் வந்து விட்டிருக்கிறார் என்றே நான் நினைக்கிறேன். இனிமேல் அவரது கூட்டுறவை நாங்கள் எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனம் என்றும் எனக்குத் தோன்றுகிறது. எந்த விநாடியும் பழையாறையிலிருந்து ஏதேனுமோர் அதிர்ச்சி தரத்தக்க சேதி வரலாம் — அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை'' என்றார் முத்தரையர்.

வாயடைத்த நிலையில் உட்கார்ந்திருந்த பரவாதிமல்லர் தம் பார்வையை மேலே உயர்த்தி ஒரு கணம் ஏதோ யோசித்து விட்டுப் பூஞ்சிரிப்புடன் திரும்பி, ''சந்திரலேகைச் சிற்றரசருக்கு நான் புத்தி சொல்வதாக நினைக்கக் கூடாது. பழையாறைச் சோழர் ஒரு விசித்திரமான மனிதர். எதையோ நினைப்பார்; அதைச் சாதிக்க என்னமோ செய்வார். அவரைப் புரிந்து கொள்வது மிகக் கடினம். புரிந்து கொண்டதாக எண்ணி அவசரப்பட்டு அவர்மீது எவ்வித முடிவையும் இதற்குள் எடுக்க வேண்டாம். வலு மிக்க வேங்கை மரத்தை உடைத்தெறிய வேண்டுமானால் சுள்ளி மிலாறுகள் ஒரே கட்டாக இருக்க வேண்டும். அவை தமக்குள் முரண்டிக்கொண்டு தனித் தனியே பிரிந்தால் அவற்றின் கூட்டுப் பலம் சிதறுண்டு போகும். விளைவு, பரிதாபத்துக்குரியதாகும்'' என்றார் மிக மிக நிதானத்துடன்.

பெரும்பிடுகு முத்தரையர் இதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் தலையை ஆட்டிக் கொண்டு மௌனமாகவே இருந்தார். இந்தச் சமயம் அவரைப் பேசாதிருக்க விட்டால் அவரது சிந்தனை மேலும் பல விபரீத முடிவுகளையே காணச் செல்லும் என்று எண்ணிய பரவாதிமல்லர், அவருடைய கவனத்தைத் திருப்பும் பொருட்டு, ''ஆமாம், அன்பரே! நீங்கள் இங்கே பரமேசுவர வர்மரின் நிலைமையை அறிந்து போக மட்டும்தான் வந்தீர்களா? அல்லது:..'' என்று இழுத்தாற்போல் வினவினார்.

''நான் வந்ததற்கு அதுதான் காரணம் என்றாலும், அதைவிட இன்னொரு முக்கியமான விஷயத்துக்காகவும் அவரைக் காண வந்தேன்'' என்று எங்கோ யோசனையாகச் சொன்னார் முத்தரையர்.

''அப்படியானால் அவ்விஷயமாகப் பல்லவ மன்னரைப் பார்த்தீர்களா?''

''பார்த்தேன் கலைஞரே, நன்றாகப் பார்த்தேன். என்னைப் பார்த்ததும் 'நலமா?' என்றார்; 'நம் நண்பர்களும் பிறரும் நலம்தானே' என்று கேட்டார்; 'நானும் நலமே' எனத் தெரிவித்தார்; 'அதற்குமேல் ஒன்றுமில்லை' என்றார்; 'நீ போகலாம்' என்றும் கூறிவிட்டார்.''

''இவ்வளவும் அவர் பேசினாரா? நீங்கள் இருவரும் நேருக்கு நேர் சந்தித்துப் பேசியதை நான் இன்னும் பார்க்கவே இல்லையே?''

''ஆமாம்; ஆனால், இதையெல்லாம் அவர் என்னிடம் வாய் திறந்து பேசிச்



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414, மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 15-11-1962 ... முதல் ஏலத் தேதி 17-11-1962

| 25 மாதங்கள் | மாதாந்திரச் சீட்டுகள் (3-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள்: கான்ஸ்டன் ஹவுஸ், 1/24, ஆஸப் அலி ரோடு, புது டில்லி-1 ★ பாலுஸேரி பில்டிங் 14-A/4, W. E. A. கரோல்பாக், புது டில்லி-5 ★ 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டில்லி-3 பெங்களூர் கிளை ஆபீஸ்: 186, முதல் மாடி, ஆருவது கிராஸ், காந்தி நகர், பெங்களூர்-9 ★ பம்பாய் கிளை ஆபீஸ்: "வீணு விஹார்" 17-A, லயான் மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22 ★ கல்கத்தா கிளை ஆபீஸ்: 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**




**ARUNAGIRI VILAS SOAP NUT POWDER, KARAIKUDI.**

சொல்லவில்லை; ஒரே ஒரு பார்வைதான் பார்த்தார் — அந்தப் பார்வையே இவ்வளவையும் பேசி முடித்தது. பிறகு, அவர் போய் விட்டார்.''

பராவாதிமல்லருக்குச் சிரிப்பு வெடித்துக் கொண்டு வந்து விட்டது. முத்தரையரோ வேதனையால் முகம் வெந்து சிவந்தார்.

''பல்லவ மன்னரிடம் என்ன விஷயமாகப் பேச வந்தீர்கள், அன்பரே?'' என்று கேட்டு மீண்டும் அவரது சிந்தனையைக். கலைக்க முயன்றார் சேதியக் கலைஞர்.

'அந்த விஷயத்தை இவரிடம் சொல்லலாமா, வேண்டாமா?' என்று யோசிப்பவர் போல் ஒரு விநாடி அவர் முகத்தையே உற்றுப் பார்த்த முத்தரையர், 'அதைச் சொல்லலாம்' என்று தீர்மானித்தவராய் நிமிர்ந்து உட்கார்ந்தார். ''அது ஒரு பரம இரகசியமான விஷயம். அதை நீங்களும் தெரிந்து வைத்துக் கொள்வது நல்லதென்றே நினைக்கிறேன். பல்லவ — சளுக்கியப் போருக்குப் பின் நாட்டின் நிலைமை மிகவும் சீர்குலைந்து விட்டிருக்கிறது. மக்கள் சொல்லொணா அவதிக்குள்ளாகித் தவிக்கின்றனர். ஆட்சியைக் கைப்பற்றிய விக்கிரமாதித்தன் அதை நிலைநிறுத்திக் கொள்வதற்காக ஒரு புதிய காரியத்தில் இப்போது இறங்கத் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறான். அதற்காகவே தன் தம்பி மகளான ஆந்திர இளவரசியை இங்கு வரவழைத்திருக்கிறான். அந்த விவரத்தைப் பிறகு ஒரு சமயம் சொல்கிறேன். அவளைக் கொண்டு அவனுடைய அந்தத் திட்டம் வெற்றி பெறுமானால், அப்புறம் இந்தப் பல்லவ நாட்டை அவனிடமிருந்து கைப்பற்றுவதென்பது வெறும் கனவாகவே ஆகிவிடும். அது மட்டுமல்ல; இந்தப் பழம் பெருமை வாய்ந்த தமிழ் நிலத்தின் இருமிக்க வடிவமே அழிந்து, ஒரு கோர ரூபத்தில் அது காட்சியளிக்கத் தொடங்கிவிடும். அந்த நிலைமையை நாம் காணத் தயாரா? அப்படித் தயார் என்றால், பரமேசுவரவர்மரை இத்தனை பாதுகாப்போடு மறைத்துப் பராமரிக்க வேண்டிய அவசியம் என்ன? குடிமையுரிமையை இழந்து புழுவினும் கீழாகப் புன்மை வாழ்வு வாழும் பல்லவக் குடிமக்கள் தமக்கு நேர்ந்த — நேரவிருக்கும்—அந்தக் கொடிய . நிலையிலிருந்து மீளும் பொருட்டு இப்போதே பொங்கியெழத் தயாராக இருக்கிறார்கள். ஆனால்,மேய்ப்பனில்லா ஆடுகள் மலையேற முடியுமா? தங்கள் மேய்ப்பன், மலையுச்சிக்குத் தங்களையெல்லாம் ஓட்டிக்கொண்டு போக வருவான், வருவான் என்று ஒவ்வொரு நாளும் நம்பிக்கையோடு அவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின் நம்பிக்கை நலிவடையு முன்னே மேய்ப்பன் அவைகளை ஒன்று திரட்டிக் கொள்ள முன்வர வேண்டும். அப்படி வரவில்லையாயின் அந்த ஆடுகள் மட்டுமல்ல; அவை அடைந்து கிடக்கும் பட்டியும் சிதறுண்டு அழிந்து போகும். இந்த உண்மையைப் பரமேசுவரவர்மரிடம் எடுத்துக் கூறி, இதோ இந்தத் திருமுக ஓலையில் அவரது கைச்சாத்தைப் பெற்றுப் போகவே நான் இங்கு வந்திருக்கிறேன். இந்த ஓலையில் அவர் கைச்சாத்து இட்டு விட்டாரானால், மலையேறத் துடிக்கும் ஆடுகளை ஒன்று திரட்டும் வேலையையும் அவற்றைக் கொண்டு அந்த மலையுச்சியிலே ரிஷபக் கொடியைப் பறக்கவிடும் பணியையும் நானும் கோவிந்தவர்மருமே ஏற்று முடிக்க முயல்வோம்.''

முத்தரையரின் இந்த உணர்ச்சி மிக்க பேச்சைக் கேட்டுப் பிரமித்து உட்கார்ந்திருந்த பராவாதிமல்லர் ஏனோ திடுக்குற்று எழுந்து வெளியே எட்டிப் பார்த்தார். அதே சமயம், அந்தக் கலைக்கூடத்தின் முற்பகுதியில் உயிர்ச் சிருஷ்டிகளாய் உருவாக்கி நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த பல்வேறு வகையான செய்புச் சிலைகளுக்கிடையேயிருந்து ஓர் அழகிய வாலிபன் மெள்ள எழுந்து நின்றான். அவன் வேறு யாருமல்ல; பரமேசுவரவர்மன்தான்!

இவ்வளவு நேரம் அவன் இங்கேயா அமர்ந்திருந்தான்? எப்போது இங்கு வந்தான்? பராவாதிமல்லரும் பெரும்பிடுகு முத்தரையரும் அவன் வந்ததைப் பார்க்கவே இல்லையே! பேச்சு மும்முரத்தில் அவனை அவர்கள் கவனிக்கவில்லையா? அப்படியானால் அவர்களுடைய பேச்சு முழுவதையும் அவன் கேட்டுக்கொண்டுதான் இருந்தானா?....

பரபரப்புடன் முத்தரையர், பரமேசுவரவர்மனை நோக்கிச் செல்ல முயன்றபோது பராவாதிமல்லர் அவரைத் தடுத்துக் காதருகில் குனிந்து ஏதோ இரகசியமாகச் சொன்னார். அடுத்த கணம், முத்தரையரின் முகம் பீதியால் கறுத்துச் சிறுத்தது. அவர் சரேலென்று பாய்ந்து போய் அந்த ஓவியச் சிலைக்குப் பின் ஒளிந்து கொண்டார்.

பராவாதிமல்லர் அங்கிருந்து வெளியே நடந்தார். அப்படிச் செல்லும்போது, சிலைகளிடையே நின்றிருந்த பரமேசுவரனுக்கும் ஏதோ சமிக்ஞை செய்து விட்டே சென்றார்.

''வணக்கம், ஐயா! சளுக்கியத் தளபதி வில்வேலியவர்களின் சமூகத்திலிருந்து நாங்கள் வந்திருக்கிறோம்.''

கலைக்கூடத்தின் வாசலில் புன்னகையுடன் நின்ற சேதியக் கலைஞர் கம்பீரமாக நிமிர்ந்தார். அங்கே, சளுக்கிய வீரர்கள் இருவர், விநயத்துடன் தலைவணங்கி நின்றனர். அவர்களுக்குப் பின்னால் இரட்டைப் புரவிகள் பூட்டிய ஓர் அழகான ரதம் நின்றுகொண்டிருந்தது.

"என்ன சேதி?" என்று அமைதியாக விளித்தார் சேதியக் கலைஞர்.

"எங்கள் தளபதியார் தங்களுக்கு ஓர் ஓலை கொடுத்தனுப்பியிருக்கிறார், ஐயா!" என்று பணிவுடன் கூறிக்கொண்டே ஓலை நறுக்கு ஒன்றை அவரிடம் நீட்டினான் சளுக்கிய வீரன்.

அந்த ஓலையைப் பெற்றுப் படித்துப் பார்த்த பரவாதிமல்லரின் முகத்தில் எவ்வித சலனமும் ஏற்படவில்லை. சற்றுநேரம் எதைப் பற்றியோ ஆழ்ந்து யோசித்தவாறு நின்ற அவர், "சரி; இங்கேயே இருங்கள்" என்று சொல்லிக் கலைக்கூடத்துக்குள் திரும்பி நடந்தார்.

"என்ன கலைஞரே, யார் அவர்கள்?" என்று திகிலுடன் கேட்டுக்கொண்டே ஓவியத் திரைக்குப் பின்னாலிருந்து அவசரமாக வந்தார் முத்தரையர்.

ஆனால், பரவாதிமல்லரோ அவரிடம் ஏதும் சொல்லாமல், அங்கு அமைதியாக உலாவிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனிடம் அந்த ஓலையைக் கொடுத்து விட்டுத் தலையைத் தாங்கிப் பிடித்தவண்ணம் சோர்வுடன் போய் ஒரு தூணில் சாய்ந்து நின்றார்.

பரமேசுவரவர்மன், ஓலையிலிருந்த சேதியைத் தன் வாய்க்குள்ளாகவே படித்துப் பார்த்து விட்டு அதை முத்தரையரிடம் நீட்டினான். அவன் முகத்தில் ஒரு சுந்தரப் புன்னகை ஊர்ந்து மறைந்தது. தன் கழுத்தில் உருத்திராக்க மணிச்சரம்போல் தவழ்ந்த சவுக்கைக் காய் மாலையை மெல்லத் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

"சளுக்கியத் தளபதி வில்வேலி அல்லவா இவ்வோலையை எழுதியிருக்கிறான்!" என்று முனகிக்கொண்டே அவசரப் பரபரப்புடன் வாங்கிப் படித்தார் முத்தரையர். அவர் முகம் வெளிறியது. கரங்கள் நடுங்கின. கண்களில் செவ்வரி படர்ந்தது. "இது என்ன வேடிக்கை! இங்கே ஓவியக் கலைஞன் யார் இருக்கிறான்?" என்று குமுறிக் கேட்டார்.

"பல்லவ மன்னர் பரமேசுவர வர்மரைத்தான், ஓவியராக எண்ணிக் குறிப்பிட்டிருக்கிறான் வில்வேலி!" என்றார் பரவாதிமல்லர் அடைத்த குரலில்.

"நம் மன்னர்பிரானை ஓவியன் என்று அவன் எப்படிக் குறிப்பிடுவான்?"

"ஆந்திர இளவரசியின் வாயிலாகத் தெரிந்து கொண்டிருக்கலாம்."

"அவன் எவ்வாறு அவரை ஓவியக் கலைஞன் என்று நிர்மானித்திருப்பான்?"

"மூன்று நாட்களுக்கு முன், இந்த ஓவியத் திரைக்கு எதிரே அவர் உலாவிக் கொண்டிருந்ததைப் பார்த்த நீங்கள், அவரே இவ்வோவியத்தை வரைந்திருப்பார் என்று எண்ணிக் கொள்ளவில்லையா? அதுபோல் அவளும் அவரை இங்கே பார்த்தபோது அப்படியொரு முடிவுக்கு வந்திருக்கலாம்."

"பல்லவ மன்னர்தான் ஓவியக் கலைஞனாக இங்கு புகலடைந்திருக்கிறார் என்று அவள் தெரிந்து கொண்டிருப்பாளோ? அந்த விவரத்தை வில்வேலியிடமும் சொல்லி விட்டிருப்பாளோ?"

"அப்படிச் சொல்லியிருந்தால், இங்கே இந்த அழகிய ரதம் வந்திருக்காது; ஒரு பெரும் படையே திரண்டு வந்திருக்கும்."

"'தங்களிடமுள்ள ஓவியரைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வையுங்கள்' என்று இத்தனை விநயத்துடன் வில்வேலி கேட்டிருப்பது ஏன்?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை, அன்பரே!"

"இப்போது நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?"

"வில்வேலியின் வேண்டுகோளுக்கிணங்க என்னிடமுள்ள 'ஓவியரை' அனுப்பித்தான் ஆகவேண்டும்."

"என்ன! நம் மன்னரை அனுப்பப் போகிறீர்களா ?"

"அதைத் தவிர வேறு வழியில்லை."

"நான் அதற்கு ஒருகாலும் சம்மதிக்க மாட்டேன்!"

"அவரை அனுப்ப மறுத்தால், வீணான தொல்லைகளை நாமே விலை கொடுத்து வாங்குவதுபோல் ஆகிவிடும்!"

"பரமேசுவர வர்மருக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால்?"

"அனுப்பாமலிருந்தால் அதைவிடப் பெரிய ஆபத்து அவருக்கு நேரலாம்."

தலையில் ஓங்கி அறைந்துகொண்டு அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டார் முத்தரையர். கண் கலங்க முகத்தைப் பொத்திக்கொண்டு வேறு பக்கம் திரும்பினார் பரவாதிமல்லர்.

இதுவரை மௌனமே உருவாக உலாவிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன், இப்போதுதான் முதன் முதலாக வாய் திறந்து பேசினான்: "எல்லாம் ஈசன் செயல்! நான் பல்லவபுரம் சென்று வருகிறேன்!"

கம்பீரக் கலை சொட்ட நடந்து சென்ற அவன், அந்த ரதத்தில் ஏறி அமர்ந்தான். சகட ஒலியெழுப்பி விரைந்தது ரதம்.

(தொடரும்)

ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி ...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர் மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப் பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பச்சிளம்ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் திட வளர்ச்சி பெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச் சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.




இலவசம்: 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலப்பிரதி).. விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல்...தபால் செலவுக்காக 50 ந. பைசா தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க், தபால் பெட்டி எண் 2120, சென்னை-2.

OS.10-X31-M. TM

எப்படி வேலை செய்கிறது ?

## சைக்கிள் பம்ப்

"ரமணி, சைக்கிளை எடுத்து வெளியில் வைத்துக் காற்று இருக்கிறதா என்று பார்த்து அடித்து வை" என்றார் அவன் அப்பா. ரமணி சைக்கிள் டயரைத் தொட்டுப் பார்த்தான். காற்று இல்லை. உடனே சைக்கிள் பம்ப்பை எடுத்து டியூபை அத்துடன் இணைத்துக் காற்றடிக்கலானான். சட்டென்று ஒரு யோசனை தோன்றியது ரமணிக்கு. இதன் வழியாகக் காற்று எப்படி உள்ளே போகிறது. இது எப்படி இயங்குகிறது என்பதை அறிய ஆவல் கொண்டான். சைக்கிள் பம்பைக் கழற்றி ஆராய ஆரம்பித்தான்.

ரமணியைப் போலவே நீங்களும் கூட அது எப்படி வேலை செய்கிறது என்றறிய ஆவலுடன் இருப்பீர்கள் இல்லையா? காற்றின் அழுத்தத்துக்கு எத்தனையோ அபூர்வமான சக்திகள் உண்டு என்று உங்களுக்குத் தெரியும். இந்த அழுத்தம் செய்யும் அற்புதங்களில் ஒன்றுதான், வெளியிலிருக்கும் காற்றை சைக்கிள் டியூபுக்குள் தள்ளுவது. சைக்கிள் பம்பினுள் தோல் வாஷர் இருக்கிறதே. இதுதான் காற்றை உள்ளே தள்ளுவதற்கு உதவுகிறது. பிஸ்டனை இயக்கும் ஒரு இரும்புக் குச்சியின் நுனியில் இந்த வாஷர் இணைக்கப்பட்டிருக்கிறது. பிஸ்டனை உள்ளே அழுக்கும் போது பம்பினுள்ளிருக்கும் காற்றும் அழுக்கப்படுகிறது. வெளியேற முயலும் காற்று வாஷரைத் தாக்க அது நிமிர்ந்து இடைவெளி இல்லாமல் மூடிக் கொண்டு விடுகிறது (i). அழுத்தப்பட்ட காற்று வேறு வழியின்றி ரப்பர் டியூப் வழியாகச் சைக்கிள் சக்கரத்துக்குப் போகிறது. (அங்கிருந்து அது வெளியேற முடியாமல் நிறைப்படுத்தச் சக்கரத்தில் ஒரு வால்வ் டியூப் இருக்கிறது. அது வேறு தனிக் கதை.) இனி பிஸ்டனை வெளியே இழுக்கும் போது குழாயின் மேல் பக்கத்திலுள்ள காற்று கீழ்ப் பக்கத்திலிருக்கும் சூனியப் பிரதேசத்துக்கு விரைந்து வருகிறது. அப்போது வாஷர் வளைந்து கொடுக்க (ii) காற்று குபு குபுவென்று அங்கு நிரம்புகிறது. மறுபடியும் பிஸ்டனை உள்ளுக்குத் தள்ள, வாஷர் நிமிர்ந்து வழியை அடைத்துக் கொள்ள, எல்லாம் பழையபடி




நடைபெறுகின்றன. இதுதான் சைக்கிள் பம்பினுள் நடைபெறும் காரியம்.

வாஷரைத் திருப்பிப் போட்டால் காரியம் எதிர்த் திசையில் நடக்கும். ஏதாவது ஒரு பாத்திரத்திலுள்ள காற்றை வெளியேற்ற வேண்டுமானால் சைக்கிள் பம்பிலுள்ள வாஷரைத் திருப்பிப் போட்டுப் பம்ப் செய்தால் அந்தப் பாத்திரத்திலுள்ள காற்று வெளியேற்றப்பட்டு அங்கு சூனியப் பிரதேசம் ஏற்பட்டுவிடும்.



### உங்கள் ஆல்பத்துக்கு

இந்த நடன சிங்காரியைப் பார்த்தீர்களா? சயாம் தேசத்துக் கோயிலில் நடனம் ஆடும் நங்கை இவள். சயாம் தேசத்து நடனம் நம் பரத நாட்டியத்தைப் போல நன்றாக இருக்கும். இந்தச் சயாமியப் பெண்ணை உங்கள் ஆல்பத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்.

### தெரிஞ்சுக்கோ!

★ துருக்கி தேசத்திலுள்ள அங்கோரா ஜில்லாவில் வாழும் பூனை, நாய், முயல், ஆடு இவைகளுக்கு நீளமாகவும் பட்டுப் போன்றதுமான ரோமம் வளர்கிறது. ஆனால் இவைகளை இந்த இடத்திலிருந்து வேறு எங்காவது கொண்டு போய் வளர்த்தால் இவைகளுக்குள்ள இந்தத் தன்மை போய் விடுகிறது. ரோமம் நீளமாக, வழவழப்பாக வளர்வதில்லை.

★ பிரிட்டிஷ் ராணுவத்தில் 52 வருஷங்கள் ஒரு ராணுவ அதிகாரி உழைத்தார். அவரது பெயர் 'ஜெனரல் ஜேம்ஸ் பாரி' என்பது. இந்த 'இவர்' ஒரு 'பெண்'. இவர் 'இவள்' என்பது இறக்கும் வரை யாருக்கும் தெரியாது. தான் ஒரு பெண் என்பதைப் பிறர் அறியாதபடி; ஆண்களிலேயே மிக்கத் திறமையும் தைரியமும் வாய்ந்தவர்கள் வகிக்கும் ராணுவப் பதவியை வகிக்க


அமெரிக்கா


பிரான்ஸ்


ஜெர்மனி


நார்வே


கானடா


பிரிட்டன்


ரஷ்யா


மலேயா

குற்றங்கள் நடக்காமல் பார்த்துக் கொள்ளுவதும் பிறருக்கு உதவியாக இருப்பதும் போலீஸ்காரர்களின் வேலே. நம் நாட்டுப் போலீஸ்காரர்களும் அவர்கள் உடையும் உங்களுக்குத் தெரியும். ஒவ்வொரு நாட்டுக்கும் போலீஸ் படை உண்டு. நாட்டுக்கு நாடு போலீஸ்காரர்களின் உடையில் மாறுதல் இருக்கும். இந்தப் பக்கத்தில் பல தேசத்துப் போலீஸ்காரர்களே உங்களுக்காகக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறேன். அவர்களின் உடை அமைப்பில் உள்ள மாறுதல்களேப் பாருங்கள். உங்கள் ஆல்பத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டிய படம்தான் இதுவும்..

ஆப்பிரிக்கா
(நேடு)



பிஜித்தீவு



அமெரிக்கா
(ஸ்டேட் ட்ரூப்பர்)



பெருவியன்



மெக்ஸிகோ



துருக்கி



பாகிஸ்தான்



பார்படாஸ்
(துறைமுகப் போலீஸ்)






# அறிவுள்ள அடிமை



பொருள்களை விலை கொடுத்து வாங்குவது போலப் பண்டைக் காலத்தில் மனிதர்களையே விலை கொடுத்து வாங்கி · அடிமைகளாக்கிக் கொண்டிருந்தார்கள். இந்தப் பழக்கம் இரேக்க, ரோமானிய சாம்ராஜ்யங்களில் மிகவும் பிரபலமாக இருந்தது. இங்கே உங்களுக்கு நான் இரேக்க நாட்டுப் பிரபல அடிமை ஒருவனைப் பற்றிச் சொல்லப் போகிறேன். நான் சொல்லும் இந்த அடிமை பலமற்றவன். சின்ன உருவத்தினன். ஆனால் சிரித்த முகம். அவலட்சணமான தோற்றம்.

ஒரு பெரிய பணக்கார இரேக்க வியாபாரியின் அடிமையாக இருந்தான் இவன். இந்த வியாபாரி ஒரு தடவை வியாபார விஷயமாக வெகு தூரத்திலுள்ள ஒரு நகரத்துக்குச் செல்லத் தீர்மானித்தார். ஏராளமான மூட்டை முடிச்சுக்கள் தயாராயின. இருபது அடிமைகளைத் தன்னோடு அழைத்துச் செல்ல முடிவு செய்தார் வியாபாரி. ஒரம்பும் சமயமும் வந்தது. அப்போது தன் அடிமைகளைப் பார்த்து "நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு மூட்டையைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் ஒன்று, இங்கு இருபது மூட்டைகள் உள்ளன. யார் எதை எடுத்துக் கொள்ளுகிறீர்களோ அவர்கள் கடைசி வரை அந்த மூட்டையைத்தான் சுமந்து வர வேண்டும்" என்று கட்டளையிட்டார்.

அடிமைகள் விழுந்தடித்துக் கொண்டு மூட்டைகளின் மீது போய் மொய்த்துக் கொண்டார்கள். ஒரே ஒரு அடிமை மட்டும் இந்தச் சண்டையில் கலந்து கொள்ளவில்லை. அவன்தான் நான் கூறிய அவலட்சணச் சின்ன அடிமை. கடைசியில் மிஞ்சியது ஒரு மூட்டை. அது ரொம்பப் பெரிய மூட்டை. அவன் உயரம் இருந்தது அது. அதற்காக அந்தச் சின்ன அடிமை முகம் சுளிக்கவில்லை. அவனைப் பார்த்து மற்ற அடிமைகள் கடகடவென்று சிரித்தார்கள். "சரியான முட்டாளடா நீ. நல்ல பெரிய மூட்டை இது. கடைசி வரை தூக்கி வரவேண்டும் அப்பா" என்று கேலி செய்தார்கள்.

மூட்டையின் பளு அழுத்தியது. அப்போதும் அந்தச் சின்ன அடிமை சிரித்த முகம் மாறாமல் "பரவாயில்லை. இதையும் யாராவது தூக்கித் தானே ஆகவேண்டும். தவிர இந்த மூட்டையில் ஒரு மந்திர சக்தி இருக்கிறது. சீக்கிரமே நீங்கள் எல்லாரும் 'அந்த மூட்டையை நாம் எடுத்துக் கொள்ளாமல் போனோமே' என்று வருத்தப்படப் போகிறீர்கள்" என்றான் அவலட்சண அடிமை.

பிரயாணம் தொடங்கியது. காடு, மலை, பாலை எல்லாம் நடந்து கடக்க வேண்டியிருந்தது. பிரயாணத்தின் போது மற்ற அடிமைகள், சின்ன அடிமையின் மூட்டையில் ஏற்படும் மாறுதலைக் கண்டு திகைத்தார்கள். அந்த மூட்டை நாளுக்கு நாள் சுருங்கிக் கொண்டே வந்தது. கடைசியில் சின்ன அடிமை கையை வீசிக் கொண்டு சுமை ஏதுமின்றி நடந்து வந்தான். அப்போதுதான் அந்தச் சின்ன அடிமை எத்தனை புத்திசாலி என்பது அவர்களுக்குத் தெரிந்தது. தங்கள் முட்டாள்தனத்தை எண்ணி வெட்கப்பட்டார்கள். சின்ன அடிமை தூக்கி வந்த பெரிய மூட்டையில் இருந்தது என்ன தெரியுமா? பிரயாணத்தின் வழிநடைக்கான உணவுப் பொருள்! ஒவ்வொரு வேளை சாப்பாட்டுக்குப் பிறகும் அதன் பருமன் குறையத் தானே வேண்டும். போக வேண்டிய ஊரை அடையுமுன் சின்ன அடிமையின் மூட்டை காலியாகி விடவே வெறும் சாக்கைத் தோளில் போட்டுக் கொண்டு நடந்தான் அவன். மற்றவர்கள் சுமந்ததோ வியாபாரப் பொருள்கள். மூட்டை சிறியதானாலும் ஆரம்பத்தில் இருந்த அதன் கனம் குறையவே இல்லை. பிரயாணத்தின் களைப்பால் அதன் பளு கூடிவிட்டதாகக் கூடத் தோன்றியது அவர்களுக்கு.

இந்தச் சின்ன அடிமையின் சாதுரியத்தையும் அறிவாற்றலையும் பற்றி இப்படி எத்தனையோ கதைகள் சொல்லலாம். இவனுடைய திறமையையும் அறிவையும் கண்டு வியந்த வியாபாரி இவனுக்கு விடுதலை வழங்கினார்.

சின்ன அடிமைக்கு விடுதலை கிடைத்தது. ஆனால் வயிறு வளர்க்க வழி தெரியவில்லை. அடிமையாக இருந்த அவனுக்குத் தெரிந்ததெல்லாம் கதை சொல்லுவதுதான். ஆகவே இரேக்க நாட்டு நகரங்களின் கடை வீதிகளில் நின்றபடி தனக்குத் தெரிந்த கலையான கதை சொல்லும் தொழிலைக் கொண்டு வயிறு வளர்த்து வரலானான். கொஞ்ச நாளில் இரேக்க நாடு முழுவதும் இந்த அற்புத அடிமையின் அழகான கதைகளைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. அவன் சொல்லும் கதைகளில் புதைந்து கிடக்கும் தத்துவங்களை, நீதிகளை எண்ணி எண்ணி வியந்தார்கள் மக்கள்.

· எழுதவோ படிக்கவோ தெரியாத ஆனால் ஆயிரக்கணக்கான கதைகளைச் சிருஷ்டித்த இந்த அடிமையின் பெயர் என்ன தெரியுமா? ஈசாப். ஈசாப் நீதிக் கதைகளைப் பற்றி உங்களுக்கு நான் சொல்லவா வேண்டும்? நம் நாட்டுப் பஞ்சதந்திரக் கதைகளைப் போன்றதுதான் ஈசாப் நீதிக் கதைகள்.



## அத்தியாயம் 22

## "ஐயோ! பிசாசு!"

நிலவொளி கூட இல்லாத கும்மிருட்டில் ஒற்றையடிப் பாதை வழியே நடந்து சென்ற வடிவேலுவுக்குத் 'திக் திக்'கென்று இருதயம் அடித்துக்கொண்டது. கதிரேசன் கட்டிக்காட்டிய விளக்கொளியை இலக்காகக் கொண்டு நடந்தவனுக்குச் சற்றுத் தூரம் போனதும் அந்தத் தீபமும் அணைந்து விடவே, மனத்தை ஏதோ கவ்வி விழுங்குவது போலிருந்தது. தன் தேகம் நடுங்குவது பயத்தினால் அல்ல; சில்லென்ற கடற் காற்று வீசுவதினால்தான் என்று அடிக்கொருதரம் கூறிக் கொண்டான்.

உள்ளத்துக்குத் தெம்பு ஊட்டுவதற்காக அவன் குமாரியின் நெஞ்சழுத்தத்தைப் பற்றி நினைத்தான். சிறிதேனும் அச்சமடைந்ததாக அவள் காண்பித்துக் கொள்ளவில்லையே? கை கால்களைக் கட்டிப் போட்ட அவன் மீது ஏற்பட்ட கோபத்தினால் முகத்தை வேறு புறமாய்த்

திருப்பிக் கொண்டாளே ஒழிய அவன் எதிர்பார்த்தது போல் அவள் கண்ணீரும் கம்பலையுமாக அவனிடம் மன்றாடவில்லை. காரின் கண்ணாடி ஜன்னல்களையெல்லாம் உயர்த்தி மூடிக் கதவுகளைப் பூட்டிய போதுகூட அவள் கலக்கமடைந்ததாகத் தோன்றவில்லை. "இந்த அளவுக்குத்தானா உங்களால் என்னை அவமானப்படுத்த முடியும்? அல்லது இன்னும் ஏதாவது பாக்கி வைத்திருக்கிறீர்களா?" என்று ஏளனமாய்த்தான் கேட்டாள். என்றாலும் கூச்சல் போட்டு அவள் தன் தகப்பனாரை எச்சரித்துவிட முடியும் என்பதால் வடிவேலு முன் ஜாக்கிரதையாக இருக்கத் தீர்மானித்தான். சத்தம் வெளியே கேட்காதவாறு காரின் ஜன்னல்களைச் சாத்திவிட்டான். கையும் களவுமாகக் கதிரேசனைப் பிடித்து விட வேண்டும் என்கிற ஆவலில் நடந்தான்....

எதிரே திரை போல் ஏதோ நிற்பதாகத் தோன்றவே கைகளால் தடவிப் பார்த்துக் கதிரேசன் குறிப்பிட்ட பர்ணசாலையின் மரச் சுவர்தான் அது எனத் தெளிந்தான். பொங்கிச் சரியும் அலைகளின் ஓசை அருகே கேட்டது. கடலின் மேல் ஒரு விளக்கொளி மினுமினுத்தது. ஏதோ ஒரு படகு அலைகளின்மேல் எம்பி விழுவதினால்தான் அந்த விளக்கொளி அணைவதும் எரிவதுமாய் இருப்பது போல் தனக்குத் தென்படுகிறதென்று நினைத்தான். அந்த மரக்கலம் இந்த இடத்தில்தான் கரை தட்டுமென்றும் அது இங்கே வந்து சேர ஏதேனும் சமிக்ஞைகள் காட்டப்படும் என்றும் அவன் கருதினான்.

அதே கணத்தில் எண்ணெய் இடப்படாத துருப்பிடித்த கீல்களுடன் கூடிய கதவு மெல்லத் திறந்து கொள்ளும்போது உண்டாகிற கரகரவென்ற விநோத ஒலி எழுந்தது.

தலையை உயர்த்திக் குடிசையின் வாயிலை நோக்கிய வடிவேலு திடுக்கிட்டான். அவன் எதிர்பார்த்தது போலவே கதவு வழியாக ஒரு கரம் நீண்டு லாந்தர் விளக்கு ஒன்றை இப்படியும் அப்படியுமாக அசைத்துக் கொண்டிருந்தது வாஸ்தவம்தான். ஆனால் அந்தக் கரத்தை முழுமையான மனிதக் கரமாக எண்ண முடியவில்லை. தோலும் சதையும் வழண்டு போக விரல் எலும்புகள் மட்டுமே மிஞ்சி லாந்தரைப் பற்றி யிருப்பது போல் வெண்மையாகக் காட்சி தந்தது அந்தக் கரம்.

அருவருப்படைந்த போதிலும் தைரியத்தைத் திரட்டிக் கொண்டு கரத்துக்குரியவனைக் காண எண்ணிச் சற்றே முன்னுக்கு நகர்ந்தான் வடிவேலு.

அவன் சப்த நாடிகளும் ஒடுங்கி விட்டன. குப்பென்று உடல் முழுதும் வியர்த்து விட்டது. "ஐயோ பிசாசு!" என்று வாய் விட்டு அலறிய அவன் அங்கிருந்து ஓடி விடத்தான் ஆசைப்பட்டான். ஆயினும் ஓரடி எடுத்து வைக்கவும் அவன் உடலில் சக்தி இல்லை. உடலற்ற அந்தப் பிசாசின் வெண்மையான தலை மட்டும் காற்றில் மெல்ல மெல்ல மிதந்து அவனை நோக்கி முன்னேறியது.

அதே தருணத்தில் பாம்பு நெளிவது போல் அவன் கழுத்தைப் பின்புறத்திலிருந்து ஏதோ சுற்றி வளைத்தது. பீதியில் ஒரேயடியாக மூச்சு உள்ளுக்கிழுத்துக் கொண்டே போயிற்று வடிவேலுவுக்கு. அதன் கூடவே விநோதமான ஒரு நெடி மூக்கில் ஏறுவதை உணர்ந்தான். அவ்வளவுதான்! தலையைச் சுற்றத் தொடங்கியது அவனுக்கு. நிற்கவும் இயலாமல் அவன் சரிந்தான். தலையை இப்படியும் அப்படியுமாக அசைத்துத் தன்னை ஆட்கொள்கிற உறக்கத்துக்கு இடம் தரக்கூடாதென்று போராடினான். பிரயோஜனப்படவில்லை. நெடி அதிகரித்தது. வடிவேலுவின் சிந்தனை இருண்டது.

ஃ ஃ ஃ

மயக்கம் நீங்கிக் கண் விழித்த வடிவேலுவைக் கதிரேசன் ரொம்பவும் கடிந்துகொண்டார். "'ஐயோ, பிசாசு!' என்று நீ அலறியபோது அரைத் தூக்கத்திலிருந்த நானும் என் நண்பரும் திடுக்கிட்டு விழித்து உளறியடித்துக் கொண்டு ஓடி ஒருவர் மேல் ஒருவர் மோதிக் கொள்ள ஒரே ரகளையாகி விட்டது. எப்படியோ அமைதி பெற்று டார்ச் லைட்டுடன் வெளியே வந்து பார்த்தால் நீ பயத்திலே மூர்ச்சையாகி விழுந்து கிடந்தாய். நான்தான் பகல் பொழுதில் ஒரு நாளைக்கு உன்னையும் குமாரியையும் அழைத்துப் போவதாக வாக்களித் திருந்தேனே? இவ்வளவு



அசட்டுத்தனமாக நடந்து கொள்வாய் என்பது தெரிந்திருந்தால் அப்போதே என் பின்னோடு வரச் சொல்லியிருப்பேன் உன்னை. இருட்டில் தனியாக வருவானேன், பிறகு பேய் பிசாசுகளைக் கற்பனை செய்து பார்த்து மிரளுவானேன்?''

''இந்த லட்சணத்தில் பேய் பிசாசுகளிடம் தனக்கு நம்பிக்கையே கிடையாது என்று இவர் என்னிடம் பெருமை பீற்றிக் கொண்டிருக்கிறார், அப்பா!'' சாங்கிக் கடற்கரையில் அவன் கூறியதை ஞாபகப் படுத்தி விட்டுக் குமாரி எழுப்பிய சிரிப்பொலி குலுங்குகிற அவள் கை வளையல்களின் இனிய நாதத்துடன் போட்டியிட்டது.

கதிரேசனுடைய முகத்தில் ஒரு சிறிய புன்னகைகூட தெளியவில்லை. கடுகடுப்பாகத் தோற்றமளித்த அவர் தொடர்ந்து பேசினார்: ''ஆசிரம வாழ்க்கை நடத்தும் அந்த நண்பரின் உதவியுடன் உன்னைத் தூக்கிக் கொண்டு காருக்கு ஒரு வழியாக வந்து சேர்ந்தால், அங்கே குமாரியைக் கட்டிப் போட்டு வைத்திருந்தாய், வடிவேலு! இதெல்லாம் என்ன விளையாட்டு? கண்ணியமான ஆசாமி, குடும்ப நண்பன் என்று நம்பித்தானே என் மகளை உன்னிடம் ஒப்படைத்து விட்டு நான் சென்றேன்? அவ்வளவு அநாகரிகமாகவா நடந்து கொள்வார்கள்? குமாரியின் கை கால்கள் இறுகப் பிணைக்கப்பட்டிருந்ததால் ரத்த ஓட்டமே குறைந்து மரத்துப் போய் விட்டன. கார் ஓட்டுவதற்கு ரொம்பவும் கஷ்டப்பட்டுப் போனாள். இங்கே உருப்படியாக வந்து சேருவோமா என்பதே பெரும் யோசனையாகி விட்டது...!''

வடிவேலுவுக்கு வெட்கமாயிருந்தது. ஆத்திரமும் அடைந்தான். ஏதோ ஒரு விதத்தில் தான் ஏமாந்து விட்டிருப்பது அவனுக்குப் புரிந்தது. ஆனால் எந்தவிதமான சாட்சியமோ தடயமோ இன்றி அவர் மீது எவ்வாறு பழி சுமத்துவது?

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு அமர்ந்திருந்த அவனை முதுகில் தட்டிக் கொடுத்தார் கதிரேசன், மன்னித்து மறந்துவிடத் தாம் தயாராக இருப்பதை உணர்த்தும் பாணியில். ''அவசர ஜோலி இருக்கிறது எனக்கு. பிறகு பார்க்கலாம். வரட்டுமா?'' என்று கூறி விடைபெற்றார்.

அவர் வெளியே சென்றதும், ''மலாய் நாட்டை விட்டு வெளியேற உன் அப்பா தயங்குவதற்கு பினாங் மார்க்கெட்டைத் தவிர வேறு ஒரு காரணமும் இருப்பதாக அன்றைக்குச் சொன்னாயல்லவா? இதை மனத்தில் வைத்துக் கொண்டுதான் கூறினாயா?'' என்று குமாரியை நோக்கிக் கேட்டான் வடிவேலு.

''ஆமாம். இப்போதும் என்னால் உறுதியாக ஏதும் சொல்ல முடியாது. ஆனால் அப்பா அங்கே அடிக்கடி போய் வருவது, ரேடியோக் கருவி மூலமாக ரகசியச் செய்திகளை எதிரிக்குக் கிடைக்கச் செய்வதற்காகத்தான் என்று எனக்குப் படுகிறது.''

''கவிஞர் என்றும் கலைஞர் என்றும் அவர் குறிப்பிட்டது...?''

''அங்கேயே வசிக்கிற அவருடைய கையாட்களில் ஒருவன் யாரிடமும் அகப்பட்டுக் கொள்ளாதிருக்க அவ்வாறு வேஷம் போடலாம்; அல்லது அப்பாவின் கற்பனையில் உதித்த கவிஞனாகவும் அவன் இருக்கலாம். உங்களைத் தூக்கி வர உதவியதாக அப்பா கூறிய அந்தக் கலைஞரைப் பின் சீட்டில் படுத்திருந்த நான் கண்ணால் பார்க்கவில்லை!''

''அப்படி இராது குமாரி, கையாள் ஒருவன் அங்கேயே தங்கியிருப்பது நிஜம் தான்!'' என்று வடிவேலு கழுத்தை மெல்லத் தடவி விட்டுக் கொண்டான். தன் கண்டத்தைச் சுற்றி வளைத்தது பாம்பல்ல, மனிதக் கரம்தான் என்பது உறுதியாயிற்று அவனுக்கு. ''விசைப் படகு ஒன்று கரையை நெருங்கிக்கொண்டிருந்ததையும் நான் கவனித்தேன். இரண்டு மூன்று பேர்களாக ஒன்று சேர்ந்துதான் இந்தக் காரியத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும்!''

''அடிக்கடி அங்கே போய் வரும் போதெல்லாம் நான்தான் அப்பாவுக்குக் காரோட்டியாக மாறுவேன்; டிரைவரை ஒரு தடவை கூட அங்கு அவர் அழைத்துப் போனதில்லை. நான் வண்டியை விட்டுக் கீழே இறங்குவதையும் அவர் விரும்புவதில்லை.''

''அவ்வாறு இருந்தும் எனக்குச் சந்தேகம் உண்டாகி ஆராய்ச்சியில் இறங்க மாட்டேனென்று அவர் சுலபமாகத் தீர்மானித்தது விந்தைதான்! என்னையும் காரில் வைத்துக் கொண்டு அவர் அங்கு ஏன் போனார்?''

''நீங்கள் ஒரு ரிஷ்யசிருங்கர் என்பதை அவர் கண்டாரா? மங்கையொருத்தி பக்கத்திலிருக்க அவளிடத்தில் சற்றேனும் அக்கறை எடுத்துக் கொள்ளாமல் வேண்டாத விவகாரங்களில் தலையிட்டுக் கொண்டிருப்பீர்கள் என்று அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார். அதோடு இரவுக்கிரவே ராணுவ முகாமுக்குத் திரும்ப வேண்டும் என்றும் தாமதிப்பதற்கில்லை என்றும் நீங்கள்

மாலே முதலே துடிதுடித்துக் கொண்டிருந்தீர்கள்.''

''பெற்ற மகள் தகப்பனாருக்குத் துரோகம் இழைப்பாள் என்றும் அவர் எதிர்பார்த்திருக்க மாட்டார், குமாரி! உன் அப்பாவைப் பற்றி நீ மனம் விட்டு என்னிடம் பேசுவது தவறு!''

''அப்பா என்பதால்தான் உங்களைத் தடுத்து நிறுத்த முயலவேண்டும் என்கிற எண்ணமாவது எனக்கு ஏற்பட்டது. இன்னும் கொஞ்சம் நயமாக நீங்கள் கேட்டுக் கொண்டிருந்தால் போதும். என்னைக் கட்டிப் போட வேண்டிய அவசியமே இருந்திருக்காது. நானே காரைத் திருப்பி யிருப்பேன்.''

தன் பேச்சிலேயே பணிந்து போய் இருக்கக் கூடியவள்தான் அவள் என்றும் அவசரப்பட்டு வன்முறைச் செயல்களில் தான் இறங்கியிருக்க வேண்டியதில்லை என்றும் கண்டுகொண்டான் அவன். தன் மனம் கோணாமல் காரியங்களைச் செய்வதில் இத்தனை சிரத்தை காட்டுகிற அவளிடம் அவன் மனம் இரங்கியது.

''குமாரி!'' என்று அன்புடன் அழைத்தான். ''உனக்கு வருத்தமளிக்கக் கூடிய செய்தியைக் கூறப் போகிறேன். நேற்றிரவு நடந்த சதிச் செயல்களைப் பற்றிச் சம்பந்தப்பட்ட இலாக்காவுக்கு நான் தகவல் தெரிவிக்க உத்தேசித்திருக்கிறேன்.''

''என்னவென்று புகார் செய்வீர்கள்? பிசாசு ஒன்றைக் கண்டதாகவா ?''

வடிவேலுவின் முகம் சிவந்தது. ''சற்று முன் நீயே சொல்லவில்லையா, உன் அப்பா எதிரியின் சார்பில் வேவு பார்ப்பதாக?''

''உங்களைத் தவிர வேறு யாரேனும் என்னை விசாரித்தால் அதை ஒப்புக் கொள்வேன் என்று எண்ணுகிறீர்களா? அப்படிச் சொல்லவே இல்லை என்று சாதித்தால் ?''

''என் முகத்தில் அசடு வழியும்தான். ஆயினும் அந்த இடத்துக்கு மறுபடியும் நேரில் போய்....''

''நான் வேணுமானாலும் பின்னோடு வந்து உதவுகிறேன். ஒற்றர்கள் அங்கு இருந்ததாகவே வைத்துக் கொண்டாலும் இதற்குள் எல்லா உபகரணங்களையும் எடுத்துக் கொண்டு பறந்திருக்க மாட்டார்களா? மாற்றான் ஒருவனுக்குச் சந்தேகம் உண்டாகி விட்டதை அறிந்தும் அங்கேயே உட்கார்ந்திருக்க அவர்களுக்குப் பைத்தியமா என்ன?''

வடிவேலு மௌனமானான்.

''இதோ பாருங்கள்! நீங்கள் எந்தச் சமயத்தில் அப்பா கடற்கரைப் பக்கம் போயிருந்தார் என்கிறீர்களோ, அதே நேரத்தில் அவர் இங்கே கிளப்பில் சீட்டாடிக் கொண்டிருந்ததாகக் கூற டஜன் கணக்கில் ஆட்கள் இருக்கிறார்கள்.''

''போதும் குமாரி போதும்! நான் போகிறேன்'' என்று கூறி எழுந்தான் வடிவேலு.

''போய் வருகிறேன் என்று சொல்லுங்கள்'' என்றாள் குமாரி.

## அத்தியாயம் 23

# அபாய அறிவிப்பு

இந்தச் சம்பவம் நிகழ்ந்து பல நாட்களாகியும் தன் அசட்டுத்தனத்தை எண்ணித் தனக்குள்ளாகவே சிரித்துக் கொள்வதை வடிவேலு நிறுத்தவில்லை. கதிரேசன் மீதும் அவர் சகாக்கள் மீதும் குற்றப் பத்திரிகை படிப்பது சாத்தியமென்றால் அன்றைக்கு மயக்கமுற்றிருந்த அவனை உயிருடன் விட்டு வைத்திருப்பார்களா? தங்களுக்கு அவனால் ஏதொன்றும் ஆபத்து நேர வகையில்லை என்று நிச்சயமாகக் கருதியதால்தானே அவன் இன்று தாராளமாகச் சிங்கப்பூர் வீதிகளைச் சுற்றி வருகிறான்? ஒற்றர்களாக வேலை செய்பவர்கள் எதற்கும் துணிந்தவர்கள். தேவைப்பட்டால் ஓர் உயிரைப் பறிக்கவும் தயங்க மாட்டார்களல்லவா?

இப்படி ஏதேதோ சிந்தித்துக் கொண்டே டிராமில் ஏறிச் சவாரி செய்த வடிவேலு, இடையில் ஓரிடத்தில் டையென் டிராமுக்குள்ளே புகுந்ததையோ அல்லது தன் பக்கத்தில் இடமிருப்பதைப் பார்த்து விட்டு அங்கு அமர்ந்ததையோ கவனிக்கவில்லை.

''யோசனை பலமாக இருக்கிறதே'' என்று அவன் காதருகில் குனிந்து அவள் கேட்ட பிறகுதான் அவன் தலையைத் திருப்பினான்.

''அடேடே! நீயா?''

''எத்தனை நேரமாக உட்கார்ந்திருக்கிறேன். நிதானமாக நான்தானா என்று கேட்கிறாயே? தீவிரமான சிந்தனை ஜப்பானியனை' எப்படி ஜெயிப்பது என்பது பற்றியா?''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்....''

''என்ன திட்டங்கள் வகுத்தாலும் ஒன்றும் பயன்படாது. எரிமலை குமுறு

வதையும் புயல் வீசுவதையும் கட்டுப்படுத்த யாரால் முடியும்?''

''குடிமுழுகிப் போய் விட்டது போல் இப்போது முதற்கொண்டே நீ துக்கப்பட வேண்டாம். ஜப்பானியனுடைய முன்னேற்றம் அப்படியொன்றும் சுலபமாய் இருக்காது. சிங்கப்பூர் தீவின் வட கிழக்கே உள்ள கப்பல்தளம் இருக்கிறதே. அது எவ்வளவு பிரம்மாண்டமானது தெரியுமா உனக்கு? அதைக் கட்டி முடிக்க இருபது வருஷங்கள் பிடித்தன. அறுபது மிலியன் பவுன்களை விழுங்கியிருக்கிறது அது. இருபத்திரண்டு சதுர மைல் பரப்பளவுள்ள அந்தக் கப்பல் தளத்துக்கு இடம் கொடுக்க நதிகள் திசை மாறியிருக்கின்றன, மனிதனின் முயற்சியால். கடல் நிலமாகி யிருக்கிறது, மனிதனின் உழைப்பால். அதிலுள்ள கடற்படையின் ரேடியோ ஒலிபரப்பு நிலையம் உலகத்திலேயே மிகவும் சக்தி வாய்ந்த ஒன்று. பிரம்மாண்டமான தொழிற்சாலைகளும், எண்ணெய், ஆயுதக் கிடங்குகளும் உள்ளன அதனுள்ளே. கப்பல் மாலுமிகளுக்கும் இதர உத்தியோகஸ்தர்களுக்கும் இருப்பிடங்கள், சினிமாக்கள், மாதா கோயில்கள்—இவற்றைத் தவிர பதினேழு கால் பந்து விளையாடும் மைதானங்களையும் வேறு சிருஷ்டித்திருக்கிறார்கள்!''

''அதெல்லாம் சரிதான்; எத்தனை கப்பல்கள் இருக்கின்றன?'' என்று கேட்டாள் டையென். ''புட்பால் விளையாடப் பதினேழு இடங்கள் தாராளமாய் இருந்து விட்டுப் போகட்டும். கூடவே பதினேழு யுத்தக் கப்பல்களாவது உள்ளனவா? முன்னணிக் கப்பல்கள், போர்க் கப்பல்கள் இவ்விரண்டையும் இணைக்கும் வகையில் இடையில் செல்லும் 'லிங்கிங்' கப்பல்கள், விமானத் தளங்களையே தன்னிடத்தில் கொண்டுள்ள மாபெரும் கலங்கள், நாசகாரிகள், நீர்மூழ்கிகள், நமது கப்பல்களைத் தகர்க்க எதிரிகள் போட்டுவிட்டுப் போன கடற்கண்ணிகளை அப்புறப்படுத்த உதவும் மைன் ஸ்வீப்பர்கள் — இவற்றில் வகைக்கு ஒன்றாவது இருக்கிறதா?''

வடிவேலு சங்கடத்துடன் சுற்றுமுற்றும் நோக்கினான். ''இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது. பிறகு பேசலாம்'' என்று எழுந்தான். ராபின் ஸ்குவாரில் இருவரும் இறங்கி, டையனுடைய இருப்பிடத்தை நோக்கி நடந்தார்கள். இந்திராணி அவனை இலேசில் விட்டு விடுவதாகக் காணோம். ''எறும்புச் சாரிகளைப் போலப் போர் வீரர்கள் இங்கே திரண்டிருக்கிறார்களே, படையெடுக்கப் போகும் ஜப்பானியனை தகர்க்க உங்களிடம் டாங்குகள் இருக்கின்றனவா? அதுதான் இல்லையென்றால் எதிரியின் டாங்குகளைத் தூளாக்கத் தேவைப்படும் பீரங்கிகளாவது உண்டா? சிங்கப்பூரில் வாழ்வோர் எப்போது தலையை உயர்த்தினாலும் ஒரு விமானத்தைக் காணாமல் இருப்பதில்லை என்பது வாஸ்தவம். ஆனால் ஒரு முறை பார்த்த விமானத்தையே மீண்டும் மீண்டும் நாம் பல தடவைகளில் பார்த்துக் கொண்டிருக்கவில்லை என்பது என்ன நிச்சயம்?''

உடம்பு வெலவெலப்பது போலிருந்தது வடிவேலுவுக்கு. சிகரெட்டைப் பற்ற வைத்த வலக் கரம் அதிர்ந்தது. ''நீ கற்பனைகளில் ஈடுபடுகிறாய்'' என்று குற்றம் சாட்டினான் அவன்.

''கற்பனையா? நானா?'' டையென் சிரித்துக்கொண்டே முன்வாசல் கதவின் பூட்டைத் திறந்தாள். ''மலாயாவின் பாதுகாப்புக்கு எல்லாம் சித்தமாக இருப்பதாகப் பிரிட்டிஷார் கட்டி விட்டிருக்கும் கதையைக் காட்டிலுமா நான் அதிகமான கற்பனையில் இறங்கி விட்டேன்? அவர்களுடைய ராஜதந்திரம் விளங்கவில்லையா உனக்கு? சிங்கப்பூர்க் கோட்டையைக் கைப்பற்ற எவனாலும் முடியாது. மலாய் நாட்டில் ஜப்பானியனை வரவேற்றுப் பாடம் கற்பிக்க நூறாயிரம் சிப்பாய்கள் சித்தமாயிருக்கிறார்கள் என்றெல்லாம் விளம்பரப்படுத்துவது எதற்காக? உன் நாட்டில் ஜனங்களிடையே எதிரியைப் பற்றிய பயமும் பீதியும் நிலவாதிருக்க; அமைதி குலையாதிருக்க. அதோடு ஜப்பானியனையும் ஏமாற்ற. இந்தக் கண்துடைப்புப் பிரசார வேலையில் விழுந்து அவன் மதியிழப்பான், கதிகலங்குவான்; படையெடுப்பு வேண்டாம் என்று தீர்மானிக்கா விட்டாலும் அந்த நாளை ஒத்திப் போடவாவது செய்வான் என்று எதிர்பார்க்கிறார்கள்.''

'அழகிகள் அறிவுப் பஞ்சத்தில் அடிபட்டுக் கிடப்பவர்களாய்த்தானிருப்பார்கள் என்று பொதுவாக அளவிட்டு விடுவது எவ்வளவு தவறு?' இவ்வாறு எண்ணிய வடிவேலு, ''ராணி நீ பேசுவதெல்லாம் நிஜமென்றால் ராணுவ ரகசியங்களை நீ வெளியிட்டுக் கொண்டிருப்பதாக ஆகும். தேசத் துரோகமல்லவா அது?'' என்றான்.

ரேடியோவைத் திருப்பி வைத்து விட்டு இந்திராணி திரும்பினாள். ''எனக்கொன்றும் பயமில்லை. முதல் குற்றவாளி மேஜர் ஸ்பென்ஸர்தான். அவனைத் தண்டித்து விட்டுப் பிறகு என் மீது நடவடிக்கை எடுக்கட்டும்.''

"மேஜர் ஸ்பென்ஸர்தான் இந்த விஷயங்களை யெல்லாம் உன்னிடம் வெளியிட்டான் என்கிறாயா?"

"பின்னர் எனக்கு எப்படித் தெரியும்? நாலைந்து நாட்களுக்கு முன்னால் போதை தலைக்கேற மனத்திலிருந்த அனைத்தையும் கொட்டித் தீர்த்தான். பக்கத்திலிருந்த நான் செவிடுமில்லை. என்ன செய்யட்டும்?" என்றாள் டையென்.

ரேடியோவில் ஒலி பரப்பாகிவந்த ஐரோப்பிய சங்கீதம் சட்டென்று நின்று, விசேஷ அறிவிப்பு ஒன்றுக்கு இடமளித்தது. அதன்படி சிங்கப்பூரில் ஆங்காங்கே உல்லாச விடுதிகளில் விளையாடிக் கொண்டிருந்த சிப்பாய்கள் உடனடியாக முகாமுக்குத் திரும்பி வந்து சேருமாறு உத்தர விடப்பட்டார்கள்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த வடிவேலுவின் மேனியைச் சிலிர்க்க வைத்தது அப்போது விளக்கணைப்பு ஒத்திகைக்காக அலறிய அபாய அறிவிப்புச் சங்கு. டையென் ஜன்னல் கதவுகளின் திரைகளை இழுத்துவிட்டு அறையின் ஒளி வெளியே பரவாதவாறு செய்தாள். அவளுக்கு உதவுகிற நோக்கில் நெருங்கிய வடிவேலுவின் கரங்கள் அவள் தோள்களை ஸ்பரிசித்தன. அவ்வாறு பதிந்த விரல்கள் மீண்டும் அங்கிருந்து விடுபடவில்லை. அவனையும் மீறிய ஆர்வத்துடன் அவை கடற்பஞ்சு போன்ற அவள் புயங்களில் அழுந்தி அவற்றின்



மென்மையான உறுதியையும் வழுவழுப்புத் தன்மையையும் உணர்ந்து மகிழ்ந்தன. ''ராணி!'' என்று அவள் காதருகே குனிந்து கரகரத்த குரலில் மெதுவாகப் பேசினன் அவன். ''ரேடியோவின் அறிவிப்பு உன் காதில் விழுந்ததல்லவா? எந்த விநாடியும் நான் போர்முனைக்குச் செல்லச் சித்தமாக இருக்க வேண்டுமென்று அதன் அர்த்தம். ராணி! நான் உயிருடன் திரும்பி வருவேனோ மாட்டேனோ? சாவைச் சந்திக்க நான் செல்வதாயிருந்தால் உன்னை நான் சந்திப்பது இதுவே கடைசித் தடவை. உனக்குப் புரிகிறதா ராணி?''

''நன்றாகப் புரிகிறது'' என்றாள் வடிவேலுவின் காதலி கனவு காண்பவளைப் போன்ற ஒரு நிலையில். அவள் கழுத்திலிருந்து மாலையாகத் தொங்கிய அவன் கரங்களுக்கிடையில் அவள் நிதானமாகத் திரும்பினாள். வருத்தப் புன்னகையுடன் அவனை ஏறிட்டு நோக்கித் தன் இரு உள்ளங்கைகளிலும் அவன் முகத்தை ஏந்தினாள்.

''எத்தனையோ ஆண்டுகளில் நீடித்து அனுபவிக்க வேண்டிய இன்பசுகங்களையெல்லாம் ஓரிரவுக்குள் அடக்கித் திருப்தி அடையப் பார்க்கிறாய். மரணத்தை எதிர்நோக்கிச் செல்லும் ஒருவனுடைய மன நிலை எவ்வாறு இருக்கும் என்பது எனக்குப் புரிகிறது. ஆனால் எனக்கு நீ ஒரு வாக்குறுதி தர வேண்டும். ஜப்பானியனுடைய மார்பில் உன் துப்பாக்கியின் ஈட்டி முனையைப் பாய்ச்சும்போது ஒவ்வொரு முறையும் நீ என்னை நினைத்துக்கொள்ள வேண்டும். குண்டு பாய்ந்து எதிரி சுருண்டு விழுகையில் நீ எனக்காகப் பழி வாங்கியதாக வாய்விட்டுச் சொல்ல வேண்டும். ஈவிரக்கம் காட்டாமல் உன்னால் முடிந்த மட்டிலும் ஜப்பானியரின் உயிர்களை நீ எனக்காகப் பலி வாங்க வேண்டும்! செய்வாயா?''

''ராணி! என்ன இது? பெண்ணாக இருந்து கொண்டு நீ இப்படிப் பேசலாமா?'' என்று துணுக்குற்றுக் கேட்டான் வடிவேலு.

அவளோ, ''கொன்று குவி! வெட்டிச் சாய்த்துவிடு!'' என்று ஆவேசம் வந்தவளைப்போல் கத்தினாள்.

''ராணி!'' என்று அதட்டுவதுபோல் அழைத்தான் அவன். ''பகைவனானாலும் ஜப்பானியனும் மனிதன்தான்!''

''மனிதர்களாம், மனிதர்கள்! தூ!'' என்று வெறுப்புக் கொந்தளிக்கக் கூறிவிட்டு அவள் அப்பால் நகர்ந்தாள்.

''உனக்கு அவர்களைப் பற்றி என்ன தெரியும்? நான்கு வருஷங்களுக்கு முன்னால் ஜப்பானிய சிப்பாய்கள் எங்கள் நாட்டின் தலைநகரான நான்கிங்குக்குள் புகுந்ததை நீ பக்கத்திலிருந்து பார்த்திருக்கிறாயா? அதிகாரிகளின் கட்டளைக்கிணங்க அவர்கள் கட்டவிழ்த்து விடப்பட்ட கயவர்களாகத் திரிந்து வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளையடித்ததைக் கண்டிருக்கிறாயா? வயோதிகத் தாய் தந்தையரைக் கட்டிப் போட்டு விட்டு அவர்கள் கண்ணெதிரே அவர்களுடைய மகளைப் பரிகசித்துப் பலவந்தப் படுத்தியதை நீ எவ்வாறு அறிவாய்? 'எங்களைக் கொன்று விடு! கொன்றுவிடு' என்று பெண்ணைப் பெற்றவர்கள் கதறியதை நீ கேட்கவில்லை. மீண்டும் நிலையாக நிற்கும் தெம்பு பெற்றதும், தன் தகப்பனார் குத்திக் கொல்லப் பட்டிருப்பதையும் அதற்கு முன்பாகவே — ஜப்பானியனுக்கு வேலையை மிச்சப் படுத்தும் வகையில் — தன் தாயாரின் இருதயம் வேதனையைத் தாங்க மாட்டாமல் நின்று விட்டிருப்பதையும் பார்த்து அந்தப் பெண் மனம் புழுங்கித் துடித்ததை நீ தெரிந்து கொண்டால் ஜப்பானியனைக் கண்ட மாத்திரத்தில் சுட்டுக் கொல்லச் சற்றேனும் தயங்குவாயா?''

இவ்வாறு படபடப்புடன் கூறிவிட்டு, உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாமல் வெடவெடக்கும் உடலுடன் ராணி அங்கிருந்த சோபாவில் அமர்ந்த போது அவள் ஆடை சற்று விலகி இடது முழங்காலுக்கு மேலேயிருந்த தீப்புண்ணைப் புலப்படுத்தியது.

''ஆடுமாடுகளுக்கு அடையாளக் குறியிடுவது போல் இந்தப் பெண் தன்னுடையவன் என்பதற்கு அடையாளமாக ஜப்பானியச் சிப்பாய் சிகரெட்டினால் போட்ட சூடு இது!'' என்றாள் ராணி. ''அவர்களிடமிருந்து நான் தப்பி ஹாங்காங்கில் கப்பலேறி இங்கு வந்து சேர்ந்தது ஒரு பெருங் கதை! விரும்பியா நான் இந்த அவல வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறேன் என்று நினைக்கிறாய்? சிங்கப்பூரில் ஜப்பானிய விமானங்கள் குண்டு மழை பொழியும் நாள் அதிக தூரத்தில் இல்லை. முதல் குண்டு என் தலையில் விழவேண்டும் என்பதுதான் என்னுடைய பிரார்த்தனை!'' என்றும் கூறினாள்.

''ராணி! எத்தனை ஜப்பானியக் குள்ளர்களைக் கொன்றால் நீ திருப்தியடைவாய்? சொல் ராணி!'' என்று அலறிய வடிவேலுவின் கண்களில் கொடூரம் குடிகொண்டது. (தொடரும்)

# பந்தபாசம்

காந்தன்



ஓரூரில் அதிபர் விசுவநாதம் பிள்ளைக்கு இரண்டு பிள்ளைகள்; மூத்தவன் பார்த்திபன்; இளையவன் சரவணன். சரவணனைப் பணக்காரப் பெண்ணான பூங்கொடி காதலிக்கிறாள். விபரீதமாகப் பாங்கி முறிந்து விடவே, பணம் அத்தனையும் போய்விடுகிறது. மனம் முறிந்த விசுவநாதம் பிள்ளை நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகிறார். பிள்ளைகள் வேலைக்குப் போக நேருகிறது. சரவணனுக்கு ஓர் ஆபீஸில் மானேஜர் பதவி கிடைக்கிறது. பார்த்திபனுக்கு ஒரு பிரபல பத்திரிகையில் கதை எழுத வாய்ப்பும், உதவி ஆசிரியை மனோன்மணியின் காதலும் கிட்டுகின்றன; காதலைக் கைவிட்டு ஓர் வசைமுள்ள பணக்காரப் பெண்ணை மணந்து குடும்பக் கடனைத் தீர்க்க வழி செய்கிறான் பார்த்திபன்.

வழக்கமான கதைதான் என்றாலும் உருக்கமான சில பகுதிகள் படத்துக்கு உயிர் கொடுக்கின்றன. சிவாஜி கணேசன் பார்த்திபன்; உணர்ச்சிப் போராட்டங்களில் கொந்தளிக்கும் கட்டங்களில் அற்புதமாக நடித்திருக்கிறார். தம்பியின் அபாண்டமான குற்றச்சாட்டுக்குப் பதில் அளிக்க முடியாமல் விம்மிக் கண்ணீர் வடிக்கும் காட்சி ஒன்று போதும்.

சரவணன் பாகத்தை ஜெமினிகணேசன் சிறப்பாகச் செய்கிறார். ஆபீஸில் அபாண்டமாகத் திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டதிலிருந்து அவர் நடிப்பில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டு மெருகு ஏறுகிறது. அண்ணனைச் சந்தேகித்தும் வாய் திறவாமல் மனப் போராட்டத்தில் தவிப்பது உருக்கமாயிருக்கிறது. பூங்கொடியாக வரும் சாவித்திரிக்கு விசேஷ நடிப்புக்குச் சந்தர்ப்பம் இல்லை. பூந்தோட்டத்தில் காதலனுடன் கொஞ்சுவதற்கும், பிறகு காதலன் மீது சந்தேகம் ஏற்பட்டு உதறித் தள்ளுவதற்கும், கடைசியில் ஐயம் தீர்ந்து அவனையே மணந்துகொள்வதற்கும் ஒரு பெரிய நடிகை தேவையேயில்லை. யாராவது ஒரு புது முகத்துக்கு அந்த 'சான்ஸை'க் கொடுத்திருக்கலாம்.

அதிக வாய்ப்புக்கள் இல்லாத பாத்திரங்களுக்குக் கூடப் பிரபல நடிகர்களைப் போட்டுப் பண விரயம் செய்வானேன்? டைரக்டர்கள் தான் படத் தயாரிப்பில் முக்கியப் பொறுப்பு வகிப்பவர்கள். புது முகங்கள் விஷயத்தில் அவர்கள் சிரத்தை காட்டினால் நிச்சயம் வழி பிறக்கும். பிரசித்தி பெற்ற நடிகர்கள் நடிக்கும் படங்களில் டைரக்டர்களுக்கு வேலையே கிடையாது; ஆனால் சுலபமாகப் பெயர் வாங்கி விடலாம்! புதுமுகங்களைப் பார்க்க வேண்டும் என்னும் ரசிகப் பெருமக்களின் ஆர்வத்தைப் புறக்கணிப்பது அறிவுடைமை யாகாது.

தேவிகா மனோன்மணியாக நன்றாய் நடித்திருக்கிறார். அவர் ஏற்றுக் கொண்ட பாத்திரம் அதிக வாய்ப்புள்ளது. காதலிக்கவும், ஏமாற்றம் அடையவும், மீண்டும் காதல் துளிர்க்கவும். சந்தர்ப்பங்கள் கிட்டுகின்றன. எதையும் அவர் நழுவவிடவில்லை என்பது பாராட்டுக்குரியது.

சந்திரபாபுவின் நகைச்சுவை படத்துக்குச் சுவையூட்டுகிறது. அவருடைய அங்க சேஷ்டைகளும், முகபாவங்களும் பிரமாதம்.

எஸ். வி. ரங்காராவ் அருமையாக நடிக்கிறார். நோய்வாய்ப்பட்டு, வாயுற்றுக் கால், கை விளங்காமல் தவிக்கும்போது அவர் நடிப்புத் திறமை நன்கு விளங்குகிறது. எம். வி. ராஜம்மா நடிப்பதாகவே தோன்றவில்லை. நேரிலே நாம் காணும் குடும்பத் தலைவி போலவே தோன்றுகிறது.

பாட்டுக்கள் எதுவும் நினைவில் வைத்துக் கொள்ளும்படியாக இல்லை. பூங்கொடியும், மனோன்மணியும் பாடும் ''உன் கதைதான் என் கதையும்'' என்ற பாட்டு கருத்து நிறைந்ததாக இருக்கிறது.

''பந்த பாசம்'' என்ற தலைப்புக்கும் படத்துக்கும் சம்பந்தம் ஒன்றும் இல்லை. ஆனால் படம் என்றால் அதற்குத் தலைப்பு என்று ஒன்று வேண்டுமே!

# ஹம்பி பம்பாபதி

## தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

உலகம் உருண்டு கொண்டிருக்கிறது என்கின்றனர் விஞ்ஞானிகள். உலகம் உண்மையில் உருண்டு கொண்டிருக்கிறதோ என்னவோ, இந்த உலகில் தோன்றும் சாம்ராஜ்யங்கள் உருண்டு கொண்டிருக்கின்றன. சரித்திர ஏடுகளைப் புரட்டினால் எத்தனை எத்தனை சாம்ராஜ்யங்கள் தோன்றி நின்று அழிந்து போயிருக்கின்றன? ஒரு சாம்ராஜ்யத்தின் அழிவிலே இன்னொரு சாம்ராஜ்யம் தோன்றியிருக்கிறது. பழங்காலத்தில் எகிப்திய சாம்ராஜ்யம், கிரேக்க சாம்ராஜ்யம், ரோம சாம்ராஜ்யம் எல்லாம் உலகில் தோன்றி அவைகளும் காலகதியில் அழிந்து போயிருக்கின்றன. இந்திய சரித்திரத்தைக் கொஞ்சம் புரட்டினால், அங்கிருந்த அந்தப் பழைய மௌரிய சாம்ராஜ்யம், குப்த சாம்ராஜ்யம், மொகலாய சாம்ராஜ்யம் எல்லாம் அழிந்துதானே போயிருக்கின்றன? நிரம்பத் தூரம் செல்வானேன்! நம் தமிழகத்தின் சரித்திரத்தையே நோக்கினால் இங்கிருந்த பல்லவப் பேரரசு, சோழப் பேரரசு போன்ற பெரிய சாம்ராஜ்யங்களும் அழிந்துதானே போயிருக்கின்றன? இப்படி சாம்ராஜ்யம் சாம்ராஜ்யமாக அழிந்தாலும் அந்த சாம்ராஜ்யங்களின் பெருமைகளை விளக்கும் சரித்திரச் சான்றுகள் நம் கண் முன்னே நின்று பழம் பெருமைகளையெல்லாம் விளக்கத்தான் செய்கின்றன. அவைகளை வைத்துத்தானே அந்தந்த சாம்ராஜ்ய சரித்திரத்தையே உருவாக்கவும் முடிகிறது. இப்படிப்பட்ட சாம்ராஜ்யம் ஒன்றுதான் விஜயநகர சாம்ராஜ்யம். அந்த சாம்ராஜ்யம் அகன்று பரந்திருக்கிறது. அந்த சாம்ராஜ்யமும் நீண்ட நாட்கள் நிலைக்காமல் அழிந்துதான் போயிருக்கிறது. அந்த சாம்ராஜ்யத்தின் பெருமையை அறிய நாம் தென்னிந்தியா முழுவதையும் சுற்ற வேண்டாம். ஹம்பி என்ற தலத்துக்குப் போய் அங்கு அழிந்து கிடக்கும் சின்னங்கள் பலவற்றை மட்டும் பார்த்தால் போதும். அந்த சாம்ராஜ்யம் எவ்வளவு மகோன்னதமாக இருந்திருக்க வேண்டும், அத்தகைய சாம்ராஜ்யமும் அழிந்துதானே போயிருக்கிறது என்று நாம் அறிகிறபோது நமக்கு இந்த உலகின் நிலையாமையைப் பற்றிய உண்மை எளிதாக விளங்கும். ஆம், அன்றே சொல்லினளே அவ்வைப் பிராட்டி.

ஆற்றங் கரையின்
 மரமும், அரசுஅறிய
வீற்றிருந்த வாழ்வும்
 விழும் அன்றே

என்று. இன்னும்,

சொலல் முறைகண் தோன்றி
 சுடர்மணித் தேர் ஊர்ந்து
நில முறையில் ஆண்ட
 நிகரிலார் மாட்டும்
சில முறை அல்லது
 செல்வங்கள் நில்லா
விலங்கும் எறிபடையும்
 ஆற்றலும் மாண்பும்
கலந்த தம் கல்வியும்
 தோற்றமும் ஏனைப்
பொலஞ்செய் புனைகலனோடு
 இவ்வாறு ஆறும்
விலங்கி வரும் கூற்றை
 விலக்கலும் ஆகா

என்று அந்தப் பழம்பாட்டில் சொல்லியபடி, எவ்வளவு பெரிய பேரரசு என்றாலும் அதுவும் அழிந்துதானே போயிருக்கிறது?

ஹம்பி செல்ல, சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் ரயிலில் ஏற வேண்டும். குண்டக்கல் ஜங்ஷனில் இறங்கி அங்கிருந்து ஹுப்ளி செல்லும் ரயில் ஏறி ஹாஸ்பெட் ஸ்டேஷனிலிருந்து பெல்லாரி செல்லும் பாதையில் காரிலோ, பஸ்ஸிலோ, இல்லை ஜட்கா வண்டியிலோ எட்டு மைல் கிழக்கு நோக்கிச் செல்ல வேணும். அப்படிச் சென்றால் ஹம்பி என்று வழங்கும் அந்தப் பழைய விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைநகருக்கு வந்து சேருவோம். ஹம்பி சென்று அங்குள்ள பிரதான கோயிலில் இருக்கும் விருபாக்ஷரை வணங்கு முன் வழியில் உள்ளவையெல்லாம் பார்த்து விட வேண்டாமா?

ஹாஸ்பெட் என்றாலே கன்னடத்தில் புதிய பட்டணம் என்றுதான் பொருள். ஹாஸ்பெட் அப்படி ஒன்றும் புதியதொரு

விருபாக்ஷர் கோயில் தேர்



பட்டணமாக இல்லை. அந்தக் காலத்தில் அதற்குத் திருமலை தேவியார்ப் பட்டணம் என்றுதான் பெயர் இருந்திருக்கிறது. விஜய நகர மன்னர்களில் தலைசிறந்தவராகவும், அந்த சாம்ராஜ்யத்தையே மேலோன்னத நிலைக்குக் கொண்டு வந்தவருமான கிருஷ்ண தேவராயர் நிர்மாணித்த பட்டணம் அது. தன்னுடைய இரண்டாவது மனைவியான திருமலை தேவியாரின் ஞாபகார்த்தமாக இந்த நகரை முதலில் நிர்மாணித்திருக்கிறார். அந்தப் பழைய நகரத்தைச் சுற்றி ஒரு புதிய பட்டணம் தோன்றியிருக்கிறது. அதுவே ஹாஸ்பெட் என்று பெயர் பெற்றிருக்கிறது. ஹாஸ்பெட்டில் பார்க்க வேண்டியவை ஒன்றும் இல்லை. மேற்கே இரண்டு மைலில் நாகனஹல்லி என்று இன்று வழங்கும் நாகலாபுரம் இருக்கிறது. இந்த நாகலாபுரமும் கிருஷ்ண தேவராயர் தம் தாயார் நாகலாதேவியின் ஞாபகார்த்தமாக நிர்மாணித்ததே. இந்த நாகலாபுரம்தான் மேற்கிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு ஹம்பியில் நுழைவதற்கு ஒரு வாயிலாக அமைந்திருக்கிறது.

இந்த வழியில் செல்லும்போது ஹாஸ்பெட் ஸ்டேஷனுக்கு ஒரு மைலில் அனந்த சயனரது கோயில் ஒன்றிருக்கிறது. அங்கு உள்ளவர்களிடம் அனந்தசயனருடைய கோயில் எங்கிருக்கிறது என்று கேட்டால் தெரியாது; அஞ்சனகுடி எங்கிருக்கிறது என்று கேட்டால் கோயிலைக் காட்டுவார்கள். பெரிய கோயில்தான். அங்கு நீண்டதொரு சயன மேடையில் அனந்த சயனர் சயனக் கோலத்தில் இருப்பார். இக்கோயிலின் விமானம் செங்கல்லும் சுண்ணாம்பும் கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறது. இது கட்டிடக் கலையில் ஓர் அதிசயம் என்று கருதப்படுகிறது. இக் கோயிலைக் கிருஷ்ண தேவராயர் 1524-ல் கட்டி முடித்தார் என்று அங்குள்ளவர்கள் கூறுகிறார்கள். இங்குள்ள அனந்தசயனரை விடப் பெரியதோர் அனந்த சயனரைச் சிற்பி ஒருவன் உருவாக்கியிருக்கிறான். அதனை, உருவாக்கிய இடமான ஜேனாகாது என்ற இடத்திலிருந்து எடுத்து வர முடியாது போயிருக்கிறது என்று தெரிகிறது. வராதவரைப் பற்றிக் கவலைப்படாமல், வந்து படுத்திருப்பவரைத் தரிசித்து விட்டு மேல் நடக்கலாம். நடக்கும் ரோட்டிலே நாலாவது மைல் கடந்ததும் இடது கைப் பக்கம் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. எண் கோண வடிவில் கல்லாலேயே கட்டிய பெரிய கிணறு அது. உள்ளே இறங்க வசதியாய்ப் படிகள் கட்டியிருக்கிறது. இதனைச் சூளை பாவி என்கின்றனர். இக் கிணற்றை வெட்டிக் கட்டியவள் ஒரு நடனமாது என்கின்றனர். இக் கிணற்றின் பக்கத்தில் மல்லப்பன்குடி என்ற ஒரு கோயில். இக் கோயிலையும் கிருஷ்ண தேவராயரே 1510-ல் கட்டியிருக்கிறார். நாலரை மைல் கடந்ததும் சந்திராப்புரம் திரும்பும் பாதை ஒன்றிருக்கிறது. அந்தப் பாதையின் பக்கத்தில் மூன்று சமாதிகள் இருக்கின்றன. முஸ்லிம்களின் சமாதி. யார் யாருடைய சமாதி என்று தெரிய வில்லை. இந்தச் சமாதிக்குக் கிழக்கே அரை மைல் தூரத்தில்



விருபாக்ஷர் கோயில் உள்கோபுரம்

ஹேமகூடம் என்னும் சிறிய மலைச் சிகரம் ஆரம்பிக்கிறது. அங்கு அந்த ஹேமகூடத்தின் சிகரத்தில் இரண்டு பாதங்கள் செதுக்கப் பட்டிருக்கின்றன. அவைகளைச் சுற்றி ஒரு பாம்பையும் செதுக்கி யிருக்கிறான் சிற்பி. பாதங்கள் நாராயணனது பாதங்கள் என்றும் அந்தப் பாதங்களைச் சுற்றிக் கிடக்கும் பாம்பு ஆதிசேஷன் என்றும் தெரிகிறது. ஆதலால் அந்த விஷ்ணு பாதத்தை வணங்கி விட்டு மேற்செல்லலாம். இந்த ஹேம கூடத்தின் வழியாகத்தான் நாம் ஹம்பி நகரில் நுழைய வேண்டும்.

இனி ஹம்பியில் நுழையும்போது நம்மை வரவேற்பவர் இரண்டு பெரிய பிள்ளையார்கள் தாம். ரோட்டுக்கு மேல் புறம் நான்கு பக்கமும் திறந்திருக்கும். ஒரு பெரிய மண்டபத்திலே ஒரு விக்னேசுவரர். அவரைத்தான் சசிவேகல் கணேசர் என்கின்றனர். அவரைக் கடுகு விநாயகர் என்று தமிழில் சொல்லலாம். ஆனால் கடுகைப் போல் சிறிய வடிவினர் அல்ல. நல்ல பெரிய வடிவம். ஒருவேளை கடுகு நிறத்துக் கணேசர் என்பதற்காகத்தான் சசிவேகல் கணேசர் என்கிறார்களோ என்னவோ? அடுத்தாற் போல் உள்ள பெரிய கோயிலில் உள்ள பெரிய விநாயகரை ஏன் கடலைக் கல் கணேசர் என்று அழைக்கிறார்களோ, தெரியவில்லை. இவரது வடிவமும் பெரிதே. இவ்வடிவத்தின் பல பாகங்கள் சிதைந்திருக்கின்றன. இந்த இரண்டு விநாயகரையும் வணங்கி விட்டு வடக்கே சென்றால் கார் ஒரு பெரிய பள்ளத்தில் இறங்கி ஏறும். அதன்பின் ஹம்பியின் கடை வீதியில் மேற்கு நோக்கிச் சென்றால் அங்குள்ள பிரதான கோயிலான விருபாக்ஷர் கோயில் வாயிலுக்கு வந்து சேருவோம். அக்கோயில் வாயிலுக்குக் கிழக்கே தமிழ்நாட்டுக் கோயில்களில் உள்ளது போல் மரத்தாலாகிய தேர் இரண்டு நிற்கும். இக் கோயிலின் சிறப்பான விழாவே சித்திரா பௌர்ணமியில் நடக்கும் ரதோத்சவம்தான். அதைக் காண ஆயிரக் கணக்கான தமிழர்களும் ஆந்திரர்களும் வருகிறார்களாம். கோயில் வாயிலை 165 அடி உயரமுள்ள கோபுரம் ஒன்று அணி செய்யும். அக் கோபுரத்தில் பதினொரு மாடங்கள் இருக்கின்றன. சிற்ப வடிவங்களும் வாயில் சுவர்களிலெல்லாம் செதுக்கப் பட்டிருக்கும். இக் கோயில் வாயிலைக் கடந்ததும் ஒரு பெரிய

திறந்த வெளி முற்றம் வந்து சேருவோம். அங்கெல்லாம் பல குடில்கள் இருக்கும். அதில் கோயில் ஊழியர்களும் யாத்திரிகர்களும் தங்கி இருப்பர். இவற்றையும் இடைநிலைக் கோபுரத்தையும் கடந்து நாம் அடுத்த பிராகாரத்துக்கு வரவேணும். அங்கு ஒரு மண்டபம். அதுவே ரங்க மண்டபம். சிறந்த வேலைப்பாடுடைய தூண்கள் அந்த ரங்க மண்டபத்தைத் தாங்கி நிற்கும். அதையும் கடந்தே மூலக் கோயிலுக்குச் செல்ல வேணும். கீழ்ப் பக்கத்து வாயில் வழியாக உள்ளே செல்ல அனுமதிக்க மாட்டார்கள். ஆதலால் வட பக்கத்து வாயில் வழியாகத் தான் செல்ல வேணும். கோயிலின் கருவறையிலே விருபாக்ஷர் சிவலிங்க வடிவிலே இருக்கிறார். அவரையே பம்பாபதி என்கிறார்கள். பம்பை என்பது துங்கபத்திரையின் பழைய பெயர். ஹம்பி என்பதே பம்பை என்பதன் திரிபுதானே. கவிச் சக்கரவர்த்தி கம்பன் பாடுகிறானே பம்பைப் பொய்கையைப் பற்றி.

இந்தப் பம்பா நதியைப் பற்றி ஒரு கதை வழங்குகிறது. பக்கத்தில் உள்ள ஹேமகூடம் என்னும் பர்வதத்தில் உள்ள முனிபுங்கவர்களுக்குக் கன்னிப் பெண்ணொருத்தி புஷ்பப் பணி விடை செய்து வந்திருக்கிறாள். அவளது சேவையை மெச்சினவர்கள் அவளுக்கு என்ன வேண்டும் என்று கேட்டிருக்கிறார்கள். அவள் விருபாக்ஷனும் இறைவனையே மணக்க விரும்பியிருக்கிறாள். முனிவர்களும் அவளுக்கு மந்திரோபதேசம் செய்து தவம் செய்யச் சொல்லியிருக்கிறார்கள். அவள் செய்த தவம் பலித்து விருபாக்ஷனும் தரிசனம் கொடுத்து அவளை மணந்திருக்கிறான். அக்கன்னியின் பெயர் பம்பை என்றும் அந்தப் பம்பையின் பதியே பம்பாபதியானார் என்றும் வரலாறு. இந்தப் பம்பாபதியின் துணைவியைப் புவனேசுவரி என்கின்றனர். அவளுக்கும் ஒரு தனி சந்நிதி இருக்கிறது. பம்பாபதியின் கோயிலைக் கட்டியவன் விஜயநகர மன்னர்களில் முதல்வனான ஹரிஹரராயன் என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. விஜயநகர மன்னர் வம்சத்தையே தோற்றுவித்த முனிவர் வித்யாரண்யர் ஞாபகார்த்தமாக இந்தக்கோயில் கட்டினான் என்று ஒரு கல்வெட்டு கூறும். ஆனால் இக்கோயிலில் ரங்க மண்டபத்தையும் கிழக்கு வடக்குக் கோபுரங்களையும் கட்டியவன் அந்தப் புகழ் பெற்ற கிருஷ்ண தேவராயரே என்றும் 1509-ம் வருஷத்துக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. ஹரிஹரராயன் கட்டிய கோயில்தான் பின்னர் விரிவடைந்து பெரிய கோயிலாக விளங்கியிருக்கிறது. அந்தத் தலைநகரில் சாம்ராஜ்யத் தலைநகரின் பிரதான கோயில் இதுதான் என்றாலும் இங்கு நாம் விஜயநகரத்துச் சிற்ப வடிவங்களைக் காண முடியாது. ஆதலால் நாம் விருபாக்ஷரையும் புவனேசுவரியையும் வணங்கிய திருப்தியோடு வெளியே வந்து விடலாம்.

ஹம்பி பஜாரில் காரை நிறுத்தி விட்டு இனி கிழக்கு நோக்கி நடக்க வேணும். கொஞ்சம் பாறைகளிலும் ஏறிச் செல்ல வேணும். அப்படிச் செல்லும்போது கோயில் வாயிலில் நாற்சந்தியில் இருக்கும் நந்தி ஒன்றையும் காணலாம். தஞ்சையிலும் மைசூரிலும் நாம் கண்ட நந்தியைப்போல் காத்திரமோ அழகோ இந்த நந்தியின் வடிவில் இல்லை. இந்த நந்திக்குத் தென் கீழ்ப் பக்கம் இருப்பதே மதங்க பருவதம். இந்தப் பெயரை எங்கேயோ கேட்டிருக்கிறோம் என்று நினைவு வரும். ஆம்! ராமாயணத்தில் கிஷ்கிந்தையில் சுக்ரீவனும் அனுமனும் ஒளிந்திருந்த மலையை வான்மீகி மதங்க பருவதம் என்றுதானே குறிப்பிட்டிருக்கிறார் என்று ஞாபகம் வரும்.

ஆம். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. இந்தப் பிராந்தியமே அந்த இதிகாச கிஷ்கிந்தை என்றும் இங்குதான் வாலி சுக்கிரீவர்கள் இருந்து அரசு செய்திருக்கிறார்கள் என்றும் வரலாறு கூறுகிறது. வாலி ஒரு ராக்ஷசனைக் கொன்று அவன் குருதியை மதங்க ரிஷி தவம் செய்த இடத்தில் படிய விட்டதனால் மதங்கர் கோபம் கொண்டு இம்மலைப் பக்கம் வாலி வந்தால் அவன் தலை சிதறக் கடவது என்று சாபமிட்டிருக்கிறார். அதனாலேயே ராமன் வரும் வரை சுக்ரீவன் இங்கு பத்திரமாக வாழ முடிந்திருக்கிறது. நமக்கெல்லாம் மதங்கரது சாபம் இல்லையே? நாம் அந்த மதங்க மலை மீது ஏறலாம். மலைச் சிகரத்தில் இருப்பது அச்சுதராயர் கோயில். அங்கு கோயில் கொண்டிருப்பவர் மகா விஷ்ணு. நல்ல கருங்கல்லிலே உருவான பரசுராமராக அவர் இருக்கிறார். இக்கோயிலை 1539-ல் அச்சுதராயன் கட்டியிருக்கிறான். அதனாலேதான் அக்கோயில் அச்சுதராயர் கோயில் என்று பெயர் பெற்றிருக்கிறது. இங்கிருந்து வடக்கு நோக்கி நடந்து ஆற்றை நோக்கிச் செல்லும் படிகளில் ஏறி நடந்தால் இங்கொரு கோதண்டராமர் கோயிலையும், அனந்தசயனர் கோயிலையும், வராகர் கோயிலையும் காணலாம். இங்கு தான் துங்கபத்திரை உத்தரவாஹினியாக ஓடுகிறது. அந்த இடத்தையே சக்கர தீர்த்தம் என்கின்றனர். அவகாசம் இருந்தால் நாமும் அங்கு அத்தீர்த்தத்தில் மூழ்கி நம் வினைகளைக் களையலாம். இவற்றையெல்லாம் கடந்து மேலே சென்றால் ஒரு குகை தென்படும். அந்தக் குகையிலே தான் சுக்ரீவன் ஒளிந்து வாழ்ந்திருக்கிறான். அதனையே சுக்ரீவன் குகை என்கின்றனர். இங்கிருந்து துங்கபத்திரையைக் கடக்க ஒரு கல் பாலம் கட்டியிருக்கின்றனர், அந்தக் காலத்தில். இன்று அங்கு இருப்பவை ஒரு சில கற்பாறைகளே.

'கிட்டத்தட்ட ஏழு எட்டு மைல்கள் இழுத்து அடித்து விட்டீரே. இன்னும் எவ்வளவு தூரம்தான் இழுத்தடிக்கப் போகிறீர்?' என்று நீங்கள் முணுமுணுப்பது என் காதில் கேட்கிறது. நான் என்ன செய்ய? ஹம்பியின் காவலாளி தானே பார்த்திருக்கிறோம்? இனித் தானே விட்டலர் கோயில், ஹஸரே ராமர்கோயில் போன்ற இடங்களுக்குப் போக வேணும்? அவைகளுக்கு இன்று உங்களை இழுத்தடிக்க விரும்பவில்லை. கட்டுச்சோறு அல்லது ஹாஸ்பட்டிலிருந்து ஏதாவது சிற்றுண்டி மூட்டையோ கொண்டு வந்திருந்தால் அவற்றை இந்தத் துங்கபத்திரை ஆற்றின் கரையிலோ பாறைகளிலோ உட்கார்ந்து அருந்தி விட்டு, கொஞ்சம் இளைப்பாறலாம். பின்னர் விஜயநகரத்து விட்டலர் கோயிலுக்குச் செல்லுவோம்.

# கண்டன

## ரா. வீழிநாதன்



"உனக்கும் சிலாவுக்கும் ஏன் கல்யாணம் நடக்கவில்லை என்பதை நீ சொல்லாத வரையில் நான் தூங்க மாட்டேன்!" என்று சிறிது நேரத்துக்கு முந்தித்தான் ரம்பி சொன்னான்.

ஆனால் அப்படிச் சொன்னவன்தான் இப்பொழுது தூக்கத்தில் ஆழ்ந்திருந்தான். ராஜு மட்டும் கண்களைக் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு படுத்திருந்தான். ரம்பி வந்தது முதற் கொண்டே எத்தனை தடவைகள் ராஜுவிடம் இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டான்? ஆனால் அவன்தான் நாள் முழுவதும் பதில் சொல்லாமல் டிமிக்கி கொடுத்து வந்தான். கடைசியில், 'இரவு சொல்கிறேன்' என்று சொல்லி அப்போதைக்குத் தப்பினான்.

இருட்டி வெகு நேரம் ஆகிவிட்டது. இருவரும் வாய் ஓயாமல் எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். நான்கு நாட்களுக்கு ஒரு முறை சந்தித்தாலே, அவர்களுக்குப் பேசிப் பேசி மாளாத பல விஷயங்கள் இருக்கும். இப்பொழுதோ நான்கு ஆண்டுகள் கழித்து ஒருவரை யொருவர் சந்திக்கிறார்கள். பேச்சுக்குப் பஞ்சமா இருக்கும்?

இத்தனை ஆண்டுகளும் ரம்பி வெளி நாட்டில் இருந்தான். நடிப்புக் கலையில் விசேஷப் பயிற்சி பெறுவதற்காக உபகாரச் சம்பளம் பெற்று அவன் வெளி நாடு போயிருந்தான். எத்தனையோ கற்றுத் தேர்ந்து நல்ல புகழுடன் தாய் நாட்டுக்குத் திரும்பி வந்திருந்தான். தன் நாட்டு நாடகக் கலையை அம்முறையில் வளர்க்க வேண்டும், மீண்டும் புனருத்தாரணம் செய்து பெரும் புகழும் அடையச் செய்ய வேண்டும் என்று அவன் தன் மனத்தில் எத்தனை எத்தனையோ திட்டங்கள் தீட்டியிருந்தான்.

"சிற்சில சமயம் சிலருடைய வாழ்க்கைக் கனவுகள் இப்படித்தான் நிறைவேறுகின்றன. ரம்பி, நீ இவ்விஷயத்தில் பெரிய அதிர்ஷ்டக்காரி!" என்றான் ராஜு.

"உன் புது நாடகத்தை நான் டில்லியில் மேடையேற்றப் போகிறேன். அப்பொழுது பார், நான் என்னென்ன வெல்லாம் அதிசயங்கள் நடத்திக் காட்டுகிறேன் என்று!" என்றான் ரம்பி பெருமிதத்துடன்.

அவர்கள் இருவரும ஆறு ஆண்டுகள் சேர்ந்தாற் போல் கல்லூரியில் படித்தவர்கள். கல்லூரி நாட்களிலேயே ராஜு நாடகங்கள் எழுதுவதுண்டு. ரம்பி அந்த நாடகங்களில் பங்கெடுத்துக் கொண்டு நடிப்பதுண்டு. நாடகம் என்னும் வளம் நிறைந்த மண்ணில்தான் அவர்களது நட்பு என்னும் பயிர் செழித்து வளர்ந்தது.

"இனி என் நாடகங்கள் உனக்கு எங்கே பிடிக்கப் போகின்றன, ரம்பி? நீயோ வெளி நாடு சென்று சிறந்த நாடகங்கள் மேடையேறும் முறையை நேரிலேயே கண்டு வந்திருக்கிறாய். உன் கலைத்திறனையும் நுண்ணறிவையும் பற்றி நீ அனுப்பிய ஆங்கிலப் பத்திரிகைகளில் வெகுவாகப் புகழ்ந்து எழுதியிருந்ததைப் பார்த்தேன். ஆகா! இனி உனக்கு..."

ரம்பி அவனை மேலும் பேசவிடவில்லை. சட்டென்று தன் விரல்களால் அவன் உதடுகளைப் பொத்தி விட்டான். ஆனால் புகழ்ச்சியுரை கேட்டு அவன் விரல்களேகூட அல்லவா பூரித்துப் போயிருந்ததைப் போலத் தோற்றமளித்தன!

பயணக் களைப்பு மேலிடவே, ரம்பி ஆழ்ந்த நித்திரை போயிருந்தான் இப்பொழுது.

"உனக்கும் சிலாவுக்கும் ஏன் கலியாணம் நடக்கவில்லை?" — ரம்பியைப் போலவே இதற்கு முன்பும் எத்தனையோ நண்பர்கள்



ராஜுவிடம் இதே கேள்வியைக் கேட்டிருக்கிறார்கள். ஆனால் யாருக்குமே இது வரையில் அவன் பதில் சொன்னதில்லை.

சீலா அவனை அளவுகடந்து நேசித்து வந்தாள். இருவருடைய பெற்றோருக்குமே இது தெரியும். அவர்கள் பரந்த நோக்கம் படைத்தவர்கள். எனவே, சீலா — ராஜு இருவரும் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகுவதை அவர்கள் தடுக்க முயன்றதில்லை. பார்க்கப் போனால் அவர்களுக்குப் பெருமளவு சுதந்திரமே அளித்திருந்தார்கள். ராஜு கோடை விடுமுறை நாட்களில் எத்தனையோ முறை தன் சகோதரிகளுடனும், நண்பர்களுடனும் சீலாவின் வீட்டில் போய்த் தங்கியிருக்கிறான். சீலாவின் வீடு சிம்லாவில் இருந்தது. ஏன், ஒரு முறை ரம்மிகூட அவனோடு அவள் வீட்டுக்குச் சென்று தங்கியிருக்கிறாள்!

அந்த நாட்களில் ராஜுவின் மனத்தை முழுவதும் ஆட்கொண்டவள் சீலாதான். ஆனால் இப்பொழுதோ சீலா விமானப் படையைச்சேர்ந்த ஓர் அதிகாரியின் மனைவி. இரண்டு குழந்தைகளுக்குத் தாய். ஒன்று ஆண். மிக மிக அழகு. இன்னொன்று பெண். அழகில் ஆணுக்கு நேர் எதிரிடை. 'இந்தப் பெண் மட்டும் ஏன் அழகாகப் பிறக்கவில்லை?' என்று ராஜு பல தடவைகள் எண்ணி எண்ணி மாய்ந்திருக்கிறான்.

''சீலாவுக்கும் அவனுக்கும் ஏன் கலியாணம் நடைபெறவில்லை?''

அதுவே நாடகத்துக்குள் நாடகமாக இருந்தது. அத்தகைய சிறந்ததொரு நாடகத்தைச் சிறந்த நாடகாசிரியனான ராஜுவினாலேயேகூடப் பிறருக்குப் புரியும்படி எடுத்துச் சொல்ல முடியாது. அத்தகைய ஒப்புவமையற்ற நாடகம் அது. அந்த நாடகத்துக்கு, நடிகை ரம்மியேகூட ஒரு நிஜமான பாத்திரமாயிருந்திருக்கிறாள்.

ஆம், அது ஓர் உண்மை நாடகம். அதற்கான பாத்திரங்களும் உண்மையானவர்கள். நாடக ஆசிரியன், அவன் காதலி, நாடக ஆசிரியனுக்கு மிகவும் வேண்டிய பெண் சிநேகிதி ஒருத்தி. அவள் நடிப்புக் கலையில் மிகத் தேர்ந்தவள். இவர்கள் மூவருமே கதா பாத்திரங்கள்

அப்பொழுது ரம்மி நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தின் மீது சந்திரக் கிரணங்கள் பட்டு அவளது சந்திர வதனத்துக்கு மெருகேற்றிக் கொண்டிருந்தன. ரம்மியின் முகத்திலேதான் எத்தனை அமைதி!

நாடகம் நடந்த அன்று இரவும்கூட ரம்மியின் முகத்தில் இப்படித்தான் சந்திரனின் ஒளி வீசிக் கொண்டிருந்தது. ஆனால் ரம்மியின் முகத்தில் அப்பொழுது இன்று போல் அமைதி நிழலாடவில்லை.

இது நடந்து நான்கு வருஷங்களாகிவிட்டன. வெளி நாடு செல்ல உபகாரச் சம்பளம் அவனுக்குக் கிடைக்கப் போவதாக அறிவிப்பு வந்தவுடன் அவன் தன் பாஸ்போர்ட் முதலியவற்றுக்கான ஏற்பாடு செய்ய வேண்டிச் சிம்லாவுக்குப் போனான். துணைக்குத் தன்னுடன் ராஜுவையும் அழைத்துப்போனான். இருவரும் சீலாவின் வீட்டில்தான் நான்கு நாட்களுக்குத் தங்கினார்கள்.

முதல் இரண்டு நாட்கள் அந்த அந்த அலுவலகங்களை முற்றுகையிட்டு அலுவல்களைக் கவனிப்பதில் முடிந்தன. மூன்றாவது நாள் ரம்மிக்குப் பாஸ் போர்ட் கிடைத்து விட்டது. ஆனால் அன்றே ரம்மி ஊர் புறப்பட முடியவில்லை. அங்கேயே தங்கும்படியாகி விட்டது. முதற் காரணம், வண்டியைப் பிடிக்க அவனுக்கு நேரம் வெகு குறைவாக இருந்தது. இரண்டாவது காரணம், அவன் வெளிநாடு புறப்படுவதைக் குறித்துச் சீலா அவனுக்கு ஒரு விருந்துபசாரம் நடத்தி வழியனுப்ப விரும்பினாள். அதற்கான ஏற்பாட்டையும் தடபுடலாகச் செய்வதில் முனைந்தாள்.

அந்த விருந்துபசார வைபவத்துக்குச் சீலாவின் தோழிகள் பலரும், நண்பர்கள் சிலரும் வந்திருந்தனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் ராஜுவுக்குத் தெரிந்தவர்களே. நேரிடையாக அவனைத் தெரியாவிட்டாலும், குறைந்த பட்சம் அவன் நாடகங்களைப் பற்றியாவது எல்லாருமே கேள்விப் பட்டிருந்தார்கள். சீலாவுக்கும் ராஜுவுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைப் பற்றியும்கூட அவர்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே, ஒவ்வொருவரும் வருங்காலக் கணவன்—மனைவி என்ற முறையில் அவர்கள் இருவரையும் இணைத்துக் கேலியாகப் பேசி மகிழ்ந்தனர்.

விருந்து ஏக அமர்க்களப்பட்டது. விருந்தை யொட்டி விதம் விதமான விளையாட்டுக்கள் இடம் பெற்றன.

அவற்றில் ஒரு விளையாட்டு. 'தண்டனை' என்று பெயர் அதற்கு. அதனை விளையாட இரண்டு சீட்டுக் கட்டுகள் வேண்டும். ஒன்றைக் கலைத்து ஆடுபவர்களிடையே பங்கு போட வேண்டும். இன்னொன்றைக் கலைத்து ஆட்டக்காரர்களின் மத்தியில் குப்புறத்தி வைக்க வேண்டும். அப்படிக் குப்புறத்தி இருந்த சீட்டுக் கட்டிலிருந்து ஒரு சீட்டை எடுத்துத் திருப்பி வைக்க வேண்டும். அந்த

வகைகளைச் சேர்ந்த 'ஆன்' சீட்டு வைத்திருப்பவனுக்கு என்ன தண்டனை என்று தீர்மானிப்பான் சீட்டைப் புரட்டியவன்.

அப்படிப் புரட்டிய ஒருவன், "இந்த 'ஆன்' வைத்திருப்பவர், பெண்ணாயிருந்தால் இந்த நிமிஷம் ஆணாக நடிக்க வேண்டும். ஆணாக இருந்தால் பெண்ணாக நடிக்க வேண்டும்" என்றான். இது போல ஒவ்வொருவருக்கும் மூன்று முறையாக ஏதாவது ஒரு வேடிக்கையான தண்டனை கிடைத்து வந்தது. அவரவர் தன் மனத்தில் தோன்றிய, கற்பனையில் உதித்த தண்டனையைக் கூறலாம் என்பது ஆட்டக்காரர் சட்டம்.

ஒருமுறை ராஜுவின் கையில் அப்படி ஒரு சீட்டு கிடைத்தது. அப்பொழுது அவனுக்கு அளிக்கப்பட்ட தண்டனை என்ன, தெரியுமா?

"இங்கே இருக்கும் பெண்மணிகளில் யார் உனக்கு அதிக அழகு வாய்ந்தவர்களாகத் தோன்றுகிறார்களோ, அவர்களுக்கெதிரே நீ தலை வணங்க வேண்டும், யார் அறிவாளியாகப்படுகிறார்களோ அவர்களோடு கை குலுக்க வேண்டும். யார் ஆழ்ந்த அன்பு கொண்டவர்களோ, அவர்களது கையை முத்தமிட வேண்டும்" என்றான் தண்டனை கூறியவன்.

ராஜுவின் கன்னங்கள் வெட்கத்தினால் சிவந்தன. அவன் அங்கே கூடியிருந்தவர்களில் ஒருவரிடம் மட்டும் விசேஷ அன்பு கொள்ளாமல், எல்லோரையும் ஒன்றாகப் பாவித்தால், யாருடைய கையையாவது பிடித்து முத்தமிட்டுத் தப்பித்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவன் உயிருக்குயிராக நேசித்து வரும் சீலா அருகிலேயே இருந்தாளே! அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பொருநியாகத் திகழ்ந்தாளே! அவளை விட்டு விட்டு அவன் வேறு யாருடைய கையைத் தொட்டு முத்தமிடுவது?

"எத்தனை நேரம்? சீக்கிரம்! சீக்கிரம்! இது வெறும் நடிப்புத்தானே? இதற்கு இவ்வளவு யோசிக்க வேண்டுமா?" என்று பல குரல்கள் ஏககாலத்தில் எழுந்தன.

கடைசியில் அமைதியுடன் ராஜு அழகுமிக்க பெண் ஒருத்தியின் முன் தலை வணங்கினான். ரம்பியோடு கைகுலுக்கினான். முத்தமிடச் சீலாவின் கையைக் கேட்டான். உள்ளத்தன்பை அவன் வெறும் நடிப்பாக்க விரும்பாததே இதற்குக் காரணம்.

சீலாவின் கையில் அப்படி ஒரு சீட்டுக் கிடைத்த பொழுது யாரோ ஒரு விந்தையான தண்டனை விதித்தார்கள். "பெண்ணின் கையில் இந்த 'ஆன்' இருந்தால் அவள் நடிக்கொரு ரோமியோவாக நடிக்க வேண்டும். ஆணின் கையில் கிடைத்தால் அவன்கொலை காரனாக நடிக்க வேண்டும்" என்றார்கள்.

இந்தத் தண்டனை விதிக்கத் தோன்றியவன், ஒரு வேளை விசித்திரமான, சுவைக் குறைவான நாவல்களில் அதிக ஈடுபாடு கொண்டவனோ என்னவோ? இந்த விளையாட்டில் தண்டனை பெறுபவர்கள் மாறுவது போல, தண்டனை அளிப்பவர்களும் அவ்வா முறை மாறி மாறி வந்தார்கள்!

சீலா மிகவும் தர்மசங்கடத்தில் மாட்டிக் கொண்டாள். என்ன செய்வது அவள்? நடிகர் ரோமியோவின் முகத்தைக் கூடப் பார்த்தவள் அல்லவே அவள்! நாவல்களில் ஒருவேளை அவர்களைப் பற்றி அவள் படித்திருக்கலாம். சினிமாப் படங்களில் அப்படி நடிப்பவர்களைக் கண்டிருக்கலாம். ஆனால் அவளுக்கு அப்படி பெண்ணாய் நடிக்க வராதே! அவள் உடலில் 'விறுவிறு' என்று ஓடிற்று. தொண்டை வறண்டது. சங்கோச சுபாவம் கொண்ட சீலா இந்த விபரீதமான தண்டனைக்கு எப்படி உடன்படுவாள்?

ராஜு அவளுக்கு உதவ எண்ணினான்.

"இந்தத் தண்டனை ரம்பிக்குக் கிடைத்திருந்தால், நடிப்பில் தேர்ச்சி காட்டியிருப்பாள். ஆனால் சீலா போன்ற சாதுப் பெண்ணுக்குப் போய் இந்தத் தண்டனை கிடைத்திருக்கிறதே!" என்று கூறிப் பொருளிதத்தோடு ரம்பியின் முகத்தை நோக்கினான். அட! இது என்ன? ரம்பியின் முகம் இப்படிக் கன்றிப் போனதேன்? ராஜு அப்படியே பேசமறந்தவன் போலானான். அவனுக்கு மேலே பேசத் தோன்றவில்லை.

ரம்பிக்கு என்ன வந்து விட்டது? ஏன் இப்படிக் குன்றி விட்டாள்? உடலுக்குள் உள்ள பொருள் ஏதாவது உடைந்து சிதைந்து விட்டதா?

'ரம்பி இந்தப் பாத்திரமாக நடித்தால் அவளது நடிப்பைப் புகழ்ந்து தள்ளிவிடலாம். அதோடு உபகாரச் சம்பளம் பெற்றுக் கலைப் பயிற்சிக்காக மேல்நாடு செல்லவிருக்கும் அவளுடைய நடிப்பைக் காண வேண்டும் என்ற துடிப்பு இங்கு கூடியிருக்கும் பலருக்கும் இருக்கும். அதனால் சீலாவுக்குக் கிடைத்துள்ள இந்தத் தண்டனையை ரம்பி ஏற்று நடித்தால், கூடியிருப்பவர்கள் தவறாக நினைக்கமாட்டார்கள்.' இப்படி எண்ணித்தான் ராஜு அப்படிச் சொன்னான். ஆனால் ரம்பியின் முகம் போன போக்கைக் கண்டபின் அவனால் வாய் திறந்து எதுவுமே சொல்ல முடியவில்லை. அப்படியே பிரமித்துப் போய்ச் சிலையாக உட்கார்ந்திருந்தான்.

ஆனால் இந்தத் தண்டனையை விதித்தவன் சீலா தவிப்பதையும் தடுமாறுவதையும் கண்டு அனுதாபப் போய், "சீலாவை ஒரு நிபந்தனையின் பேரில் நான் மன்னிக்கத் தயார். சீலாவின் தண்டனையை ரம்பி ஏற்று நடித்துக் காட்ட வேண்டும். ரம்பிக்குத் 'தண்டனை' கிடைக்கும் பொழுது சீலா அதை நிறைவேற்ற வேண்டும்!" என்றான்.

எல்லோரும் சம்மதித்தார்கள்.

சீலா நன்றியறிதலோடு ரம்பியை நோக்கினாள். ஆனால் ராஜு குனிந்த தலையைத் தூக்கவில்லை. அவனுக்கு ரம்பியின் முகத்தில் ஒருவித கருமை நிழல் அப்படியே படிந்து நிற்பதாகத் தோன்றியது.

"பேஷ்! பேஷ்!"

ரம்பி தேர்ந்த நடிகையாக உருமாறி நடிக்கொரு ரோமியோவின் பாகத்தை அபாரமாக நடித்துக் காட்டுகிறாள்!

"பேஷ்! பேஷ்! பலே பேஷ்!"

"இதே 'தண்டனை' ரம்பிக்குக் கிடைக்குமானால் என்று ராஜு சொன்னானே, அப்பொழுது அவள் அவனை எப்படிப் பார்த்தாள்? கோபமாகவா? இல்லை, கோபமில்லை, அது! ஏமாற்றமா? இல்லை, ஏமாற்றமும் இல்லை. அது! இடரென்று ரம்பியின் உடலுக்குள்ளே ஏதோ ஒன்று பட்டென்று தெறித்து உடைந்தது போலிருந்தது. ஏதோ எரிந்து

கருகிச் சாம்பலானது போலிருந்தது. உடைந்ததனால் உண்டான வேதனை முகத்தில் படிந்தது. எரிந்ததனால் உண்டான புகை அவன் முகத்திலே கருப்பாக ஓடிக் கறை விட்டு மறைந்தது. அதற்குப் பிறகு, அவர்கள் அந்த விளையாட்டை விளையாடிய அந்த நேரமும் ராஜுவுக்கு அது ஒரு விளையாட்டாகவே தோன்றவில்லை. விலையான பெருந் தண்டனையாகவே தோன்றியது.

அதற்குப் பின் ரம்பி அந்தக் கூட்டத்தில் சிரித்தால்கூட, அவள் மனம் திறந்து சிரிப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை; ஏதோ வேண்டுமென்று சிரிப்பதாக நடிப்பது போலத் தோன்றியது.

வந்திருந்த விருந்தினர்கள் அனைவரும் விடைபெற்றுக் கொண்டு வீடு திரும்பும் வரை, ரம்பியும், ராஜுவும் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளவே இல்லை. இருவருக்குமிடையே மனப் புழுக்கமும் மௌனமுமே நிலவியிருந்தன.

சீலாவுக்கு எதுவுமே விளங்கவில்லை. அவள் முன்னைக் காட்டிலும் ரம்பியை அதிகமாகக் கவனித்து ஆசார-உபசாரம் செய்தாள். ஏனெனில் ரம்பி மறு நாள் அங்கிருந்து புறப்பட்டுத் தன் சொந்த ஊரான அம்பாலாவுக்குப் போய், அங்கே ஒரு நாள் தங்கி விட்டுக் கப்பலைப் பிடிக்க அதற்கு மறுநாளே பம்பாய்க்குப் புறப்படுவதாக இருந்தாள். வெளிநாடு சென்றுவிட்டால், அப்புறம் அவளை நான்கு வருஷங்கள் பார்க்க முடியாதே!

ரம்பியும் ராஜுவும் பழைய நண்பர்கள் என்பது சீலாவுக்குத் தெரியும்; அதோடு அவர்களது நட்பு முதிர்ந்து உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலாகப் பரிணமிக்கவில்லை என்பதும் அவளுக்குத் தெரியும். நாடகக் கலையில் உள்ள பெரும் பற்றுதலே இருவருடைய நட்புக்கும் பலத்த அஸ்திவாரமாக விளங்கியது என்பதும்கூட அவளுக்கு ஓரளவு தெரியும். சீலாவுக்குச் சில சமயம் அவர்களுடைய அந்த நட்பை நினைக்கும்பொழுது பொறாமையாகக்கூட இருக்கும். ஆனால் ராஜு தனக்கு மட்டுமே உரிமையானவன் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அவளை ஆட்கொண்டிருந்ததால் அந்தப் பொறாமை வயிற்றெரிச்சலாக உருவெடுத்து அவளை வதைக்கவில்லை.

எப்படியும் ரம்பி காலையில் ஊருக்குப் புறப்பட்டாக வேண்டும். அதற்குள் எவ்வளவுக்கு எவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு அதிக நேரத்தை அவளுடன் ஏகாந்தமாகப் போக்க வேண்டும். மனம் விட்டுப் பேசி மகிழ வேண்டும் என்று பல வழிகளிலும் முயன்றாள் சீலா. ஆனால் ரம்பியும் ராஜுவும்? பேசுவதற்கு எதுவுமே இல்லாதவர்கள் போல் நடந்து கொண்டார்கள். அது மட்டுமா? என்றைக்குமே இருவரும் ஒருவருக்கொருவர் பேசிப் பழகாதவர்கள் போலக் கூட முகத்தை வைத்துக் கொண்டிருந்தார்கள். அப்படி முகத்தைத் திருப்பிக் கொண்டு 'உம்'மென்றிருக்க அவர்களுக்கு என்ன வந்து விட்டது?

கடைசியில் படுத்துறங்கும் நேரமே வந்து விட்டது. அவ்வீட்டில் பக்கத்தில் பக்கத்தில் இரண்டு அறைகள் இருந்தன. நடுக் கதவு திறந்திருந்தது. உள்ளே இருந்த படுக்கை அறையில் சீலாவும் அவள் நாத்தனாரும் படுத்துக்கொண்டார்கள். வெளிப்புறத்தில் இருந்த இரு தனி அறைகளிலும் ரம்பிக்கும் ராஜுவுக்கும் தனித் தனியாகப் படுக்கைகள் போடப்பட்டன.

இரு அறைகளிலும் மௌனம் நிலவியது. ஜன்னல் வழியாக ரம்பியின் முகத்தில் சந்திரன் நிலவைப் பொழிந்தான். அந்த நிலா ஒளியிலும்கூட ரம்பியின் முகத்திலே உடைந்த உள்ளத்தின் தெறிக்கும் வேதனை தெளிவாகத் தெரிந்தது. இதயக் குமைச்சலின் புகைக் கருமை நிழலாடியது.

''ரம்பி! ரம்பி!'' — மிகவும் மெதுவான குரல் ஒன்று அவளை அழைத்தது. ஒருவேளை சந்திரனின் கிரணங்கள்தான் அப்படி மெதுவாக அவளை அழைத்தனவோ?

''ரம்பி! உனக்கு ஏன் அப்படித் தோன்றியது? நான் உன் நடிப்புக் கலையையா பாராட்டினேன்? நமது நட்பை இப்படி ஒரு சாதாரண பிரமை எழுந்து அழிக்க முடியுமா? வேர் பறிக்கலாகுமா?

''ரம்பி! இனி வரப் போகும் நான்கு ஆண்டுகளுக்கு உன் குரலைக் கேட்க நான் ஏங்கித் தவிக்கத்தான் வேண்டும். என்னோடு பேசமாட்டாயா? ஒரு வார்த்தை பேசமாட்டாயா?''

''நீ என்னோடு கைகுலுக்கினாயே, எதற்காக? நான் கெட்டிக்காரி என்பதற்காகத் தானே? நடுத் தெரு மோகினியாக நடிக்கும் ஆற்றல் எனக்கு உண்டு என்பதற்காகத் தானே? உனக்குச் சாதுவாகத் தோன்றியவள் ஒருத்தி. அன்புக்கு அன்பானவளாகத் தோன்றியவள் வேறு ஒருத்தி. அழகியாகத் தோன்றியவள் மற்றொருத்தி!'' — இது ஒருவர் இன்னொருவரோடு பேசுவதாகத் தோன்றவில்லை; தனிமையில் யாரோ ஏதோ முணுமுணுப்பதாகவே தோன்றியது. உள்ளத் துடிப்புக்குள்ளே கருக்கொண்டிருந்த தனிமை, மீண்டும் ஒரு முறை தனிமையாகப் புலம்புவது போலத் தோன்றியது.

''விடியற்காலையில் நீ புறப்பட வேண்டும். உத்யமோ! நான் என் நாடகத்தில் கதாநாயகியின் பெயரை உனக்குச் சூட்டி அழைக்கிறேன், 'உத்யமோ' என்று! காலையில் புறப்பட்டாக வேண்டும் நீ. அப்புறம் நீலக் கடல் ஏழு தாண்டி வெளிநாட்டுக்குப் போய்விடுவாய்! உத்யமோ! என்னைத் தவறாக எண்ணாதே! நான் இலக்கியம், நாடகம் என்னும் எல்லை காணாப் பாதையிலே உன் உயிருக்குயிரான தோழன் அல்லவா?'' — நிலா பெருமூச்சு விடுவது போல் பேச்சு வந்தது.

அப்புறம்....?

ராஜு எழுந்து ரம்பியின் கட்டிலில் போய் அமர்ந்தான். அமர்ந்தவன் அப்படியே ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தான். அவன் அறை விளக்கைக்கூட ஏற்றவில்லை.

சந்திரன் வானக் கடலில் மூழ்கி மறைந்தான். ராஜு உட்கார்ந்தவன், உட்கார்ந்தபடியே இருந்தான். ''ரம்பி! ரம்பி!''

ரம்பி விம்மி அழுதாள். ரம்பியின் உள்ளத்துள்ளே ஏற்பட்டிருந்த விம்மல் தந்த வேதனை ராஜுவின் உடலையே உலுக்கி எடுத்து விட்டது. ''ராஜு!ராஜு!''

மிக்க நன்றி–

## நானும் சிசர்ஸைத்தான் பிடிக்கிறேன்

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக, நாட்டின் கிராமங்கள் நகரங்கள் எல்லாவற்றிலுமுள்ள வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்த வெவ்வேறு பருவமுள்ள ஆயிரக்கணக்கான மக்கள் சிசர்ஸ் சிகரெட் பிடித்து புகழ்ந்து கொண்டிருக்கின்றனர். சிசர்ஸ் சிகரெட் மட்டற்ற தேவையிலிருந்தே அதன் உச்ச ரகத்தை ருசுப்படுத்துகிறது. சிசர்ஸ் ஒரு உயர்ந்த ரக சிகரெட்—அதன் சுவை மறக்கமுடியாதது—அதன் மணமோ ஒரு தனி ரகம் ஆனது. குளிர்காலம் ஆனாலும் சரி, கோடைகாலம் ஆனாலும் சரி, மழை காலமானாலும் சரி சிசர்ஸ் எப்பொழுதும் திருப்தி அளிக்கும்.




JWTS 1370R

# ஜலதோஷம் மற்றும் தொண்டைப்புண்-

தொண்டைப்புண்ணோ அல்லது திடீரெனத் துவங்கித் தொந்தரவு தரும் ஜலதோஷமோ— 'ஆஸ்ப்ரோ'வினால் துரித நிவாரணம் பெறுவதை ஊர்ஜிதம் செய்து கொள்ளுங்கள். உங்களுக்குத் தொண்டைப்புண் இருந்தால், இளஞ்சூடான நீரில் 'ஆஸ்ப்ரோ'வைக் கரைத்து அதனால் கொப்பளியுங்கள். உலகம் முழுவதிலும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ' உங்கள் உடலின் நோவுறும் இடங்களில் நேரிடையாக வேலை செய்து நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது. குடும்பம் முழுவதற்கும் உபயோகிக்க 'ஆஸ்ப்ரோ' கைவசம் வைத்திருங்கள்.

## ணிலிருந்து பூரண நிவாரணம் பெறுங்கள்

# 'ஆஸ்ப்ரோ'



## குடும்பம் முழுவதற்கும் ஏற்றது

### 'ஆஸ்ப்ரோ' வேலை செய்யும் விதம் :



பரவுகிறது

நிவாரணமளிக்கிறது




இளஞ்சிவப்பும் வெள்ளை நிறமும் கொண்ட சீலிடப்பட்ட பட்டையைக் கேட்டு வாங்குங்கள்

# 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்

## மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்

ஒரு நிக்கோலஸ் தயாரிப்பு

கணபதி. இதற்கு முந்தைய உரைகள் பல இருப்பினும் அவைகளில் விளக்கப் பெறாத பல நுட்பங்கள் இவ்வாசிரியரால் விளக்கப்படுகின்றன. யோக சித்திகளைக் கூறும் சூத்திரங்களின் பலவற்றிற்கு மேலெழுந்தவாரியாகப் பொருள் கூறினும் அவை புத்திக்கு ஒவ்வாதனவாகக் காணப்படுவதால் அவற்றிற்கு எங்ஙனம் பொருள் கொள்வது பொருத்தும் என்பதையும் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். தவிர இரண்டு தனிப்பட்ட மார்க்கங்கள் இந்நூலில் கூறப்படுவதை முந்தைய உரையாசிரியர்கள் தெளிவுபட எடுத்துக் காட்டவில்லை. இவற்றைக் கிரியா யோகம், கைவல்யயோகம் என்று தனிப்பகுதிகளில் ஒழுங்கு படுத்தி, சூத்திரங்களின் பழைய வரிசையை மாற்றியமைத்துத் தெளிவுபடத் திரு கணபதி வகுத்துத் தருகிறார். கிரியா யோகம் சித்த விருத்தியின் பண்பாட்டால் உடலிலும் மனத்திலும் அடையக்கூடிய உயர்வையும் சித்திகளையும் பற்றிக் கூறுவது. கைவல்ய யோகம் இம்மாதிரி சித்திகளைப் பொருட்படுத்தாமல் சித்த நிவிருத்தியின் மூலம் ஜீவனை முக்தி நிலைக்கு அழைத்துச் செல்வது. மனத்தின் தத்துவத்தையும் யோகத்தின் நுட்பங்களையும் அறிய விரும்பும் ஒவ்வொருவரும் படித்துப் பயன் பெற வேண்டிய நூல் — ஆங்கில மொழியில் உள்ளது.

கிடைக்குமிடம்: திரு கணபதி, 9-டி, எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, மயிலாப்பூர், மதராஸ். விலை ரூ. 3.50.

## பராசக்தி

பராசக்தியின் வழிபாடு வேத நூல்களிலும் தந்திர சாஸ்திரங்களிலும் எங்ஙனம் கூறப்பட்டுள்ளன என்பதையும், நமது காலத்தில் மகான் அரவிந்தர் அனுஷ்டித்து வழி காட்டிய பூர்ண யோகத்தில் அது எங்ஙனம் ஒரு புதுத் திருப்பத்தையும் உயர்வையும் எய்தியிருக்கிறதென்பதையும் திரு பி. கோதண்டராமன் தமது புதிய நூலில் ஆராய்கிறார். அரவிந்தருடைய யோக மார்க்கத்தில் சுய முயற்சியோ, தெய்வ சக்தியை நம்பியிருப்பதோ சரியான வழியன்று: சக்தியிடம் சரணடைவதே சரியான வழி: அன்னையின் சக்தியினாலன்றி, அவளது திருவருளாலன்றி, யோகம் நடைபெறாது. அரவிந்தர் அருளிய "அன்னை" எனும் நூலில் அவர் கூறியுள்ளபடி, மகா ஸரஸ்வதி, வடிவங்களின் தத்துவங்கள் இந்நூலின் தொடக்கத்தில் இரத்தினச் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன. புதுச்சேரியில் அரவிந்த ஆசிரமத்தில் எழுந்தருளியுள்ள அன்னை யோக சக்தியால் தெய்வத் தன்மை அடைந்த பெரும் மானிடரல்லவென்றும், இவ்வுலகத்தில் அவதாரம் கொண்ட பராசக்தியே என்றும், அரவிந்தர் அவ்வப்போது கூறிய சொற்களிலிருந்தும், சென்ற நாற்பது வருஷங்களாக ஆசிரமச் சாதகர்களுக்கு அவர் செய்துள்ள உபதேசங்களிலிருந்தும், அரவிந்த யோகப் பயிற்சிக்குத் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டு வாழும் இந்நூலாசிரியர் திறம்பட விளக்குகிறார். அரவிந்தரையும் அன்னையையும் பின்பற்றி வாழ்பவர்களும் அவர்கள் உபதேசித்துள்ள பூர்ண யோகத்தின் ரகசியங்களை அறிந்து கொள்ள விரும்பும் பிறரும் படிக்க வேண்டிய புதிய தமிழ் நூல்.

—அண்ணா

கிடைக்குமிடம்: பி. கோதண்டராமன், ஸ்ரீ அரவிந்த ஆசிரமம், புதுச்சேரி — விலை ரூ. 2.50.

## வைதீக தர்ம வர்த்தனி

ஆஸ்திகர்களுக்கு அருந்தொண்டாற்றி வரும் இந்தப் பத்திரிகையின் பதினாறாம் ஆண்டு விஜயதசமி மலர் இப்பொழுது வெளி வந்துள்ளது. காஞ்சி காமகோடி ஆசாரிய சுவாமிகள் ஸ்ரீமுகம் அருளியுள்ள இம்மலரில் பல சுவையான அம்சங்கள் அடங்கியுள்ளன. 'ராமன் காட்டிய வழியில்' நம்மை அழைத்துச் செல்கிறார் ராஜாஜி. பக்திச் செல்வத்தைப் பரப்பும் பணியிலே முன் நிற்கும் இப்பத்திரிகையை ஆஸ்திகர்கள் அனைவரும் வாங்கிப் பயன் பெறவேண்டியது அவசியம்.

ஆசிரியர்: சோமதேவ சர்மா; கிடைக்குமிடம்: வைதிக தர்மவர்த்தனி, கடலாசல், வடாகல் போஸ்ட், (வழி) சீர்காழி. வருஷ சந்தா [மலர் உட்பட] ரூ. 5.00.

## வேதாரண்யம் வேதமூர்த்தியின் மறைவு

நாகஸ்வரத்தில் நாதரஸங்களைக் காதார அளித்து வந்த வேதாரண்யம் வேதமூர்த்தி அவர்களின் மரணச் செய்தி ரசிகர்களைத் திடுக்கிடச் செய்தது. வயது அதிகமாகாவிடினும் தமது மேதையின் காரணமாக முதல்தர வித்வான்களிடையே இடம் பெற்றவர் திரு வேதமூர்த்தி அவர்கள். பொதுவாக மேதைகளுக்கு நூதன வித்தைகள் செய்வதிலும், குறுக்கு வழிகளில் புகுவதிலும் ஒரு தனிப் பிரியம் உண்டு. திரு வேதமூர்த்தி அவ்வழியில் செல்லாது இசையின் சம்பிரதாயத் தூய்மை கெடாது அதனைப் பயின்றவர். இந்த வித்வானின் அகால மரணம் கர்நாடக சங்கீத உலகுக்குப் பெரும் நஷ்டமாகும்.



# பொற் கனவே போய் வா...

வாசவன்




சொந்த மண்ணை மிதித்த வுடனே என் உடம்பு புல்லரித்தது. எத்தனை நீண்ட பிரிவு? முப்பது வருஷங்களாகக் கலையாத கனவை நீக்கிக் கொண்டு வந்திருக்கிறேன் நான்.

இந்தக் கனவை ஏன் கலைத்துக் கொண்டேன்? புரிந்ததை விடப் புரியாததை அதிகம்? இந்த மண் எனக்களித்த வயதையும், வாலிபத்தையும், செழிப்பான சிந்தனைகளையும், வளமான வாழ்க்கையையும் எங்கேயோ கொண்டு போய்ப் பறிகொடுத்து விட்டு அறுபது வருஷத்திய புதுமையையும், ஏமாற்றத்தையும், ஏந்திக் கொண்டு மீண்டும் வந்திருக்கிறேன்!

இதோ குளம். நீரை முன்னே வைத்து ஊரைப் பின்னே அமைத்தார்கள் அந்தக் காலத்துப்பெரியவர்கள். நீர் அன்னையல்லவா? அன்னைக்குப் பின்னே மக்கள் இருப்பதுதானே பண்பு? அந்தக் காலத்தில் ஒவ்வொன்றையும் எத்தனை பொருள் வளத்துடன்தான் அமைத்திருக்கிறார்கள்?

குளம் அப்படியே இருக்கிறது. தெற்குக் கரை மதகில் ஏற்பட்ட வெடிப்புக் கூட மாறாமல், மாற்றப்படாமல் தான் இருக்கிறது. அந்தப் பிள்ளையார் கோவிலை அடுத்த ஆல மரத்தில் அப்பொழுதெல்லாம் காக்கை, குரு

விகள் வாரும். இப்பொழுது கட்சிக் கொடிகள் வாழ்ந்து கொண்டிருக்கின்றன!

பிள்ளையார் கோயிலை ஒட்டி நடக்கிறேன். அங்கே ஐந்தாறு விடலைப் பையன்கள் பந்தாட்டம் ஆடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காலத்தில் எல்லாம் சீட்டுப்பட்டவர்கள் கோயில் திண்ணைக்கூட மிதிக்க மாட்டார்கள். இப்பொழுது சீட்டாட்டம் நடக்கிறது!

சீட்டாடிக் கொண்டிருந்தவர்கள் ஊருக்குப் புதியவனான என்னை வெறித்துப் பார்க்கிறார்கள். அவர்களைப் போல நானும் இந்த மண்ணில் பிறந்தவன் தான். நீண்ட பிரிவுக்குப் பிறகு வந்திருக்கிறேன். அதுவரையில் தான் அவர்களுக்குப் புதியவன் தானே?

இப்பொழுது விவசாயிகள் தெருவில் போய்க் கொண்டிருக்கிறேன். தெரு பழைய மாதிரியாக இல்லை. வீடுகளும் உருமாறி விட்டிருக்கின்றன. தெருவில் போய்க் கொண்டிருந்தவர்கள், விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் எல்லோருமே என்னை விநோதமாகப் பார்க்கிறார்கள். என்னைத் தெரிந்து கொண்டவர்கள் யாருமே இந்த ஊரில் இல்லையா?......

திண்ணையில் கால் நீட்டிக்கொண்டிருந்த கிழவி ஒருத்தி என்னைக்



கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்துவிட்டு, தன் காலடியில் உட்கார்ந்திருந்த கருகமணி அணிந்த ஒரு கன்னிப் பெண்ணிடம் சற்று உரக்கவே சொல்லிக் கொண்டிருந்தாள்:'' இவனை உனக்குத் தெரியுமா? எப்படித் தெரியும்? நீ பொறக்கிறதுக்கு முன்னாலேயே பொஞ்சாதி புள்ளைகளைத் தவிக்க விட்டுவிட்டுப் போனவன்டா இவன் ஆச்சே! அந்தக் காலத்திலே இவனைப் பார்க்கணும். சல்லாவும் பொட்டும் மயில் கண் வேட்டியுமா பெரிய மைனர் ஆட்டம் ஆடிய புண்ணியவான். இப்போ வயசாயிடுச்சில்லே? ஆட்டம் நின்னுருக்கும். ஊர் நினைவு வந்திருக்கும்!''

என் காதில் எல்லாம் விழுந்தன. அவளை நேரடியாகப் பார்க்கக் கூசி, திருட்டுத்தனமாகப் பார்க்கிறேன். அவள் காயாம்பூ அல்லவா? அந்தக் காலத்தில் அவளைப் பார்க்க வேணும். காளையார் கோயில் தெப்பத்தைப் போல அவள் நீரில் அலையும்போது என் நெஞ்சையே பறிகொடுத்து நின்றிருக்கிறேன். அவள் இப்பொழுது என்னைவிடக் கிழடாகி யிருக்கிறாள்! அழகில் வைரம் எடுக்கும் அழகு எல்லாம், பொட்டு நாசமாய்ப் போன இந்தக் காலத்துக்குப் பிறகுமா என்னுள் இருக்கிறது?

ம்க்கும்! வாசனை யாரை விட்டது?

காயாம்பூ சொன்னதைப் போல என் ஆட்டம் நின்றுதான் விட்டது. தானாக நிற்க வில்லை. தடி கொண்டு அடித்து நிறுத்தப்பட்டிருக்கிறது. அம்மணி தூக்கி இருக்காவிட்டால், முப்பது வருஷங்களுக்கு முன் நான் விட்டு வந்த கூட்டை நோக்கி ஏன் பறந்து வந்திருக்கிறேன்?

அம்மணி காளையார் கோயில் ஆவணித் திருவிழாவுக்குச் சதிர் ஆட வந்தபோது, குடும்பத்துடன் திருவிழாவுக்குப் போயிருந்த நான் குடிகாரன் போலத்தான் மயங்கி விட்டேன். இல்லா விட்டால் மங்களம் கண்ணைப் பிசைந்து, ''இதுகளுக்கு வழி சொல்லி விட்டுப் போங்கோ'' என்று என் குழந்தைகளைக் காட்டியபோது, கொஞ்சமாவது நான் அசைந்து கொடுத்திருப்பேன் அல்லவா? அப்படியே அவர்களை நடுத்தெருவில் நிறுத்திவிட்டு அம்மணியின் பெட்டி வண்டியில் வேகமாக ஏறிக் கொண்டு விட்டேன்.

அவ்வப்பொழுது ஊருக்கு வந்து நிலம் கரைகளைக் கிரயம் செய்து விட்டுப் போனபோது நான், குடும்பத்துக்கென்று ஐந்தோ பத்தோ கொடுத்தவனல்ல. நாலாவது தடவை என்று நினைக்கிறேன். மறுபடியும் நிலம் விற்க நான் ஊர் போயிருந்த பொழுது, என்னை எதிர்க்க என் மாமனார் காத்திருந்தார். ஊர்ப் பெரிய மனிதர்கள் எல்லாம் அவர் பக்கம். என்னை ஊர்ப் பொதுச் சாவடியில் குற்றவாளியைப் போல் நிறுத்திப் பஞ்சாயத்து வைத்தார்கள்.

''நீ பாட்டுக்கு இருக்கிறதை யெல்லாம் விற்று எங்கேயோ இருக்கிற அம்மணிக்குக் கொண்டு போய்க் கொட்டுறதும் உம் மனைவியும், குழந்தை

களும் என்ன தவியிலே துணிமையா போட்டுக் கொண்டு போவாங்க? விற்ற வரையிலே சரி. இனி இருக்கிறதிலே கை வைக்கப் படாது. நீர் எனக்கு எழுதிக் கொடுத்தாலும் அவன் இங்கே வந்து நிலத்திலே ஏர் பூட்ட முடியாது'' என்று பெரியதனக்காரர் என்னை எச்சரித்தார்.

எனக்குக் கோபமான கோபம். ''என் நிலத்திலே எனக்கு உரிமை இல்லாம செஞ்சுட்டேள். இனி குடும்பத்தையும் நீங்களே பார்த்துக் கொள்றேளா?'' என்று ஆக்கிரத்திலும் படபடத்தேன்.

''கடவுள் இல்லே கடவுள்? அவன் பார்த்துக் கொள்கிறான். நாங்களும் அந்தக் குடும்பத்துக்கு இனி வேலியாக நிற்போம்'' என்றார் பெரியதனக்காரர் உறுதியான குரலில்.

அப்பொழுது வெளியேறிப் போனவன், இப்பொழுதுதான் வந்திருக்கிறேன்.

''யாரடா அது? சாமாவா?'' என்ற குரல் கேட்டுத் திடுக்குற்றுப் பார்க்கிறேன்.

சம்புத் தாத்தா எதிரே நின்று கொண்டிருக்கிறார். அவர் வயதிலே பெரியவர். வசதியிலே பெரியவர். வாய் வீச்சிலும் கொஞ்சம் பெரியவர்தான்.

''ஆமாம், தாத்தா! சௌக்கியமா இருக்கேளா?'' ஏதோ உபசாரத்துக்காகக் கேட்டு வைத்தேன். இவரிடமிருந்து சீக்கிரம் தப்பித்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் தெருவை நாற அடித்து விடுவார். முகத்தைத் திருப்பிக் கொண்டு பதில் ஏதும் சொல்லாமல் நிற்கும் சம்புத் தாத்தாவை மீண்டும் ஒரு முறை பார்க்காமல் மேலே நடக்கிறேன்.

''போடா சாமா! நீ உயிரோடே இருக்கியாடா? செத்துப்போயிட்டேன்னு நினைச்சிண்டிருந்தேன்!'' அவர் குரலில் கசப்பும், வெறுப்பும் கலவை இடுகின்றன.

''போறதுக்கு விடு வர வேண்டாமா தாத்தா?''

கோபத்தைச் சமாதானரீதியாகச் சமாளித்துக் கொள்ள முயல்கிறேன்.

''மானம் கெட்டவன் விடுக்காகக் காத்திண்டிருக்கலாமோடா? எந்த முகத்தோடே ஊருக்கு வந்திருக்கே? ஒரு முழக் கயிறு இல்லே? த்தூ!....'' ஒரு வண்டிக் கற்களை என் மனத்தில் வீசி விட்டு, என்னைக் கடந்து வேகமாகப் போய் விட்டார்.

உண்மையிலேயே நான் மானம் கெட்டவன் தானா? ஊருக்கு நான் வந்தால் என்ன தவறு? இது நான் பிறந்த மண். இங்கே என் மனைவியும் மக்களும் இருக்கிறார்கள். இப்பொழுது தானா இருக்கிறார்கள்? இத்தனை வருஷங்களாக இல்லையா? அப்பொழுதெல்லாம் இல்லாத கவலை இப்பொழுது மட்டும் வருவானேன்?

அது கரிசனம் இல்லை. கெட்ட காறதை தேடிக் கொண்டு வந்த போக்கிடம்.

இந்தக் 'காறதை'யைக் கெடுத்தது யார்? அம்மணியா? நானா?

இருவரும் இல்லை. மங்களம்தான். என் அபிலாஷைகளின் ஆவேசத்துக்குக் குறுக்கீடு போட முடியாத அளவுக்கு அவள் பின் தங்கி விட்டாள். 'கணவனே தெய்வம்' என்ற அவளுடைய கருத்தில் தப்பில்லை. ஆனால் 'புருஷன் தெய்வம் மட்டும் அல்ல, உணர்ச்சிகள் நிறைந்த ஒரு மனிதனுமாக இருக்கிறான் அவன்' என்பதை மட்டும் அவள் தெரிந்து கொண்டிருந்தாளானால், நான் ஏன் அம்மணியிடம் ஓடி இருக்கப் போகிறேன்?

அம்மணி என் உணர்ச்சிகளுக்கு மட்டும் வேலி கட்டினாள் என்று கூறினால், அது முழுப் பொய்யாகும். என்னை மனிதனாக்கினாள். உணர்ச்சிகள் மட்டும் வாழ்க்கை இல்லை என்பதை எனக்குக் கற்றுக் கொடுத்தாள். என் கஷ்டங்களையும், தோல்விகளையும் தான் தாங்கிக் கொண்டு, பிறருக்காகத் தன்னைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்த்துக் கொள்ளும் 'ஊதுபத்தி வாழ்க்கையில் தான் இன்பம் இருக்கிறது' என்று உணர்வித்தாள். 'அன்பு' என்கிற பலமான கயிற்றால் என்னைக் கட்டிப் போட்டு, அவள் இல்லாத உலகம் ஒன்றைச் சிந்தித்துப் பார்க்கவே எனக்கு நேரம் இல்லாமல் செய்து விட்டாள்.

நேற்று, நான் எங்கோ வெளியில் போய் விட்டு வீட்டுக்குத் திரும்பினேன்.

அம்மணி யாரோ ஒரு பட்டு உடை உடுத்த கிழவருடன் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டிருந்தாள்.

''அந்த லக்கற்ற சாமானை ஏன் கட்டிக் கொண்டு அழுகிறாய்?'' என்று கேட்டார் அந்தக் கிழவர்.

''என்ன செய்வது? தொட்ட தோஷம், கையை விட்டுப் போகவில்லை. இனிமேல் நான் அதையெல்லாம் பார்க்கப் போவதில்லை. அவரை விரட்டி விடுகிறேன். நீங்கள்தான் இனிச் சகலமும்....''

அம்மணியா சொல்கிறாள்? ஆத்திரம், வெறுப்பு, ஏமாற்றம் எல்லாமே என்னை ஒரே கணத்தில் சூழ்ந்து விட்டன. விடுவிடென்று உள்ளே போனேன். ''அம்மணி! நீ என்னை விரட்ட வேண்டியதில்லை. நானே போய் விடுகிறேன். இத்தனை வருஷங்களாக நீ என்னைக் கட்டி வைத்திருந்த கயிறு விஷக்கயிறுதான் என்பதை எனக்குத் தெரிவித்த உனக்கு நன்றி!'' என்று சொல்லி விட்டு, கட்டிய உடையுடன், கையில் காசில்லாமல் கால் நடையாகவே கிளம்பி ஊர் வந்திருக்கிறேன்.

''ஐயா, வந்திட்டேளா! இப்போதான் ஊருக்கு வழி தெரிஞ்சுதா! அம்மா படுத்த படுக்கையாகக் கெடக்கறப் போவாது வந்தேளே!'' என்று கேட்பவர் கௌசலை ஓதுவார் அல்லவா?

வெட்கம் என் உதடுகளில் ஓர் அசட்டுச் சிரிப்பாகத் தவழ்கிறது. சம்புத் தாத்தா பச்சையாகக் கேட்டதை இவர் 'பாலிஷா'கக் கேட்கிறார்! நான் பல்லுடைந்து திரும்பி யிருக்கிறேன். படுத்த படுக்கையாக இருக்கும் மனைவிக்காகவா ஓடோடி வந்திருக்கிறேன்?

அதற்கென்று வருவது என்றால் ஐந்தாறு நாட்களுக்கு முன்னாலேயே நான் வந்திருக்க வேண்டும். என்னுடைய மூத்த பையன் ஒரு கடிதம் எழுதி யிருந்தான்.

வைதிக சம்பிரதாயம் என்று இல்லையா? அது இது எல்லாம் எழுதி விட்டுப் பின்னும் எழுதி யிருந்தான். ''அம்மா ஒரு மாதமாகப் படுத்த படுக்கையாக இருக்கிறாள். பெரிய வைத்தியம் செய்தால் அவள் பிழைக்கலாம். அதற்கு எங்களிடம் பணம் இல்லை. நீங்கள் கொஞ்சம் வைத்து விட்டுப்போன நிலங்களை விற்றுத் தான் அம்மா எங்களை வளர்த்தாள். கல்யாணங் காட்சிகள் செய்து வைத்தாள்.

வசதி இல்லாததால் எங்களுக்குச் சரியான படிப்பும் இல்லை. எப்படியோ கஷ்ட ஜீவனம் செய்து கொண்டு காலத்தை ஓட்டி வரும் இந்தச் சமயத்தில், அம்மாவுக்கு வைத்தியம் செய்ய எங்களால் முடியவில்லை. பெரிய மனசு பண்ணி இருநூறோ முந்நூறோ அனுப்பி வையுங்கள். அதோடு அம்மாவும் உங்களைப் பார்க்க விரும்புகிறாள். நாங்களும் உங்களை நினைவறியாப் பருவத்தில் பார்த்தது. உங்கள் தரிசனம் எங்களுக்குக் கிடைக்கும்படி செய்யுங்கள்...."

கடிதத்தைப் படித்துவிட்டு நான் அலட்சியத்துடன் விட்டு விசிறியதைப் பார்த்துக் கொண்டிருந்த அம்மணி, "ஒரு முறை ஊருக்குப் போய் வாருங்களேன்" என்றாள்.

"உன்னைப் பிரிந்தா?"

"என்னைத்தான் முப்பது வருஷங்களாக விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறீர்களே! இனிமேலாவது பிடியைத் தளர்த்துங்களேன்! உங்களைக் கைப்பிடித்த பாவத்தாலேயே இப்பொழுது படுக்கையில் விழுந்து கிடக்கும் மங்களத்தைத் தயவு செய்து பார்த்து வாருங்கள். ஆயிரம் ரூபாய்ப் பணம் தருகிறேன். கொஞ்ச நாளைக்கு அங்கே போய் இருங்கள்!" என்றாள்.

"ஆயிரம் ரூபாய் லஞ்சம் கொடுத்து என்னை விரட்டி அடிக்கப் பார்க்கிறாயா அம்மணி? உன்னை விட்டு ஒரு கணமும் என்னால் பிரிந்திருக்க முடியாது" என்றேன் கண்டிப்பாக.

என்னை நயமாக விரட்டி அடிக்கப் பார்த்து, அது முடியாமல் போனவுடன் தன் உள்ளத்தைப் பளிச்சென்று காட்டி விட்டாள் அம்மணி. யாரோ ஒரு பணக்கார இளைஞனுடன்....தூ! ஐம்பது வயதில் வேறொரு காதல்! காதலாவது, மண்ணாவது கட்டியாவது! எல்லாம் பணத்துக்காக. நான் கொடுத்து ஓய்ந்து விட்டேன். பிறகு நான் எதற்கு?

'சண்டாளி! உனக்காக என் குடும்பத்தையே நாசமாக்கி விட்டேனே!'

"பெரியவா யாரோ?"

விழியிலேயே சித்தனை வசப்பட்டு நின்று கொண்டிருந்தவன், பக்குவமான இந்த விசாரணையில் திரும்பிப் பார்க்கிறேன்.

அவனுக்கு முப்பத்தைந்து வயதிருக்கலாம். அடிபட்டு நைந்து போன இரக்கம் அவன் முகத்தில். அழுக்கு உடையும், நெற்றியில் துலங்கும் திருநாறும் அவன் வாழ்க்கை நிலையையும், பண்பையும் கூறின.

"யார் பெற்ற பிள்ளையோ?"

ஒரு பெருமூச்சுக்குப் பிறகு என் நினைவு கிளறுகிறது. அவன் எனக்கு அந்நியன் இல்லை; அறிமுகமானவன். ஆனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுக்குக் கூட ஏதோ இணைவு இருக்கும் போலிருக்கிறது. என் முகத்தையே விழி கொட்டாது பார்த்து, நினைவின் தாளினை யெல்லாம் தட்டிக் கொட்ட முயல்கிறான்.

சற்றே விலகி நின்று கொண்டிருந்த கிழவர் ஒருவர் எங்களை நெருங்குகிறார்.

"என்ன இப்படிப் பார்க்கிறீங்க? உங்க பெரிய பிள்ளையாண்டான், நடராஜன்!" என்கிறார்.

என் பிள்ளையாண்டானா? அப்பனுக்குப் பிள்ளையைக் காட்ட மூன்றாமவர் அவசியமா?



காணிலே அறிவிப்பு நிலையக்காரர் ஜோசியரிடம்: என் ஜாதகத்தைக் கொஞ்சம் பாருங்கள்! நான் எது சொன்னாலும் பலிக்கமாட்டேங்கிறது! வெய்யில் அடிக்கும் என்றால் மழை பெய்கிறது! மழைவரும் என்றால் வெய்யில் காய்கிறது! என்ன செய்யலாம்?

எங்கள் சொந்தம் எப்படிப்பட்ட சொந்தம்? நெஞ்சம் வெடித்து விடும் நெகிழ்வில் "நடராஜா!...." என்று கரகரக்கிறேன்.

அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. கரகரவென்று கண்ணீர் வடிக்கிறான். "நாங்கள் ளாம் அதிர்ஷ்டம் செய்தவா. நீங்க வரமாட்டேன்னு அம்மா சொன்னா. ஆனால் நீங்க கட்டாயம் வருவேள்னு நான் அடித்துச் சொன்னேன். வாங்கோ, வீட்டுக்குப் போகலாம்!" என்றான் பரவசக் குரலில்.

அநியாயம் செய்த தந்தைக்கு இவ்வளவு பெரிய வரவேற்பா? தண்டிக்கப்பட வேண்டியவனுக்குச் சந்தனப் பூச்சா?

"வாங்கோ!"

நடக்கிறான் நடராஜன். அவனைத் தொடர்கிறேன் நான்.

இருள் மெல்ல விரிகிறது. நாங்கள் வீட்டுக்குப் போகும் பொழுது விளக்கு ஏற்றி விட்டார்கள்.

கூடத்தில் போய் நின்ற நடராஜன் "அப்பா வந்துட்டா! எல்லோரும் வந்து அவர் காலிலே விழுங்கோ!" என்று ஆவேசமாகக் கூச்சலிடுகிறான்.

யார் யாரோ வந்தார்கள். எல்லோரும் என் காலில் விழுந்தார்கள். சிறியவளைத் தெரிகிறது. மற்ற எல்லோரும் எனக்குப் புதியவர்கள். ஆனால் என்னவர்கள். எனக்குத் தெரியாத என்னுடையவர்களின் முகத்தை எல்லாம் பார்த்து விட்டு மீண்ட என் கண்கள் என் காலடிக்குத் திரும்புகின்றன. யார் இப்படி என் கால்களில் விழுந்து கிடப்பது? கண்ணீரில் தன்னைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துக் கொண்டிருப்பது யார்?

மங்களம்! ஏப்பமும், வறுமையும், நோயும் நான் அவளுக்குக் கொடுத்த சாபங்கள்.. இன்னுமா நான் அவளுக்குக் கடவுள்? என்னைப் போன்ற உருப்படாதவர்கள் நிறைந்த இந்த நாற்றம் பிடித்த தேசத்தில் பெருமைப்படு வதற்குரிய பெண்மை இன்னுமா வாழ்கிறது?

நான் குலுங்கிக் குலுங்கி அழுகிறேன்.



**கணவன்** : இரண்டு பேருக்கும் இந்தக் குடை போதவில்லையே!

**மனைவி** : நான் ஒருத்தி பிறந்ததே தப்பு!

**கணவன்** : பிறந்ததுலே என்ன தப்பு? வளர்ந்ததிலேதான் தப்பு!

மங்களம் தலையைத் தூக்குகிறாள். கண்ணீர் வடிக்கிறாள். அவள் விழிகள் பளபளக்கின்றன. எல்லா வெம்மைகளையும் வென்று பனித் தன்மையில் இதழ் விரிக்கிற மலர்ப் பொய்கையாகிறது அவள் முகம். "ஏன் அழறேள்?" என்கிறாள் கலங்கும் குரலில்.

"படுத்த படுக்கையில் கிடந்தவள் எப்படி ஓடி வந்தே? எனக்காக எதையுமே வெல்கிற சக்தி உனக்கு இருக்கிறது. ஆனால் 'அம்மணி' என்கிற துரும்பை வெல்கிற சக்தி கூட எனக்கில்லையே!" என்று இன்னும் தேம்புகிறேன்.

"அம்மணியை அப்படிச் சொல்லாதீர்கள். என்னுடைய கடவுள் முன்னாலே நான் ஊமைத்தனமா நின்னுண்டிருந்த போது, அவள் உங்களுக்குப் புரியும்படியான பாஷையிலே பேசி, உங்களை சந்தோஷப்படுத்திண்டிருந்தாளே. அவளைத் துரும்புன்னு சொல்லாதீர்கள். துரும்பாலே ஒரு கடவுளை அடைய முடியாது!" அதிகம் பேசிவிட்ட களைப்பில் தடுமாறுகிறாள் மங்களம்.

நடராஜன் அவளை எடுத்துத் தோளில் சாத்தியபடி அழைத்துப் போய்ப் படுக்கையில் கிடத்திவிட்டு வருகிறான்.

எல்லோரும் இன்னும் கலையாமல் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் விழிகள் எல்லாம் வேல்களாகப் புறப்படுகின்றன. என் நெஞ்சில் வந்து பாய்கின்றன. உதாசீனம் மட்டும் கொடுமையானதல்ல; அன்பும் கொடுமையானதுதான்.

"கூப்பிடுறாங்க!"

வெளிப்புற வாசலிலிருந்து குரல் வருகிறது. திரும்பிப் பார்க்கிறேன். அம்மணியின் வேலைக்காரன் மன்னார் நின்று கொண்டிருக்கிறான். கண் கொள்ளாத கசப்பு எனக்கு.

"என்னடா?"

படியேறி வந்து, ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்து விட்டு, எதுவும் பேசாமல் வெளியேறிப் போகிறான்.

கையெழுத்துப் புரிகிறது. அம்மணி எழுதியிருக்கிறாள்.

"அடியாள் வணக்கம். முப்பது வருஷங்களுக்கு முன்னால் காளியார்கோவில் திருவிழாவின் போது உங்களை மங்களத்திடமிருந்து பறித்துக் கொண்டு வந்தபோது எனக்கு இருந்த உற்சாகம் ஒரு குடும்பத்தை எப்படிப் பாழ்படுத்தும் என்பதை ஒரு வாரத்துக்கு முன்னால் — உங்கள் மகன் எழுதிய கடிதத்தைப் படித்ததற்கு முன்னால் — நான் உணர்ந்தவள் அல்ல. மங்களம் படுத்த படுக்கையாகி விட்டாள். குடும்பம் வறுமையால் வாடுகிறது. இவையெல்லாம் என்னால் விளைந்த விளைவுகள். உங்களிடம் சொன்னேன், சில நாட்களாவது ஊரில் போய் இருந்து வரும்படி. என்னை விட்டுப் பிரிய மனமில்லாத நீங்கள் மறுத்து விட்டீர்கள். எனக்கு மட்டும் உங்களைப் பிரிந்திருக்க மகிழ்ச்சியா? என் மகிழ்ச்சி முக்கியம் என்றால் அதைவிட முக்கியம் மங்களத்தின் மகிழ்ச்சி அல்லவா? உங்களை நான் களவாடி வந்தபோது அவள் மகிழ்ச்சியையும்தானே களவாடி வந்தேன்?

"உங்களை அவளுக்குத் திருப்பிக் கொடுப்பதன் மூலம் மகிழ்ச்சியையும் கொடுக்க முடியும் என்பதை உணர்ந்தேன். உங்களை நான் அனுப்பத் தயாராக இருந்தாலும் நீங்கள் போகத் தயாராக இல்லை என்று தெரிந்தவுடன், உங்களுக்கு என்னிடம் வெறுப்பு உண்டாக்க வேண்டிய நிலை வந்தது. அதனால்தான் நீங்கள் வரும் வேளை பார்த்து அந்தக் கிழவர் என்னிடம் உங்களைப் பற்றிக் கேவலமாகப் பேசினார். நான் கூட அவரிடம், 'இனி நீங்கள்தான் சகலமும்' என்றேனே, அது நான் விரும்பாத உங்களை விரட்டக் கூடிய நாடகம். நாடகம் பலன் அளித்தது.

நீங்களே போய் விட்ட பிறகு எனக்குச் சொத்து எதற்கு? ஐந்தாறு நாட்களாகவே முயன்று, நேற்று எல்லாவற்றையும் விற்று விட்டேன். அந்தப் பணத்தை மொத்தமும் 'டிராப்'டாக்கி இத்துடன் இணைத்திருக்கிறேன். உங்கள் குழந்தைகளுக்கு நான் இழைத்த துரோகத்துக்கு இது குறைவான நஷ்டஈடுதான். ஓர் ஆணிடத்தில் இரண்டு பெண்கள் அன்பு செலுத்தினால் அவர்களுக்குள் ஒருத்தி நஷ்டத்துக்குத் தயாராக வேண்டும். மங்களம் வாலிபத்தில் அந்த நஷ்டத்தை அடைந்தாள். நான் வயதான காலத்தில் அந் நஷ்டத்தை வலிய வரவழைத்து, இருள் மிக்க எதிர்காலத்தில் துணையின்றிப் பிரயாணத்தைத் தொடங்கி விட்டேன்.

உங்களைப் பற்றி எனக்குத் தெரியும். இந்தக் கடிதத்தைப் படித்தபிறகு இங்கே ஓடி வருவீர்கள் என்பது நான் அறியாத ஒன்றல்ல. அந்த ஒன்றுக்கு இனி அவசியம் இல்லை. ஏனென்றால் நான் இங்கே இருக்க மாட்டேன் — அடியாள் அம்மணி.

முடிந்த கடிதத்தின் காதில் ஒரு டிராப்ட் இணைக்கப் பட்டிருந்தது. நாற்பதாயிரம் ரூபாய்! "அம்மணி!" என்று நான் அலறிய போது நாற்பதாயிரம் இல்லை.

கடந்த அறுபதாவது வயதில் எல்லாவற்றையும் பெற்ற நேரத்தில் நான் இழந்தது அம்மணியை அல்ல; என் இதயத்தை.

முடிந்துவிட்ட பொற்காலமே, போய்வா!



# ஊமைச் சோதிடர்

து.ரா

தஞ்சை ரயில் நிலைய மதில் சுவரின் நிழலில் தன் மூட்டையுடன் அவன் அமர்ந்தான். கும்பகோணத்திலிருந்து டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்ய வசதி அளித்த ரயில் ஸ்தாபனம், சற்று நேரம் நிழலில் உட்கார்ந்து கொண்டு இளைப்பாறும் வசதியையும்தான் தரட்டுமே என்ற நினைப்போ என்னவோ!

ஸ்டேஷன் பிளாட்பாரத்திலிருந்த குழாயில் அவன் பல் தேய்த்து முகம் கழுவிக் கொண்டாயிற்று. இனி தன் தொழிலுக்கு வேண்டிய வேஷத்தை அணிந்து கொள்ள வேண்டும். சுவர் ஓரத்தில் நிழல் வெயிலாக மாறிக் கொண்டே வந்தபோது வெறும் அய்யாமுத்து ஊமைச் சோதிடர் அய்யாமுத்துவாக மாறினான். மேல் துண்டில் சுற்றியிருந்த ஒரு பையினுள் ஒரு தகர டப்பியும் அதற்குள் அவன் ஒப்பனைச் சாமான்களும் இருந்தன. தலையை வாரி, சூடிக் கொடுத்த நாச்சியார் போல ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போட்டுக் கொண்டான். நெற்றியிலே ஒழுங்காக மூன்று பட்டை விபூதியையும் பூசிக் கொண்டு நடுவில் சந்தனப் பொட்டும் குங்குமப் பொட்டும் வைத்துக் கொண்டான். தகர டப்பியிலிருந்து பிறைச்சந்திரன் உருவில் இரண்டு பித்தளை வளையங்களை எடுத்துப் பளபள என்று பொன் நிறம் வரும்படி அவற்றைத் தேய்த்துக் காதுகளில் மாட்டிக் கொண்டான். அவனுக்கு மீசை உண்டு; தாடி இல்லை. அதுவும் இருந்தால், தவம் செய்த அர்ஜுனனுக்கு அஸ்திரங்கள் கொடுக்க வேடனாக வந்த சிவபெருமான் வேஷமோ என்று நினைக்கத் தோன்றும். அவன் வேஷம் பூர்த்தியானதும், அய்யாமுத்து நடைபாதையில் மரத்தடியில் உட்கார்ந்து தன் பைக்குள் கை விட்டு ஓர் அட்டையை எடுத்தான். அதில் 'ஊமை ஜோசியம்' என்று எழுதியிருந்தது. தன் எதிரில் அந்த அட்டையை வைத்துக் கொண்டு சிவனே என்று உட்கார்ந்திருந்தான்.

அவன் பிறவியில் ஊமை அல்ல. பிறந்த பின்பும் அவன் ஊமையாகவில்லை. உலக நியதியில் தான் அவன் நாக்கு தன் பேச்சை மறந்தது. ஒன்று வாழ்ந்தால் ஒன்று தாழ வேண்டும். ஓருயிர் பிறந்தால் இன்னொரு உயிர் எங்காவது மாள்கிறது. நாலு பேர்கள் வாழ்ந்தால் நாலு பேர்கள் தாழ்கிறார்கள். வயிறு வாழத்தான் அய்யாமுத்துவின் வாய் தாழ்ந்தது. அனேகமாய்ப் பேச்சை ஒழித்து மௌன விரதம் மேற்கொண்டு விட்டான் அவன் பல ஆண்டுகளாகவே. இதில் எவ்வளவோ சௌகரியமும் இருந்தது. அவன் பிறவி ஊமையோடு செவிடும் கூட என்று பலர் தீர்மானித்து விடுவார்கள். அவன் காது படப் பல விஷயங்களைப் பேசுவார்கள். தாங்கள் ஒன்றும் கொடாமல் சுரண்டுவதிலேயே கருத்தாக உள்ள பிள்ளை வீட்டுச் சம்பந்திகளைப் போல் அவன் பல ரகசியமான விஷயங்களையும் ருத்திராக்ஷப் பூனையைப் போல் மௌனமாக உட்கார்ந்தபடி கேட்டுத் தனக்குள் சிரித்துக் கொள்வான்.

நேற்று கும்பகோணத்தில் நடந்ததை நினைத்தால் இப்போதும் அவன் மனசில் சிரிப்பலைகள் பரவின.

வெயிலுக்காக அவன் ஒரு வீட்டுத் திண்ணையில் அமர்ந்தான். வீட்டுக்காரனின் தாயாக இருக்க வேண்டும். வீட்டுக்குள் விருந்து குழந்தை ஒன்று 'வீல் வீல்' என்று கத்தும் சத்தம் வரவே, "ஏய்! ஏன் புள்ளே கத்துது?" என்று குரல் கொடுத்தாள். பதில் வராமற் போகவும் சற்றுப் பொறுத்து மறுபடி "ஏ! ஏன் புள்ளே கத்துதுன்னு?...." என்றாள் குரலை உயர்த்தி. உடனே யௌவன ஸ்திரீயின் குரலில் சுடச்சுடப் பதில் வந்தது. "ஏன் புள்ளே கத்துதுன்னு; புள்ளே கத்தாமெ நானு கத்துவேன்?..."

கிழவி வாயை மூடிக் கொண்டாள். ஊமை ஜோசியனும் வாயை நன்றாக மூடிக் கொண்டான், சிரிப்பு எங்கே வாயிலிருந்து வெடித்து விடுமோ என்று பயந்து. ஆனால் மனசிலே எண்ணினான்: 'ஒரு கை ஓசந்தா இன்னொரு கை தாழுது. இந்தக் கிழவி மருமகளா இருந்தபோது அவள் கைதாழ்ந்து இருந்திருக்கும். இப்போது இவ மாமியார் ஸ்தானத்துலே இருக்கா. கை ஓசந்திருக்கு. தன் அதிகாரம் கொடி கட்டிப் பறக்கணும்னு பார்க்கறா. அது இங்கே நடக்கல்லே!...'



"போஸ்! கொஞ்சம் கையைப் பாரய்யா!" என்ற குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது. வந்த ஆள் குந்தியபடி உட்கார்ந்து கொண்டு கையை நீட்டினான்.

'ஓரணாக் காசாவது இவனிடம் இருக்குமா?' என்று நோட்டம் விட்

டான் அய்யாமுத்து. நடைபாதை ஜோசியன் அரை வயிற்றுக்குப் பிழைக்கலாவது தெரிந்தவன். அவனிடம் கைநீட்டுகிறவனோ அதுகூடத் தெரியாதவன். எந்த வருங்காலத்திலோ தான் ஒரு படி உயரப் போவதாகச் சொல்ல மாட்டானா ஜோசியன் என்ற ஏக்கத்தில் அவன் வாழ்பவன்.

நீட்டிய கையை முறைத்துப் பார்த்தான் ஜோசியன். ஜோதிஷ சாஸ்திரம் இருக்கும் பக்கம் கூடத் தலை வைத்துப் படுத்தவன் அல்ல அவன். ஆனால் கையில் உள்ள முக்கிய ரேகைகள் அவனுக்குத் தெரியும். மௌண்ட் ஆப் ஜுபிடர், மௌண்ட் ஆப் வீனஸ் என்று இரண்டு பெயர்கள். எங்கேயோ பார்த்தவை. நினைவில் இருந்தன. ஆம்; ஒரு ஓட்டலில் ஒரு கை ரேகை நிபுணன் தங்கியிருந்தான். ஓட்டலுக்கு வெளியே அவனுடைய விளம்பர போர்டு திருத்தி வைக்கப்பட்டிருந்தது. அதில் வரைந்திருந்த உள்ளங் கையின் படத்திலிருந்து சில பெயர்களைப் படித்துத் தெரிந்து கொண்டான். அவை தான் நினைவில் இருந்தன.



ஜோசியன் ஜாடை காட்டுகிறான். அவற்றுக்குத் தானே விளக்கம் தந்து கொள்கிறான் கேட்க வந்தவன். அவன் தந்த விளக்கங்கள் இதோ:—

“படிப்பு பூஜ்யம்ங்கறே! பின்னே; நல்லாப் படிச்சிருந்தா ஏன் இப்படி இருக்கப் போறேன்? அதான் தெரிஞ்சே இருக்கே....”

“இருந்தாலும் சம்பாதிக்கிற சாமர்த்தியம் இருக்குன்றியா?... என்ன இருக்கோ போ! ராத்திரி சாப்பாட்டுக்கு என்ன வழின்னு தெரியல்லே!”

“முன் கோபின்றியா! மூக்குக்கு மேலே கோபமா? அது சரி. வேறே ஒண்ணுத்துக்கும் பொவுஷு இல்லாமப் போனாலும் கோபமாவது வராமயில்லே....”

“ஓட்டைக் கையா? சம்பாதிக்கிற தெல்லாம் விரயமாயிடுதா?.... அட, நீ ஒண்ணு! என்னத்தைப் பிரமாதமா சம்பாதிச்சுப் புட்டேன் விரயம் பண்ண! ஹூம்...”

மனிதனுடைய குணமே அலாதி. இரைந்து பேசவும் சக்தி யில்லாதவனைப் பார்த்து முன் கோபி என்றும், மூக்குக்கு மேல் கோபம் வரும் என்றும் சொன்னால் உச்சி குளிர்ந்து போகிறான். சம்பாதிக்கும் திறமையே இல்லாதவனைப் பார்த்துச் செலவாளி என்றும் போதும் அகமகிழ்ந்து போகிறது. கஞ்சி வரதப்பா என்றால் எங்கே வரதப்பா என்று சதா பார்த்துக்கொண்டிருப்பவனைத் தாராள குணம் படைத்தவன் என்றும், எப்போதும் நாலு பேருக்கு உபகாரம் பண்ணக் கூடியவன் என்றும் சொன்னால் போதும்; தற்பெருமையும் அசடும் முகத்தில் வழிந்தோடும்!

இல்லா விட்டால், ஓரணுக் காக இவனிடம் இருக்குமா என்று நோட்டம் விட்ட அய்யாமுத்துவுக்கு இரண்டணாவைக் கொடுத்து விட்டுப் போகுமா அந்தப் பாவி?

“இன்று நாம் முழித்த மூஞ்சி நல்ல மூஞ்சியா இருக்கணும். இல்லேன்னா, அந்த அப்பளாக் குடுமிக்காரன் போணி பண்ணினானே. அவன் நல்ல வேளையில் போணி பண்ணியிருக்கணும்....” என்று எண்ணமிட்டான் ஜோசியன்.

வாஸ்தவம் தான். சாப்பாட்டு நேரத்துக்குள் நாலைந்து பேர்கள் அவனிடம் கையைக் காண்பித்து விட்டார்கள்; எட்டணாக் காசுக்குமேல் அவனிடம் சேர்ந்துவிட்டது.

“இந்த ஊரிலே எவ்வளவு நாள் நடக்க முடியுமோ அவ்வளவு நாள் நாம் நடத்துவோம். ஜோசியக்காரனுக்கும் வயிறு ஒன்னு இருக்கு; அவனும் பொழைக்கணும்னு நெனைக்கிறவங்க இங்கே நிறையப் பேர் இருக்காங்கய்யா!....” என்று நிர்மானித்துக் கொண்டான் அவன்.

ஆனால் யாரோ சொன்னார்கள், அதுபோல் மனிதன் செய்த அதிர்ஷ்டம் தான் நாளை வரப் போவது என்ன என்பது அவனுக்குத் தெரியாமல் இருக்கிறது. (அய்யாமுத்துவைப் போன்ற ஜோசியனுக்குக் கூட) தெரிந்தால் வாழ்க்கை நரகமாகி விடுமல்லவா? இன்று சந்தோஷமாக இருப்பவன் கூட நாளை வரப் போவதை நினைத்து இன்றே ஏக்கத்தில் ஆழ்ந்து விடுவானே!...

கீ கீ கீ

அன்று பிறந்த சில்லறையை இடுப்பில் இறுக்கி முடிந்து கொண்டு, ஏக்கமோ கவலையோ ஏதும் இன்றி நடை பாதையில், மரத்தடியில், தன் மூட்டையைத் தலையணையாக வைத்துக் கொண்டு இரவு படுத்தான் மௌன ஜோசியன்.

விடிகிற நேரத்தில், ஜிலு ஜிலு என்று காற்று வீசுகையில் அய்யாமுத்து கண்ணயர்ந்து விட்டான். வெயில் சுரீரென்று அவன் உடம்பில் உரைத்த போது எழுந்து உட்கார்ந்தான்.

நேற்று உட்கார்ந்த இடத்திலேயே இன்றும் போய் உட்கார்ந்தான். அதே வேஷம்; அதே மௌன ஜோசியம் என்ற அட்டை; அதே ரோடு; அதே நடை பாதை; அதே மரத்தடி.

இன்னும் ஒருவரும் ஜோசியம் கேட்க வரவில்லை. அதற்குள் பத்தடி தூரத்தில் இருந்த பக்கத்து மரத்தடிக்கு வந்து உட்கார்ந்த ஆளின் பக்கம் அவன் கவனம் சென்றது.

கூலிக்காரப் பையன் ஒருவன் ஒரு பெரிய தோல் பெட்டியை எடுத்துக் கொண்டு முன்னால் வர அவன் பின்னால் வந்தான் இந்த ஆள். அய்யாமுத்து உட்கார்ந்திருந்த மரத்துக்குப் பக்கத்து மரத்தடிக்கு வந்ததும், "இங்கே இறக்கி வை" என்று அந்தப் பையனின் கூலியைக் கொடுத்து அனுப்பினான். பிறகு தோல் சூட்கேஸைத் திறந்து முதலில் ஒரு சிறிய சாய்வு நாற்காலியை எடுத்தான். அது குழந்தைகள் உட்காரும் நாற்காலி மாதிரி இருந்தது. கைப்பிடிகள் பித்தளையினால் ஆனவை. பளபளவென்று அவை அய்யாமுத்துகாதில் அணிந்திருந்த வளையங்களைவிடப் பிரகாசமாக மின்னின. நாற்காலியைப் பிரித்து, பெட்டியின் பக்கத்தில் போட்ட பின் பல படங்களை எடுத்துப் பெட்டியின் மேல் சாய்த்தாற் போல் வைத்தான். எல்லாம் கண்ணாடி போட்ட படங்கள். ஒன்றில் ஆஞ்சநேயர் தம் மார்பைக் கிழித்து அதனுள் ராமர் லக்ஷ்மணர், சீதை மூவரின் உருவங்களையும் காட்டுகிறார்; இன்னொரு படத்தில் மனிதத் தலைகளினால் ஆன மாலையை அணிந்து கொண்டு நடம் புரிகிறாள் பயங்கரக் காளி.

இன்னொரு படம் புலியின்மேல் இருக்கும் சாஸ்தாவின் படம். எல்லாவற்றுக்கும் நடுவில் ஒரு பெரிய உள்ளங்கையின் படம். அதில் எல்லா ரேகைகளும் அதன் பெயர்களும் போடப்பட்டிருக்கின்றன. இந்தப் படங்களின் எதிரில் ஒரு கட்டு ஊதுவத்தியை ஏற்றி வைத்து, ஒரு பூதக் கண்ணாடியுடன் அந்த ஆள் தன் சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

அவனையே கண் கொட்டாமல் பார்த்தான் அய்யாமுத்து. உயர்ந்த மெலிந்த சரீரம். தலையில், உச்சியில் வழுக்கை விழுந்து சுற்றிலும் அடர்த்தியான மயிர். மூக்கில் கறுப்புக் கண்ணாடி. ஒட்டிய கன்னங்களின் எதிரே நீட்டிக் கொண்டிருக்கும் முறுக்கிய மீசை; அதன் நுனிகள் சற்று மேல்நோக்கி வளைந்து கறுப்புக் கண்ணாடியின் விளிம்பைத் தொட்டுக் கொண்டிருந்தன. எங்கே கண்களைக் குத்தி விடுமோ என்பதற்காகவே நடுவில் குறுக்குச் சுவர் மாதிரி கண்ணாடியை அணிந்திருக்கிறானோ என்று நினைக்கும்படி இருந்தது. இடையில் ஜரிகை; மேலே பனியன் தெரியும்படியான மல் ஜிப்பா; வேண்டுமென்றே பொத்தான் போடப்படாமல் இருந்ததால் உள்ளே இருந்த மைனர் சங்கிலியும் புலி நகங்களும் ரோமம் அடர்ந்த மார்பில் தெரிந்தன. ஜிப்பாவின் கைகளை இலேசாக மடித்து விட்டுக் கொண்டு, வாயில் ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு நிதானமாகப் புகையை ஊதினான் அவன்.

'ஜனங்களை ஏமாற்றவா இத்தனை வேஷம்!' என்று மயங்கினான் ஊமை ஜோதிடன். இவன் சின்ன வகையில் ஏமாற்றுகிறவன். பெரிய வகையில் ஏமாற்றுகிறவனைப் பார்த்து இவனுக்கும் ஒரு மலைப்பு!

அதிர்ஷ்ட சக்கரத்தைப் பற்றித் தன்னிடம் கையை நீட்டியவர்கள் எத்தனை பேருக்கு

அவன் ஜோசியம் சொல்லி யிருக்கிறான்?.... தன் விஷயத்தில் அந்தச் சக்கரம் ஒரே நாளில் இப்படித் தலைகீழாகச் சுற்றப் போகிறது என்பதை அவன் எதிர்பார்த்தானா?...

''அட பாவிப் பயலுகளா! என்னடா எல்லாரும் அங்கேயே போறீங்க ஆட்டுமந்தை மாதிரி....'' என்று அவன் மனம் பொருமத் தொடங்கியது. அரை மணியில் நான்கு பேர் வந்து நீட்டினார்கள்; அவனிடம் அல்ல; சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறவ னிடம்! ஒவ்வொருவரிடமும் எட்டு அணா அவன் வாங்கி விட்டான்.

விளம்பர உலகம் இது என்று தெரிந்து தான் அய்யாமுத்துவும் வேஷம் போடுகிறான். ஆனால் உலகை ஏமாற்றப் பிச்சைக்கார வேஷத்தை விடப் பெரிய மனுஷன் வேஷம் தான் சிறந்தது என்கிற உண்மை அவனுக்கு இப்போது தான் தெரிந்தது. தானும் பெரிய மனுஷனாக வேண்டுமென்று துடித்தது அவன் மனம்.

நடை பாதை ஜோசியர் உலகில் பெரிய மனிதர்களில் ஒருவன் கிளி ஜோசியன். அவன் பட்சி சாஸ்திரக் கலைஞன். எதையும் சாஸ்திர மாகவும், எல்லோரையும் கலைஞர்களாகவும் உயர்த்துகிற நாட்டிலே பட்சி சாஸ்திரக் கலைஞனுக்கு மதிப்புக்கு என்ன குறைவு?

பெரிய மனிதனாக விரும்பிய அய்யாமுத்து இரண்டு கிளிகளை வாங்கினான். அவற்றின் வால்களைத் தறித்தான்; இறக்கைகளைத் தறித் தான். ராமாயணத்தில் ராமன் பிறப்பதற் காகத் தசரத மகாராசன் யாகம் செய்யத் தொடங்கினதிலிருந்து பட்டாபிஷேகம் வரையில் சித்திரங்களால் ஆன கார்டுகளில் ஒன்றைப் பொறுக்கி யெடுக்கப் பழக்கினான்; அவைகளைக் கூண்டில் அடைத்து, ஒரு தகர டப்பாவில் கொஞ்சம் நெல் வைத்துக் கொண்டு உட்கார்ந்தால் போதும். நெல் லுக்கு ஆசைப்பட்ட கிளி, கூண்டின் கதவைத் திறந்து கொண்டு வந்து கார்டுகளில் ஒன்றை மூக்கால் அழகாகக் கொத்தி எடுத்து அவனி டம் கொடுக்கும்; எல்லாம் ஒரு நெல்லுக்காக!

'மௌன ஜோசியம்' என்று எழுதின அட் டையைக் கிழித்து எறிந்து விட்டு, 'பட்சி சாஸ்திரம்' என்று எழுதி வைத்துக் கொண்டு விழுப்புரத்தின் ரயில் நிலையத்துக்குச் செல்லும் சாலையில் நடை பாதையில் இப்போது உட் கார்ந்திருக்கிறான் அய்யாமுத்து. முன்னைவிட இப்போது அவனுக்கு வருவாய் அதிகம். வருங்காலத்தைப் பற்றி மனிதனுக்கு மனி தன் சொன்னாலே கேட்க ஆசையாக இருக் கிறது. அதைக் கிளியும், பல்லியும், கோட் டானும் சொன்னால் கேட்க வேண்டுமா?

''சோஷியம் பார்க்கறது. சாஸ்திரம் பார்க் கறது....'' என்று ராகம் போட்டுக் கொண்டு மூக்கால் முனகியபடி அவனுக்குப் பத்தடி தூரத்தில் ஒரு பெண் வந்து உட்கார்ந்தாள் ஒரு தினம். அவள் பக்கத்தில் அந்த இளைஞ னும் வந்து உட்கார்ந்தான்.

அவள் வாய் நிறைய வெற்றிலை. ரத்தச் சிவப்பான அந்த வாய் தன் கிளியின் வாயைப் போல் இருந்ததாகத் தோன்றியது அய்யா முத்துவுக்கு. கையில் ஒரு கறுப்பான கோல், கை நீட்டுகிறவர்களின் கையைத் தொட்டுக் குறி சொல்ல. கழுத்தில் வெள்ளை ரவிக்கை யின் மேல் புரளும் செம்பவழ மாலை. நெற்றி யில் நாலுக்காக விபூதிப் பொட்டு; அதன் கீழ் ஒரு குங்குமப் பொட்டு.

''நாமும் போய்க் கையை நீட்டுவோமா?..''

இப்படி ஓர் ஆசை அவன் மனத்தில் குறு குறுத்தது. அடக்கிக் கொண்டு சும்மா இருந் தான். ஆனால் அவளே அவனைத் தேடிக் கொண்டு வந்தாள்.

"என்ன பேரு வச்சிருக்கே இந்தக் கிளிக்கு?" என்று கேட்டாள்.

''ஆண் கிளிக்குப் பேரு ஜீவி; பெண் ணுக்குப் பேரு சர்க்கரை....''

''அட, இரண்டு கிளி இருக்கா?...ஜீவின்னு சர்க்கரை, சர்க்கரைன்னுனும்....''

''ஜீவிதான்!....''

அவள் சிரித்தாள். அவனும் அந்தச் சுருதி யில் இழைந்து சிரித்தான்.

நாட்கள் நகர்ந்தன.

தினம் அடிக்கடி இப்படி ஏதாவது பேச்சு நடந்தது. ஒரு தினம் அய்யாமுத்துவிடம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவள் எழுந்து கடை வீதிக்குப் போனாள். உடனே அந்த இளைஞன் எழுந்து அய்யாமுத்துவிடம் வந்து உட்கார்ந்தான்.

''ஒரு பீடி இருந்தால் குடேன்; துண்டுப் பீடியானாலும் பரவாயில்லை....''

அய்யாமுத்து கொடுக்கவும், அதைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை வாயினால் உறிஞ்சினான். பீடிக்காக வரவில்லை அவன்; பேசத்தான் வந்தான். கிளி ஜோசியனுக்கும் இது தெரியும்.

'நான் வேலே செய்யலேன்னு குத்தரு சொல்லுனே தங்கம்; இவ இருக்கறச்சே நான் எப்படி அய்யா வேலே செய்யறது?''

''அதென்ன? நீ வேலே செஞ்சா அவ வாண்டாம்னு சொல்லுவாளா?''

''இல்லே; இவ கை பாத்துச் சொன்னுல் பல்லே இளிச்சுக்கிட்டு உக்காந்து கேப்பானுக தடிப் பசங்க. நான் சொன்னுல் எவன் கேப்பான்?....''

''அப்போ நீ இப்படியே சும்மா இருக்கிறதா எந்தக் காலத்துக்கும்?''

''இருப்பேனு? இவளேக் கட்டிக் குடுத்து ஒத்தனேடே அனுப்பிச்சுட்டேன்னு அப்புறம் நானே ஆரம்பிச்சுக்க மாட்டேன் தொழிலே?''

அய்யாமுத்து திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். ''இவளேக் கட்டிக் குடுக்கிறதா? உன் பெண்ஜாதி இல்லே அவ?''

''சே! சே! என் தங்கச்சி அய்யா! அதான் பெரிய கால் கட்டா இருக்கு. நல்லவனுப் பாத்து ஒருத்தன்கிட்டே ஒப்படைச்சுடணும் இல்லே?''

பெரியசாமிக்குத் தங்கம் தனக்குக் கிடைக்கமாட்டாள், அவள் மனம் அய்யாமுத்துவை நாடுகிறது என்பது தெரியவே, 'சீசீ; இந்தப் பழம் புளிக்கும்!' என்ற நிலையை அடைந்துவிட்டான். எனவே, தங்கத்தைத் தங்கச்சி என்று கூறி நாடகமாடிப் பரிசமாகத் தனக்கு ஒரு கிளியைக் கொடுக்கும்படியும், அதை வைத்துக் கொண்டு தான் தொழில் செய்து பிழைத்துக் கொள்வதாகவும் சொன்னுன்.

கிளிகள் இடம் மாறின. சாஸ்திரம் சொல்லும் நிறக் கிளி ஒன்று பெரியசாமியோடு போயிற்று. ஜோசியம் சொல்லும் தங்கக் கிளி ஒன்று அய்யாமுத்துவிடமும் வந்து சேர்ந்தது.

அது தேய்பிறைக் காலம். ஊர் அடங்கினுல் நடைபாதையில் போவோர் வருவோர் கிடையாது. மரத்தடிகளில் ரோட்டு விளக்குகளின் வெளிச்சம்கூட விழாத இடங்களில் ஒரே இருட்டுத்தான். எனவே அய்யாமுத்துத் தம்பதியின் காதலைக் கண்டு ரசிக்கப் பிறைச் சந்திரனும் வானத்தில் இல்லே. பக்கத்திலே கூண்டுக்குள் அடைபட்டுக் கிடந்த ஜீவி கண்களைத் திறந்து பார்த்ததா என்பதும் சந்தேகம்; கண்களை மூடியவாறு அது சதா உறங்கியபடி இருந்தது.

''இது ஏன் இப்படி உறங்குது? கிளி கூடத் தூங்காமல்?....'' என்ருன் அய்யாமுத்து.

தங்கமும் கிளியைப் பார்த்தாள். ''ஜீவி, ஜீவி!'' என்று கொஞ்சினுள். ஜீவி பித்துப் பிடித்தது போல் இருந்தது. ரப்பைகள் புரளும் போது கண்களில் ஒரே மஞ்சளடைப்பு;

''ஆணும் பொண்ணும் ஜோடியாக இருந்தது. அதைப் பிரிச்சுட்டே இல்லே? அதான் உறங்குது....'' என்ருள் தங்கம்.

ஜீவி கூண்டை விட்டு வெளியே வரவே இல்லே. எடுத்து வெளியே விட்டாலும் சித்திர ராமாயணக் காட்சிகள் பக்கம் போகவே இல்லே. ராமாயணத்தில் அதற்கு நாட்டம் இல்லேயோ, அல்லது சிறையைப் பறி கொடுத்த ராமன் நிலைக்கு நாமும் வந்து விட்டோமே என்ற துக்கமோ தெரியவில்லே; இரை எடுக்காமல் பட்டினி கிடந்து அது செத்துப் போயிற்று.

கால்களை விறைப்பாக நீட்டிக் கொண்டு கூண்டுக்குள் செத்துக் கிடந்த அதன் உடலேப் பார்த்துக் கொண்டே இருந்த அய்யாமுத்துவுக்குத் தானே அதைக் கொன்று விட்டது போன்ற எண்ணம் தோன்றிற்று. துக்கத்தில் அவன் நெஞ்சு கனத்தது.

''உன் அண்ணனுக்குக் குடுத்தேனே சர்க்கரை அதுவும் இப்படித்தானே செத்துப் போயிருக்கும்? இவை விட்டுப் பிரிஞ்சதுனலே?....'' என்று கேட்ட அவன் கண்களிலிருந்து கண்ணீர் சொட்டிற்று.

''என் அண்ணனு? அது யாரு?'' என்று கேட்டாள் தங்கம்.

''அவன்தான் பெரியசாமி....''

தங்கம் தனக்குள்ளே இலேசாகச் சிரித்துக் கொண்டாள்.

அய்யாமுத்து வாயடைத்து நின்ருன்.

''இந்தக் கிளியை நம்பி நீ இருந்தே. உன்னே நம்பி நான் வந்தேனே...'' என்று மோவாயில் கை வைத்தபடி அங்கலாய்த்து நின்ற தங்கத்தின் சொற்கள் அவன் உள்ளத்தில் என்ன உணர்ச்சிகளேக் கிளறினவோ?....

'தன் ஜோடியைப் பிரிஞ்ச கிளி செத்துப் போச்சு. அதை விடக் கேவலமா இந்த மனுச ஜாதி!' என்று எண்ணமிட்ட அவன் மனசுக்கு அந்தச் சிரிப்பு நெருப்பாக இருந்திருக்கும்.

மைசூர் ராஜ்யத்தில் சிமெண்ட் உபயோகிக்கும் அனைவருக்கும் மகிழ்ச்சியளிக்கும் செய்தி

# மைசூர் சிமெண்ட்ஸ் லிமிடெட்

ரிஜிஸ்டர்டு ஆபீஸ் : 19, ரேஸ் கோர்ஸ் ரோடு, பெங்களூர் -1

டைரக்டர்கள் :

ஏ. எம். எம். முருகப்ப செட்டியார் (தலைவர்)
எட்கர் எப். கெய்ஸர்
ஜிஜுபாய் தேவிதாஸ்
ஐ. பி. மல்லப்பா
ஏ. வி. ஷிவ் கௌடா
ஃபிராங்க் டேவிஸ்
பி. கே. சாரங்கபாணி முதலியார்

தொழிற்சாலை :

அம்மஸந்த்ரா, தும்கூர் மாவட்டம் (மைசூர் ராஜ்யம்)

காரியதரிசிகள் & பொக்கிஷதாரர்கள்

ஸ்டர்லிங் எண்டர்பிரைஸஸ் பிரைவேட் லிமிடெட், பெங்களூர் -1

நவம்பர் 11-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை

பாரத சர்க்கார் கனரகத் தொழில் அமைச்சர் திரு C. சுப்பிரமணியம்
அம்மஸந்த்ராவில் தொழிற்சாலையை இயக்கி வைக்கிறார்
என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறார்கள்

★

அதே சமயம் இத்தொழிற்சாலையின் இரண்டாவது கட்ட விஸ்தரிப்புக்கு
தொழில் அமைச்சர் திரு கே. வி. ரெட்டி அஸ்திவாரக்கல் நாட்டுகிறார்

இந்த ஆரம்ப விழாவுக்கு மைசூர் ராஜ்ய முதலமைச்சர்
திரு எஸ். நிஜலிங்கப்பா தலைமை வகிக்கிறார்

இக்கம்பெனியின் அமெரிக்கக் கூட்டாளிகளான கேய்ஸர் இன்ஜினியரிங் ஓவர்ஸீஸ் கார்ப்பரேஷன் தலைவர் திரு எட்கர் எப். கெய்ஸரும், அவரது மனைவியாரும் அவ்வமயம் தொழிற்சாலைக்கு விஜயம் செய்கிறார்கள் மற்றும் பல பிரமுகர்கள், தொழிலதிபர்கள், வர்த்தகர்களும் கலந்துகொள்கிறார்கள்

★

ஆண்டு ஒன்றுக்கு ஒரு லட்சம் டன் சிமெண்ட் இத்தொழிற்சாலையில் உற்பத்தியாகும். இரண்டாவது கட்டம் விஸ்தரிப்பு முடிந்ததும் (1963 முடிவில்) இது ஆண்டு ஒன்றுக்கு இரண்டு லட்சம் டன்னாக உயரும்



# பூப்போல ஒரு பெண்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

மனிதனுடைய வாழ்க்கையில் இரண்டு வகையான ஞாபகங்கள் உண்டு. நினைக்கவே விரும்பாத ஞாபகங்கள் சில. நினைத்துப் பார்க்காமல் வாழ முடியாத ஞாபகங்கள் சில, மறந்து போகாமல் வாழ முடியாத ஞாபகங்கள் சில. நாம் வாழ்கிறோமே, ஏதோ ஒரு வாழ்க்கை — அதை ஞாபகங்களின் கூட்டு என்றோ, அனுபவங்களின் சேர்க்கை என்றோ சொன்னால் எவ்வளவு பொருத்தமாக இருக்கும்?

சில அபூர்வமான நிகழ்ச்சிகளைச் சந்தித்து விடும்போது வாழ்க்கையே கதையைப்போல் ஆகிவிடுகிறது. 'அவளுடைய பார்வையில் பேச்சு உண்டு; அப்படியே பேச்சிலும் பார்வை உண்டு' என்று சகுந்தலையைப் பற்றிச் சொன்னேன். இப்போது இத்தனை ஆண்டுகளுக்குப் பின் அவளை அப்படி வர்ணிக்கும் உரிமைகூட எனக்கு உண்டோ இல்லையோ? தனக்குச் சொந்தமில்லாததை நினைப்பதுகூடத் திருட்டு என்று இந்த நாட்டின் பழமையான அறநூல்கள் எல்லாம் கூறுவது உங்களுக்குத் தெரியும்! எனக்கும் ஏறக்குறையத் தெரியும்.

கீழ்வேளூர் இராமநாதனின் பின்னே என்ற உரிமை, மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி என்பதைவிட அதிகம் தகுதி வாய்ந்ததான பின் நான் கோடைக்கானலில் தங்கியிருந்த நாட்களுக்குச் சுறுசுறுப்பும் மதிப்பும் அதிகமாக இருந்தன. சகுந்தலையும், நானும், டாக்டர் சந்திரசேகரனின் பழைய காலத்துக் காரில் ஏறிக் கொண்டு அந்த மலை நகரத்தைச் சுற்றிப் பார்த்தோம். எவ்வளவோ வம்புப் பேச்சுக்கள், எத்தனையோ விவாதங்கள், சிரிப்புக்கள், கேலிகள் — என்று நாங்கள் இருவரும் பேசிப் பழகிய விதம் அந்தச் சில நாட்களில் மிகவும் நெருக்கமாகியிருந்தது.

"இன்னும் சில வாரங்களில் எனக்குக் கோடை விடுமுறை முடிந்துவிடும். கல்லூரி திறந்து விடுவார்கள். நானும் சென்னைக்குப் போய் விடுவேன். முடிந்தால் சென்னையில் நாம் சந்திக்கலாம்" என்று நான் கோடைக் கானலிலிருந்து புறப்படும்போது சகுந்தலை என்னிடம் கூறினாள். மருத்துவக் கல்லூரி விடுதியில் அவளுடைய அறை எண்ணைக் கூறினாள். நானும் என்னுடைய முகவரியைத் தந்தேன். விலாசம் தருகிறவர்களுக்குப் பிரதியாக நமது விலாசமும் தருவதுதானே இப்போதெல்லாம் நாகரிகம்?

"வருடத்துக்கு ஒன்பது மாதம் என்னை ஊர் சுற்றுவதற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறான் இந்தக் கம்பெனிக்காரன். நான் சென்னையில் தங்குவதே அபூர்வம். ஆனாலும் நாம் அடிக்கடி சந்தித்துக் கொள்ள வாய்ப்புக்கள் உண்டு. ஒரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி என்ற முறையில் நீங்கள் டாக்டருக்குப் படித்து முடிக்கிற வரை உங்கள் அப்பாவைத் தேடி வந்து கொண்டிருப்பேன் நான். நீங்கள் டாக்டரான பின்போ, உங்களையும் சேர்த்துத் தேடி வருவேன். டாக்டர்களுடைய விலாசம் மருந்துக் கம்பெனிக்கு எப்படியாவது கிடைத்துக் கொண்டே இருக்கும். கவலைப்படாதீர்கள்..." என்றேன்.

நான் கூறியதைக் கேட்டுச் சகுந்தலை கண் கலங்கினாள். மனம் கலங்குவதற்குக் கண் கலங்குவதும் ஓர் அடையாளமோ?

"எப்போது தேடி வந்தாலும் மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி என்ற முறையில் தான் என்னைத் தேடிவர விரும்புகிறீர்களா? பாவம்! நீங்கள் வாய் தவறிப் பேசினாலும் உங்கள் பேச்சில் வியாபாரந்தான் ஒலிக்கிறது..."

என்று இதயம் நெகிழ்ந்து அவள் பேசிய போது அவள் மனம் எனக்குப் புரிந்தது. பூப்போல மென்மையான மனமுடையவளாக அவள் எனக்குத் தோன்றினாள். அதனால்தான் சிறிது வித்தியாசமாகப் பேசினாலும் அவள் வாடிவிடுகிறாள் என்று நினைத்தேன் நான். உடம்பும் கைகால்களும் பூப் போலிருக்கிற பெண்கள் இந்த உலகத்தில் ஆயிரம் ஆயிரமாக இருக்கலாம். ஆனால் மனம் பூப்போல் இருக்கிறவர்கள் காவிய காலத்து இலட்சணங்களோடு இயந்திர நாகரிகத்தின் இடையே கசிக் கசித் தவிப்பார்கள். சகுந்தலை அப்படிப்பட்டவள்தான் என்றும் நான் நினைந்து நினைந்து பெருமைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்..அப்படிப்

பொன்முடி

பட்டவன் இல்லை என்றும் சந்தேகப் பட்டிருக்கிறேன். அப்படிச் சந்தேகப் பட்டது தவறு என்றும் எனக்கு நானே அழுதிருக்கிறேன். அவளைப் பொறுத்தவரை விதம் விதமான அனுபவங்கள் எனக்கு உண்டு. ஊர் சுற்றும் வாழ்க்கையில் எத்தனையோ பேர்களைச் சந்திக்கிறோம். எத்தனையோ பேருடன் பேசுகிறோம், எத்தனையோ பேருடன் பழகுகிறோம், யாராவது தான் நம்முடைய நினைவை நெடுங் காலத்துக்கு வசமாக்கிக் கொண்டு ஆள்கிறார்கள்.

''ராமநாதனை ரொம்பவும் கேட்டதாகச் சொல்லு! இன்னொரு விஷயம். அதை உன்னிடம் சொல்லிப் பிரயோசனம் இல்லை. அது விஷயமாகத்தானே உங்கள் அப்பாவுக்கு எழுதுகிறேன். கீழ் வேளூர் விலாசம் எனக்குத் தெரியும். சகுந்தலை அடுத்த வருடக் கடைசியில் டாக்டராகி எம். பி. பி. எஸ். போர்டு மாட்டி விடுவாள். அப்புறம் நீ என்னையும், என் பெண்ணையும் சேர்த்துத் தேடி வர வேண்டியிருக்கும்'' என்று கோடைக்கானல் மூஞ்சிக்கல் பஸ் நிலையத்துக்கு என்னை வழியனுப்ப வந்திருந்தபோது சகுந்தலையின் தந்தை டாக்டர் சந்திரசேகரன் தொணதொணத்தார். சகுந்தலையும் அவரோடு என்னை வழியனுப்ப வந்திருந்தாலும் அவள் அதிகம் பேசவில்லை. டாக்டர் சந்திர சேகரனுடைய வார்த்தைகளைவிட, அவர் மகளான அவளுடைய மௌனமே அதிகமாகப் பேசியது என்றுமட்டும் என்னால் தெரிந்து கொள்ள முடிந்தது. அதுதான் சொன்னேனே; அவளுடைய பார்வையிலும் பேச்சு உண்டு! அமைதியிலும் அழகு உண்டு. பேசாமலே அழகாக விருந்து மலர்ந்து அந்த மலர்ச்சியையே பேச்சாகக் கொண்டிருக்கும் பெருமையைப் 'பூப் போல' என்று கூறுவது எத்துணைப் பொருத்தமான உவமை? இப்படி ஒப்பிடுவதற்கு அந்த உவமை பாக்கியம் செய்திருக்க வேண்டுமோ என்னவோ? கோடைக்கானலின் நுழைவாயிலான மூஞ்சிக்கல் பஸ் நிலையத்திலிருந்து பஸ் நகர்ந்தபோது ரோஜாப்பூப்போல் மேலெழுந்து அசைந்து விடை கொடுத்த அந்தப் பட்டுக் கை என் ஞாபகத்தில் நெடுங்காலம் அப்படி ஆடிக்கொண்டே இருந்தது. இப்போதும் மறந்து போய்விட்டதென்று சொல்ல முன்வரவில்லை. ஒரு நிலைமைக்குப் பிறகு ஆழமான ஞாபகமே மறதியாகி விடுகிறது. நன்றாகப் பதிந்து போன ஞாபகமும் மறதியும் ஒன்றுதான். இப்படிச் சொல்வதை எவரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். எல்லாரும் ஒப்புக் கொள்கிறதையே பேசவும், எல்லாரும் ஒப்புக் கொள்வதையே செய்யவும், ஆசைப்பட்டுப் பத்தோடு பதினொன்றாகப் போய்க் கொண்டிருக்கிற மனிதன் ஒரு சமுதாயக் கோழை. சமீப காலம் வரை நானும் ஒரு விதத்தில் சமுதாயக் கோழை தான்! இப்போ தென்னவோ அப்படிக் கோழையாயிருப்பதற்கு விரும்பவில்லை நான். அதனால் என் மனத்தில் பட்டதை அப்படியே சொல்லி விட்டேன். மனத்தில்

பட்டதை அப்படியே, சொல்வதுகூட ஒரு விதத்தில் சமுதாயத் துணிவுதான்.

சுற்றுப் பிரயாணம் முடிந்து ஊர் திரும்பியதும், பிரயாணத்தின்போது சந்தித்து விட்டு வந்த டாக்டர்களுக்கும், மருந்துக் கடைக்காரர்களுக்கும் கடிதம் எழுதுவது கம்பெனி நடைமுறைகளில் ஒன்று. ஒரு காரியம் வழக்கமாகவும், நடைமுறையாகவும், மாறி விட்ட பின் அதில் சுவாரஸ்யம் குறைந்து போவது இயல்புதான். சுவாரஸ்யம் குறைவான அந்தக் காரியத்திலும் சுவாரஸ்யத்தோடேயே ஒரு கடிதத்தை மட்டும் என்னால் எழுத முடிந்தது. அதுதான் டாக்டர் சந்திரசேகரன் அவர்களுக்கு நான் எழுதிய கடிதம். சகுந்தலையைப் பற்றியும் கடிதத்தில் விசாரித்திருந்தேன். அக் கடிதம் சுவாரஸ்யமாக அமைந்ததற்கே அதுதான் காரணமென்றும் வைத்துக் கொள்ளலாம். கலகலப்பைத் தருவதற்கும், பறித்துக் கொள்வதற்கும் சகுந்தலையின் அழகு காரணமென்று முன்பே கூறியுள்ளேன். இதற்கிடையே டில்லியிலிருந்து என் தந்தை எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்.

''ஏன்டா, நீ கொடைக்கானலுக்குப் போயிருந்தாயாமே? டாக்டர் சந்திரசேகரனைப் பார்த்தாயாம். அவராக விசாரித்துத் தெரிந்துகொண்டுதான் உன்னை இன்னாரென்று கண்டுபிடித்தாராம். நீ இதெல்லாம் பற்றி எனக்கு ஒரு வரி கூட எழுதவில்லையே? வரவர நீ பெரிய சோம்பேறியாகத் தான் போய்க் கொண்டிருக்கிறாய்'' — என்று என் தந்தை எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். நான் என்னவோ அப்போதுதான் கலகலப்பை அடைந்து கொண்டு வருவதாக எண்ணிக் கொண்டிருந்தேன். என் தந்தையோ நான் சோம்பேறியாகிக் கொண்டு வருவதாகக் குற்றம் சுமத்தியிருந்தார். போனால் போகிறார். சில விஷயங்களில் வயதானவர்களை நாமாகப் பார்த்து மன்னித்துவிட வேண்டியதுதான். இதிலிருந்து நான் கொடைக்கானல் சென்று திரும்பியதுமே டாக்டர் சந்திரசேகரன் டில்லிக்கு என் தந்தை பெயரிட்டுக் கடிதம் எழுதியிருக்கிறாரென்று எனக்குப் புரிந்தது. அதற்கும் அடுத்த கடிதத்தில் என் தந்தை ஒரு விஷயத்தை ரொம்ப நாசூக்காக என்னிடம் விசாரித்திருந்தார். அதைப் படித்து நான் எனக்குள் சிரித்துக் கொண்டேன்.

''நேற்று டாக்டர் சந்திரசேகரன் மறுபடி கடிதம் எழுதியிருந்தார். நீ கொடைக்கானல் போயிருந்த போது அவருடைய பெண் சகுந்தலையைப் பார்த்தாயாமே? அந்தப் பெண்ணைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? உன் அபிப்பிராயத்தை மனம் விட்டு எனக்கு எழுது. மேலே ஆக வேண்டியதைக் கவனிக்க வேண்டும்'' என்று எழுதியிருந்தார். எனக்கு ஒரே கும்மாளம்.

''ஐயோ, அப்பாவே; அப்பா! உங்களைப் போல் ஒரு கர்நாடகம் உண்டா? சகுந்தலையைப்பற்றிய அபிப்பிராயத்தை மனம் விட்டு எழுதச் சொல்லிக் கேட்டிருக்கிறீர்கள். மனத்தையே யாரிடம் விட்டு விட்டு வந்திருக்கிறேனோ அவளைப் பற்றி மனத்தை விட்டு எழுதச் சொல்கிறீர்களே? என்ன பைத்தியக்காரத்தனமான கேள்வி இது! அபிப்பிராயம் சொல்லித் தீர்மானம் செய்ய வேண்டிய பெண்ணா அவள்? உயர்ந்த வஸ்துக்களுக்கு நாம் செய்கிற பெரிய மரியாதை நம்முடைய சொற்களால் நாம் அவற்றைப் பற்றி அபிப்பிராயம் தெரிவிக்காமல் இருப்பதுதான். நாம் அவற்றைப் பற்றி அபிப்பிராயம் தெரிவிக்காமல் இருப்பதே அவற்றுக்கு நாம் செய்கிற மரியாதை அல்லவா? என் தந்தைக்கு இதெல்லாம் எங்கே புரியப் போகிறது? ஆகவே அப்பாவுக்கு அடங்கின பிள்ளை ஒன்று — பிள்ளையைச் சாதுவாக நினைத்துக் கொண்டிருக்கும் அப்பாவுக்கு என்ன பதில் எழுத முடியுமோ, அதையே நானும் எழுதி அனுப்பினேன்.

''மதிப்புக்குரிய அப்பா அவர்களுக்கு அநேக கோடி வணக்கங்கள். 'இந்த விஷயமாக' எனக்கு என்று தனி அபிப்பிராயம் ஒன்றும் இல்லை. பெரியவர்களாக நீங்கள் எல்லாம் இருக்கும்போது நான் பார்த்து என்ன செய்வதற்கு இருக்கிறது? நீங்கள் பார்த்து முடிவு செய்தால் சரிதான். எனக்கு நல்லதைத்தானே நீங்கள் செய்வீர்கள்?'' என்று பதில் எழுதிப் போட்டு விட்டு நிம்மதியாகத் 'தன்வந்திரி மெடிகல் ப்ராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்'டின் மருந்துகளை அதிகம் விற்பனையாகும்படி செய்வதற்கான முயற்சிகளில் நான் ஈடுபட்டேன். நடுநடுவே மருத்துவக் கல்லூரி விடுதி வாசலிலும் சென்ட்ரல் ஸ்டேஷன் ஓரமாகவும் போகிற போது, வருகிறபோது, தற்செயலாய் இரண்டொரு முறை சகமாணவிகள் கூட்டத்துக்கு நடுவே சகுந்தலையைச் சந்திக்க முடிந்தது. அந்தக் கூட்டத்திலும் என்னைப் பார்த்தவுடன் அவள் தனியாகப் பிரிந்து வந்து [illegible] பேசி விட்டுப் போன அழகை நினைத்து நினைத்து மகிழ்ந்தேன். அவள் பூவைப் போல் ஒரு பெண் அல்லவா?

என் தந்தை எனக்குக் கடிதம் எழுதிக் கேட்டிருந்த ஏற்பாடு மட்டும் கிணற்றில் கல்லைப் போட்டமாதிரி இருந்தது. என்ன காரணமென்று தெரியவில்லை. அது விஷயமாக என் அப்பாவும் பேசவில்லை. நான் விசாரித்துத் தெரிந்து கொள்ள முயன்ற போதும் தோல்வியே அடைந்தேன்.

''டாக்டர் சந்திரசேகரன் சுத்த அற்பத் தனம் நிறைந்தவனாயிருக்கிறான். கல்யாணம் என்றால் ஏதோ, கம்பெனிகளிலிருந்து வருகிற மாதிரி மருந்துகளை வைத்தே ஆஸ்பத்திரி நடத்துவதைப் போல எண்ணம் போலிருக்கு. எனக்கும் ஒரு ஸ்டேட்டஸ் இருக்கு. இந்த தில்லியிலேயே பெரிய பிரமுகர்கள் நாலைந்து பேரில் நானும் ஒருத்தன். ஏனோ, தானோ, என்று கல்யாணத்தை நடத்திக் கொள்கிறதற்கு எவனாவது பஞ்சப் பயலைப் பார்த்துக் கொண்டு போகட்டும்'' என்று என் தந்தை மற்றொரு நண்பரிடம் குறிப்பிட்டுப் பேசிக் கொண்ட சமயத்தில் தான் என்ன நடந்திருக்க முடியும் என்பதை நான் அனுமானித்துக் கொள்ள முடிந்தது. உலகத்தில் சாதாரணமாக நடக்கிற சாதாரணத் தகராறுதான்.

அடுத்த முறை நான் மருந்துக் கம்பெனிப் பிரதிநிதி என்ற முறையில் டாக்டர் சந்திரசேகரனைச் சந்திக்கக் கொடைக்கானல் போயிருந்தபோது அவரும் என்னை அவ்

ஜம்மியின்

# லிவர்க்யூர்



குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி கோளாறுகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும் சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர்கள் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார்கள். அப்பொழுது அவர்களைக் கலந்து ஆலோசிக்கலாம்.

| இடம் | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| திருவனந்தபுரம் | 13 | 9 to 12 பகல்<br>3 to 5 மாலை | எம். வி. கணபதி அய்யர் & சன்ஸ்<br>ஆட்டுகுளங்கரை |
| அய்யம்பேட்டை | 16 | 3 to 5 மாலை | டாக்டர் என்.கே. அப்துல் முத்தாலிப்<br>(என்.கே.ஏ. ஹாஸ்பிடல் |
| தஞ்சாவூர் | 17 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ராஜா சத்திரம் |
| பட்டுக்கோட்டை | 18 | 9 to 11 காலை | சத்திரம் ஆபீஸ் |
| திருத்துறைப்பூண்டி | 18 | 3 to 5 மாலை | டி.வி. சந்திரசேகரம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| மன்னார்குடி | 19 | 9 to 11 காலை | மீனு கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 19 | 3 to 5 மாலை | அபுபக்கர் பில்டிங்ஸ் |
| நாகப்பட்டினம் | 20 | 9 to 11 காலை | எஸ். டி. சௌந்தரராஜ பிள்ளை & சன்<br>கெமிஸ்ட்ஸ் |
| நன்னிலம் | 20 | 3 to 5 மாலை | தி. எஸ். ராஜன் & ஆர். ஆர். சுவாமி<br>ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மாயூரம் டவுன் | 21 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ராமகிருஷ்ண வைத்திய சாலை<br>1, கிருஷ்ணராயர் சந்து |
| சீர்காழி | 22 | 9 to 11 காலை | எஸ். நடராஜன், வாய்க்கால்கரைத் தெரு |
| விருத்தாசலம் | 22 | 3 to 5 மாலை | ஸ்ரீ நடராஜா மெடிகல் ஹால் |
| சிதம்பரம் | 23 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி, கெமிஸ்ட்ஸ் |
| கடலூர் என். டி. | 24 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | கமலா & கம்பெனி, கெமிஸ்ட்ஸ்<br>புதுப்பாளையம் |
| பாண்டிச்சேரி | 25 | 9 to 11 காலை | ஆனந்தா எம்போரியம், டுப்ளே தெரு |
| திண்டிவனம் | 25 | 3 to 5 மாலை | விஜயா மெடிகல் ஸ்டோர்ஸ் |
| விழுப்புரம் | 26 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | நியூ வாசவி விஹார் ஹோட்டல்<br>பாண்டி ரோடு |
| காஞ்சிபுரம் | 28 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | 86, சாலைத் தெரு, பெரிய காஞ்சிபுரம் |
| வேலூர் | 29 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | வி. பி. சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ்<br>லாங் பஜார் |
| சித்தூர் | 30 | 9 to 11 காலை | ஓரியண்டல் லாட்ஜ். ஹைரோடு |
| திருப்பதி | 30 | 3 to 5 மாலை | டாக்டர் ஆர். கோபிநாத்., 28 கங்குந்த்ர<br>மண்டபம் தெரு |
| கரக்பூர் | 4 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், என்.டி.இ.<br>155, ரயில்வே மார்க்கெட் |
| ஜம்ஷெட்பூர் | 15 | 9 to 11 மாலை<br>3 to 5 மாலை | சிட்டி கெமிஸ்ட்ஸ், சாக்சி |

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - கும்பகோணம் - திருச்சிராப்பள்ளி

குறிப்பு: எல்லா நாட்களிலும் வழக்கம்போல் எமது கிளினிக்கில் ஆலோசனைகள் கூறப்படும்

வளவு சுமுகமாக வரவேற்கவில்லை; வியாபாரப் பேச்சு அளவாக நடைபெற்றது. அதிக உறவும் நெகிழ்ச்சியும் இல்லை. நான் கீழ்வேளூர் இராமநாதனின் பிள்ளை என்பதை முற்றிலும் மறந்து விட்டுப் பழகுவது போல் பழகினார் அவர். சகுந்தலையும் பரீட்சை எழுதுவதற்காகச் சென்னையிலேயே தங்கி யிருந்தாள். பிரமை பிடித்தாற் போலக் கோடைக்கானலிலிருந்து திரும்பினேன் நான். டாக்டர் சந்திரசேகரனுடைய வீடு ஒன்று மட்டுமின்றிக் கோடைக்கானல் நகரமே முற்றிலும் பற்றமாகப் போய் விட்டது போல அப்போது தோன்றியது எனக்கு. சுறுசுறுப்பைத் தருவதற்கும், பறித்துக் கொள்வதற்கும் ஓர் அழகு காரணமாக இருக்க வேண்டுமானால் அந்த அழகு அற்புதமாகத்தான் இருக்க வேண்டும். என் தந்தையும், சகுந்தலையின் தந்தையும் இன்று விரோதிகளாகி யிருக்கலாம். ஒரு காலத்தில் அவர்கள் நண்பர்களாகவும் இருந்திருக்கலாம். இவர்களுடைய நட்புக்காலத்தில் நாங்கள் இணைந்து இழைந்து பேச வேண்டுமென்று எதிர்பார்ப்பதும், இவர்கள், ஒருவருக்கொருவர் ஆகாதவர்களாகப் போய் விட்ட காலத்தில் நாங்களும் ஆகாதவர்களாகப் போய் விட வேண்டுமென்று எதிர்பார்ப்பதும் எப்படிச் சரியாயிருக்க முடியும்? ஆண் பெண்களின் காதலைப் பற்றி இந்த உலகம் முடிவு செய்பவை எல்லாம் எப்போதும் ஒரு தலைப்பட்சமான முடிவுகளாகவே இருக்கின்றன. காவியங்கள் புனைந்து புனைந்து புகழுகிற காதல் எதுவோ, அது அப்படியே கபடமான தன்மையோடு இந்த மண்ணுலகத்து வாழ்க்கையில் இல்லை. இந்த மண்ணுலகத்து வாழ்க்கையில் அது எப்படி இருக்கிறதோ, அப்படி நிறைந்த இடையூறுகளுக்கு நடுவே வைத்துக் காவியங்கள் அதைக் கூறவில்லை. போகட்டும். இவற்றை யெல்லாம் விவரித்துக் கொண்டிருக்க நான் யார்? நான் ஏதோ ஒரு பாமரன். உலக வாழ்க்கையில் அதிகமாக ஏமாறிய பாமரன்.

என்னுடைய ஏமாற்றத்தை மறைக்க அல்லது மறக்க நாலைந்து ஆண்டுக் காலம் என் உத்தியோகத்தைக் கன்னடமும் ஆந்திர நாட்டு ஜில்லாக்களில் சுற்றும் வேலையாக மாற்றிக் கொண்டு விட்டேன் நான். சுற்றுவதுதான் வாழ்க்கை. உடம்பு சுற்றினாலும் சரி, மனம் சுற்றினாலும் சரி எப்படியோ ஒரு விதத்தில் அலைந்து கொண்டே யிருக்க வேண்டும். என் தந்தை காலமானபோது மட்டும் சேர்ந்தாற்போல் சில் ஒரு மாதம் கீழ்வேளூருக்குப் போய்த் தங்கியிருந்தேன். எந்தவிதமான சுவாரசியமும், சுறுசுறுப்புமின்றியும் தங்கியிருந்தேன். அப்பா காரியங்கள் எல்லாம் முடிந்து நான் மறுபடியும், 'தன்வந்திரி மெடிகல் பிராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்'டின் காரியங்களைக் கவனிப்பதற்குப் புறப்பட்டபோது, "ஊர் ஊராய் அலைகிற இந்த உத்தியோகத்தை விட்டுத் தொலைத்துவிட்டுக் கல்யாணம் கார்த்திகை என்று செய்ய வேண்டியதைச் செய்து கொண்டு அம்மாவுக்கு அடங்கின பிள்ளையாய் இலட்சணமாக இரு" என்றாள் என் தாயார். நான் அம்மாவின் வார்த்தையைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. பிடிவாதமாகப் புறப்பட்டு விட்டேன். நிம்மதியில்லாத மனிதன் ஓர் இடத்தில் தங்கவே கூடாது. சுற்றிக் கொண்டே இருக்க வேண்டும். மனம் ஒரு திசையிலும், உடம்பு ஒரு திசையிலுமாகச் சுற்ற நேருவதைப் போலத் துர்ப்பாக்கியம் வேறு இருக்க முடியாதுதான். 'ஆனாலும் ஒரு நிலைமைக்கு மேல் போய் விட்டால், துர்ப்பாக்கியங்களாக வரவேற்று அவற்றைச் சேர்த்துக் கொண்டே போவதுதான் கதி என்று ஆகிவிடுகிறது. அந்த நிலையில் துர்ப்பாக்கியங்களும்கூட நம்மை மிரட்டிக் கொண்டோ, அதிர்ச்சியுறச் செய்து கொண்டோ அருகில் அணுக முடிவதில்லை; பத்தோடு பதினொன்றாவது என்று சாதாரணமாக அவற்றை எதிர்கொள்கிறோம். கழுத்து வரையில் ஆழ்ந்து அமுக்கும் துரதிர்ஷ்டங்களுக்கு மேலே தலையை நீட்டி, 'இன்னும் ஏதேனும் உண்டா?' என்று இந்த உலகத்தைப் பார்த்துக் காறித் துப்பிவிட்டுச் சிரிக்கும் அநுபவத்தை நீங்கள் எப்போதாவது அடைந்திருக்கிறீர்களா? அடையவில்லையானால் உங்கள் வாழ்க்கை அச்சடித்த புத்தகத்தைப் போல மாறுதலே இல்லாதது என்று வைத்துக் கொள்ள வேண்டியதுதான். நானும், சகுந்தலையும் இந்த விதத்தில் பாக்கியசாலிகள். ஏனென்றால் எல்லாவிதமான துர்ப்பாக்கியங்களையும், துரதிர்ஷ்டங்களையும் மீறித் தலையை நீட்டி 'இன்னும் உண்டா?' என்று நாங்கள் காத்திருந்ததுண்டு. இப்படிக் காத்திருப்பதில் ஒரு துக்கமயமான சந்தோஷமும் இருக்கிறது.

இப்படியே மேலும் சில ஆண்டுகள் மனம் ஒரு திசையிலும், உடம்பு ஒரு திசையிலுமாக நான் சுற்றினேன். எப்போதோ 'இந்தியன் மெடிகல் ஜர்னல்' இதழில் சகுந்தலையின் கட்டுரை ஒன்று படித்தேன். "ஏமாற்றங்களும் நோய்களும்" என்று ('டிஸ் அப்பாயின்ட்மெண்ட்ஸ் அண்டு பிஸிகல் ரீயாக்ஷன்ஸ்') அந்தக் கட்டுரைக்குப் பெயர்; மன அவஸ்தைகளுக்கும் சரீர ரோகம் ஏற்படுவதற்குமுள்ள தொடர்புகளை அவள் அந்தக் கட்டுரையில் ஆராய்ந்திருந்தாள். கட்டுரைக்குக் கீழே அவள் புகைப்படமும், சகுந்தலா — எம். பி. பி. எஸ். என்ற பெயரும் காணப்பட்டன. இந்தியன் மெடிகல் ஜர்னலின் அந்தப் பகுதியை மட்டும் பத்திரமாகக் கத்திரித்து வைத்துக் கொண்டேன் நான். அவளும் அவள் தந்தையும் இன்னும் கோடைக்கானலில்தான் இருக்கிறார்களா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். 'இந்தியன் மெடிகல் ஜர்னலு'க்குக் கடிதம் எழுதிக் கேட்கலாமா என்று நான் முதலில் தோன்றியது. அப்புறம் அதைவிடச் சுலபமான வழி ஒன்று தோன்றியது. எங்கள் கம்பெனியின் சார்பில் என்னைப் போலவே தெற்கு ஜில்லாக்களின் பிரதிநிதியாயிருப்பவரை விசாரித்துத் தெரிந்து கொண்டால் போதும் என்று அவரை அணுகினேன்.

"டாக்டர் சந்திரசேகரனைப் பற்றியா கேட்கிறீர்கள்? அவர் அமர பதவி அடைந்து நீண்ட காலமாகி விட்டது ஐயா! அவர் இருந்த காலத்திலும் தன்வந்திரி மெடிகல் பிராடக்ட்ஸ்க்கு அவரால் ஒரு பயனும் இருந்ததில்லை. இறந்தபின்னும் கிடையாது.

அவர் இருக்கும்போதே கடைசி கடைசியாகக் கஷ்ட ஜீவனம்தான் நடத்தினார். வருமானம் குறைவு. ஏதோ ஒரு வைத்தியக் காரணமான நோக்கத்தில் கோடைக் கானலைத் தேர்ந்தெடுத்து ஓய்வுக் காலத்தைக் கழிக்க எண்ணினார். தொழில் ஓடவில்லை. கோடைக்கானலின் ஆட்டபாட்டமெல்லாம் வருஷத்துக்கு நாலு மாதம் தான். பிள்ளை ராக்ஸ் ரோடில் 'பேஷன்ட்ஸ்' தேடி வருகிறதற்குக் கஷ்டமாயிருக்கிறது என்று அந்தப் பங்களாவை விற்று விட்டு மக்கள் நெருக்கமாக வசிக்கும் ஆனந்தகிரிப் பகுதியில் குடியேறினார். அங்கு ஏற்கனவே நாலு டாக்டர்கள். இவரை யார் கவனிக்கிறார்கள்! மனிதர் போய்ச் சேர்ந்து விட்டார். அவருடைய பெண் இருக்கிறாள். அவளுக்கும் அவ்வளவு பிரமாதமான வருமானம் என்று சொல்ல முடியாது. அவளே ஆரோக்கியமாயில்லை. பார்ப்பதற்கு எலும்பும் தோலுமாயிருக்கிறாள். அவளுக்கே ஏதோ நோக்காடு போலிருக்கு. நான் இரண்டு முறை போயிருந்தேன். முதல் தடவை நான் போயிருந்த போது உங்களைப் பற்றிக்கூட விசாரித்தாள் அந்தப் பெண். வருகிற வாரம் மறுபடியும் தெற்கு ஜில்லாக்களுக்குப் போவேன். அநேகமாகக் கோடைக்கானலுக்குப் போகலாம்'' என்றார் அந்த நண்பர்.

''வேறு யாரையாவது பார்த்து விட்டு உளறுகிறீர்கள்! சகுந்தலையாவது எலும்பும் தோலுமாக இருப்பதாவது? காலம் தப்பாமல் பூக்கும் செழிப்பான பூஞ்செடியில் பூத்த முதல் புஷ்பத்தைப் போல அழகாயிருப்பாளே அவள்'' என்று அந்த நண்பரோடு முரண்பட்டு மறுத்தேன் நான்.

''நன்றாயிருக்கிற பெண்ணை எலும்பும் தோலுமாயிருக்கிறாள் என்று பொய் சொல்லி எனக்கு என்ன சார் ஆகவேண்டும்?'' என்று நண்பர் என்னைக் கோபித்துக் கொண்டார். எங்கோ டாக்டராக இருக்கும் யாரோ ஒரு திருமணமாகாத பெண்ணைப் பற்றி இதற்கு மேல் ஏதாவது மனிதரிடம் விசாரிப்பது அநாகரிகம் என்று நானும் மேலே அதிகம் விவாதம் செய்யாமல் அந்தப் பேச்சை அப்படியே விட்டு விட்டேன்.

இதற்கு அப்புறம் பல முறை 'இந்தியன் மெடிகல் ஜர்னலில்' இரண்டு மூன்று மாதத்துக்கு ஒரு முறை காச நோயைப் பற்றியும், க்ஷயரோகத்தைப் பற்றியும் சகுந்தலை எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை நான் தொடர்ந்து படித்து வந்தேன். 'எத்தனையோ ஆரோக்கியமான விஷயங்கள் இருக்கும் போது இவள் கட்டுரை எழுதுவதற்கென்றே காசமும், க்ஷயமும்தான் வாய்க்க வேண்டுமா?' என்று அவற்றைப் படிக்கும் போது நினைப்பேன் நான். ஆனால் இதில் வேடிக்கை என்னவென்றால் நான் அங்கங்கே அவ்வப்போது சந்திக்கிற டாக்டர்கள் பலர் சகுந்தலையின் இந்தக் கட்டுரைகளில் மிக அபூர்வமான ஆராய்ச்சி உண்மைகள் எல்லாம் அடங்கியிருப்பதாக என்னிடம் புகழ்ந்து சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவளுக்கும், எனக்கும், எப்படிப் பழக்கம் என்று அந்த டாக்டர்களிடம் எல்லாம் சொல்லிக் கொள்ள முடியாவிட்டாலும், அவளுடைய புகழைக் கேட்கும்போது எனக்குப் பெருமையாக இருக்கும். இப்படி அவளுடைய புகழைக் கேட்கும் போது எனக்குச் சுறுசுறுப்பு வரக் காரணம் என்ன என்று என்னாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை. 'இப்படிப் பல டாக்டர்கள் உன்னைப் புகழ்வதைக் கேட்டு எனக்கு மிகவும் பெருமையாயிருக்கிறது' என்று அவளுக்கு ஒரு கடிதம் எழுதிப் போட நினைத்திருந்தும் செய்யாமலே தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தேன். நல்ல ஞாபகத்தின் ஒரு நுனியைப் போல் சகுந்தலை என் நினைவில் இருந்தாள். ஆனால் அவளை நான் நேரில் பார்த்து ஆண்டுகள் பல கழிந்து விட்டன. இருந்தும் நினைவில் இடைவிடாமல் அவளைப் பார்த்துக் கொண்டேதான் இருந்தேன். நானும், அவளும் மனம் ஒரு திசையிலும், உடம்பு ஒரு திசையிலுமாகப் பிரிந்து வாழ்ந்தாலும் எங்கோ, எதிலோ, ஒன்றாயிருந்தோம். ஏதோ எங்களைப் பிணைத்திருந்தது. அதே போல ஏதோ எங்களை இப்போது பிரித்துக் கொண்டிருந்தது.

* * *

இல்லையானால் இத்தனை ஆண்டுகளுக்குப் பின் அவளுடைய தந்தையைப் பார்த்து விட்டு இப்படி ஒவ்வொரு விநாடியையும் ஒரு மணி நேரமாக எண்ணிக் கொண்டு கோடைக் கானலுக்குப் பிரயாணம் செய்வேனா நான்? அவளும்தான் எனக்குத் தந்தி கொடுப்பாளேன்?

அதோ பெருமாள் மலையின் மாடு கழுத்தை நீட்டிக் கொண்டிருப்பது போன்ற நீலச் சிகரமும் என் கண் பார்வைக்குத் தெரிந்து விட்டது. கோடைக்கானலுக்கு மிகவும் பக்கத்தில் வந்தாயிற்று. மூஞ்சிக்கல் அருகே ஒரு தரம் திரும்பிக் கார் ஆனந்தகிரியின் சிறிய தெருக்களில் நுழைய வேண்டியதுதான். நுழைந்தும் ஆயிற்று.

வீட்டு வாசலில் போர்டு கூட இல்லை. யாரோ ஒரு வயதான கிழவி வந்து கதவைத் திறந்தாள்.

''டாக்டர் சகுந்தலையின்வீடு இதுதானே?''

'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்து விட்டு அவள் என்னை உள்ளே அழைத்துச் சென்றாள். குளிருக்குப் பயந்து ஜன்னல்கள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்த ஓர் இருண்ட அறையின் கட்டிலில் சகுந்தலை படுத்திருந்தாள். முதல் முதலாக நான் பார்த்த அந்த ரோஜாப்பூ முகமும் பேசுகிறாற் போன்ற கண்களும் எப்போது இப்படி வாடின? எவ்வளவு காலமாக இப்படி வாடின? எனக்கு ஒன்றும் புரியவில்லை. என் மனம் கண்களை முந்திக் கொண்டு கலங்கி அழுதது.

''வாருங்கள்! இப்போதாவது இந்த அபலையைத் தேடிக் கொண்டு வர மனம் இரங்கிற்று உங்களுக்கு?'' என்று வெறும் குழியிலிருந்து பேசுகிறாற் போன்ற குரலில் அவள் கேட்ட போது நான் திகைத்துப் போனேன். என் கண்களில் இரத்தம் கசியாத குறையாக நீர் கலங்கிற்று.

''இதெல்லாம் என்ன கோலம் சகுந்தலை? எவ்வளவு நாட்களாக இப்படி....?''

''நீங்கள் என் முதல் கடிதத்தைத் திருப்பி அனுப்பிய நாளிலிருந்து இப்படித்தான். உங்களுக்காக வாடி வாடித்தான் கடைசியில் இப்படி ஆனேன். காச நோயைப் பற்றி















இது ஆயுள் இன்சூரன்சால்தான் முடியும். ராமுவின் தந்தை இறந்து வருடங்கள் ஆறு ஆகின்றன. தன் மகனுக்குச் சொத்து எதையும் விட்டுச் செல்லவில்லை அவர். என்றாலும் அவனுடைய சிறந்த தொழில் நுணுக்கக் கல்வி தங்கு தடையின்றி நிறைவேறும் ஆயுள் இன்சூரன்ஸ் உதவியால்.



# ஆயுள் இன்சூரன்சு போல

ஆதரவு தருவது எதுவுமே இல்லை

ASP/LIC/85 TAM

இதுவரை மெடிகல் ஜர்னலில் எழுதிய கட்டுரைகளை உங்கள் நண்பரிடம் புகழ்ந்து பேசினீர்களாம். என்னுடைய இந்த உடம்பு கடந்த பல வருடங்களாக அதற்கு ஆராய்ச்சிக்களமாய் நான்.''

''அது சரி; ஏதோ கடிதத்தை நான் திருப்பியனுப்பியதாகச் சொல்கிறீரே? நான் அப்படி எதும் செய்யவில்லையே சகுந்தலை?''

''ஏன் பொய் சொல்லுகிறீர்கள்? பனி புலராத விடியற்காலை வேளையில் அப்பா உலாவப் போய் விட்டுத் திரும்புவதற்குள் அவசர அவசரமாக எழுதி நானே தபாலாபீசுக்கு ஓடிப் போய்த் தபாலில் சேர்த்து விட்டு வந்த அத்தனை கடிதங்கள் எனக்கே திரும்பி வந்திருக்கின்றனவே?'' என்று சொல்லிக் கொண்டே தலையணைக்கடியிலிருந்து ஒரு கொத்துக் கடிதங்களை அள்ளி அவள் என் முன் எறிந்தாள். நான் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்தேன். அத்தனை கடிதங்களும் என் பெயரிட்டு என்னுடைய கீழ்வேலூர் முகவரிக்குப் போய்த் திரும்பி வந்திருந்தன. அந்தக் கடிதங்கள் எல்லாம் என் தந்தை இருந்த காலத்தில் கீழ்வேலூருக்குத் தபாலில் போய்ச் சேர்ந்து அவராலேயே திருப்பி அனுப்பப்பட்டவை, என்று நான் விளங்கிக் கொள்ள முடிந்தது.

''சகுந்தலை! என் கம்பெனி முகவரிக்கு இவற்றை எழுதியிருக்கக் கூடாதா நீ? எத்தனை அழகான கடிதங்கள். உன் மனத்தின் தாபங்களை யெல்லாம் இவற்றில் கொட்டி யிருக்கிறாயே? இப்படிக் கடிதங்கள் உன்னிடமிருந்து எனக்குக் கிடைத்திருந்தால் நான் எவ்வளவு திமிர்ந்து நடந்திருப்பேன்? எத்தனை பதில் கடிதங்கள் வரைந்திருப்பேன்? எல்லாம் பாழாகி விட்டதே?''

''அதனாலும் நான் சாவதற்கு முன் இவைகளை உங்களிடம் சேர்த்து விடுவேன் என்ற நம்பிக்கை எனக்கு நிச்சயமாய் உண்டு....''

''நான் துர்ப்பாக்கியவான்.''

''நானும் தான்.''

''ஏன் அப்படிச் சொல்கிறாய்? பனி படர்ந்த காலை வேளைகளில் எனக்கு எழுதிய கடிதத்தோடு மான்குட்டி போல் நீ துள்ளித் துள்ளி நடந்து இந்த மலைச் சாலைகளின் வழியே தபாலாபீசுக்குப் போன காட்சியை இன்று கற்பனை செய்யும் போதும் என் கண்களில் நீர் பெருகுகிறது. நிச்சயமாக நான் தான் துர்ப்பாக்கியசாலி. நீ இல்லை.''

''என் முதல் நோய் ஏமாற்றம் தான். அப்புறம்தான் காசம். பிரியமுள்ளவர்களிடம் ஏமாறுவதும் சாவும் ஒன்றுதான்.''

இதைச் சொல்லிக் கொண்டே அடிவயிற்றைப் பிசைந்து கொண்டு வருகிற இருமலோடு அவள் எழ முயன்ற போது பக்கத்து ஸ்டூலில் இருந்த பேஸினை எடுத்து வாயருகே நீட்டினேன்.

கோழையோடு இரண்டு துளி இரத்தமும் வந்து விழுந்தது.

''புஷ்பத்தைப் போலவே மலர்ந்து விளங்கிக் கொண்டிருந்தவள் இப்படி ஆகிவிட்டாயே! நான் பாவி. ரொம்பப் பெரிய பாவி'' என்று கதறினேன்.

''இன்று நேற்று இப்படி ஆகவில்லை. உங்களால் அலட்சியப்படுத்தப்பட்டதாக நினைத்த நாளிலிருந்துதான் இப்படி ஆனேன். இப்படி ஒவ்வொரு துளி இரத்தமாக உங்களை நினைத்துத் துப்பிக் கொண்டிருக்கிறேன்.....'

''நிஜமாகவே இந்தக் கடிதங்கள் என் தந்தையால்தான் திருப்பி அனுப்பப்பட்டிருக்கின்றன. எனக்கு ஒரு பாவமும் தெரியாது'' என்றேன். அவளும் அதை மறுக்கவில்லை.

''நான் பெண்! ஆயிரம் பாதுகாப்பும் போதாத மனதுதான். நீங்களே இவற்றைத் திருப்பி அனுப்பியதாக வைத்துக் கொண்டு நான் இப்படி வாடிப் போனேன்.''

''நீ இப்படி வாடியிருக்கக் கூடாது சகுந்தலை...!''

''மிகவும் காலம் கடந்து வந்து இந்த வார்த்தைகளைச் சொல்லுகிறீர்கள். பத்து வருடங்களுக்குமுன் இந்த வார்த்தைகளைச் சொல்லியிருந்தால் நான் இப்படி ஆகியிருக்க மாட்டேன்....''

நான் அவளுடைய இந்தச் சொற்களுக்குப் பதில் கூற முடியாமல் பெரிதாக அழுதேன்.

''அழாதீர்கள்! என்னை மறக்கப் பழகிக் கொள்ளுங்கள். நான்தான் உங்களை நினைத்து வாடிப் போனாயிற்று. நீங்கள் அன்று இருந்தாற்போலவே இருக்கிறீர்கள். உலகத்தில் இன்னும் வாழலாம் நீங்கள்.''

இந்த வார்த்தைகள் என் நெஞ்சில் அறைந்தன. 'நமக்காகச் செத்துக் கொண்டிருக்கிறவளைப் புரிந்து கொள்ளாமல் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோமே; அது எத்தனை வெட்கக்கேடு' என்று எண்ணியபோது அந்த விநாடியே எனக்கும் பெரிய நோய் ஏதாவது வந்து நானும் எலும்புந் தோலுமாகப் போய் விடமாட்டோமா என்று தவித்தேன் நான்.

''மறுபடியும் சொல்கிறேன். அழாதீர்கள். இனிமேல் என்னைச் சொஸ்தப்படுத்துகிற மருந்து 'தன்வந்திரி மெடிகல் ப்ராடக்ட்ஸி'ல் மட்டுமில்லை. எங்குமே கிடையாது. சாவதற்கு முன்பாவது என்னை உங்களுக்குப் புரிய வைக்க முடிந்ததே; அது என் பாக்கியம். நேற்று வரைதான் நான் நோயாளி. இன்று நான் பூர்ண சுகம் அடைந்து விட்டேன். நான் உங்கள் காலடியில் பூவாக உதிர்கிறேன்'' என்று பேசிக் கொண்டே வந்தவளை மறுபடியும் இருமல் பிசைந்து கொண்டு வந்தது' என்ன பயங்கரமான இருமல் ஒன்று — பெரிதாக மற்றொன்று.....

மூன்றாவது இருமல் வரவில்லை. சகுந்தலையின் வாய் இதழ்கள் இரத்தம் போல் சிவந்திருந்ததாக நான் வியந்த காலம் போய் இன்று இப்போது அங்கே இரத்தமே பெருகியிருந்தது.

ஆம்! அந்தப் பூ வாடிப் போய் என் காலடியில் உதிர்ந்து விட்டது. என்னுடைய ஞாபகங்களில் நித்தியமாக ஒரு வைரத்துக்கு யாருடைய பரிசுத்தமான இரத்தமோ கறையாகப் படிந்துவிட்டது. ஆழமாக நினைப் படிக ஒரு நினைவுக்குப் பின் மறந்தாள் என்று சொல்வேன். சகுந்தலை என் மனதில் ஒரு ஞாபகமாகவும், என்னுடைய ஞாபகத்தினுள்ளே ஒரு மனதாகவும் இருந்தாள்.

அப்புறம்?

அப்புறம் என்ன?.....

அப்புறந்தான் அவளும் நானும் இப்படி ஒரு கதையாகி விட்டோமே '

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# இருமல் மற்றும் ஜலதோஷத்திலிருந்து பூர்ண நிவாரணம் பெற





# ஸிரோலின் 'ரோஷ்' அருந்துங்கள்




இருமலுக்கும் ஜலதோஷத் தீர்க்கும் ஏற்ற இந்தியாவின் குடும்ப மருந்து.

இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டை செய்யாதீர்கள்—ஸிரோலின் அருந்தி அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறுங்கள். ஸிரோலின் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல் இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது, கபம் மற்றும் சளியை போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது. அபாயமற்ற, நிவாரணமளிக்கும் தன்மையையும் மற்றும் இனிய ருசியையும் ஸிரோலின் பெற்றிருப்பதால் குடும்பத்திலுள்ள அனைவரும் அதைப்பெரிதும் விரும்புகிறார்கள். ஸிரோலின் என்றால் குழந்தைகளுக்கு ஒரே குஷி!

உங்கள் வீட்டில் எப்பொழுதும் **ஸிரோலின்** வைத்திருங்கள்

'ரோஷ்' தயாரிப்பு

சோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
வால்டாஸ் லிமிடெட்

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon